கழக வெளியீடு: ௮௯௪

# நீதிக் கதைக்கொத்து

[நான்காம் புத்தகம்]



ஆசிரியர்:

திரு. க. இனியன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

வாழ்வியல் உண்மைகளை வடித்தெடுத்து ஒருங்கே வழங்கும் வள்ளுவர் குறளும், தெள்ளிய நாலடியாரும், வழக்கிலுள்ள பழமொழிகளும், சங்கப் பாக்கள் சிலவும் நம்மனோர்க்கு நல்ல நீதிகளை உணர்த்தும் பான்மை பெற்றனவாகும். அத்தகு நீதிகளை அடிப்படையாகக் கொண்டு சுவைமிக்க கதைகள் எழுதப்படின், அவை இளமாணவர்க்கேயன்றிப் பலர்க்கும் நன்னெறி காட்டி நலம் விளைக்கும் கலங்கரை விளக்கேபோல் அமையுமென்பது எம் துணிபு.

இவ் வுட்கருத்துடன் கழகவழியாகப் பல நீதிக்கதை நூல்கள் முன்னரே வெளியிடப்பட்டுள்ளன. அவற்றுள் 'திருக்குறள் விளக்கக் கதைகள்' என்னும் நூலில் இருபகுதிகளையும்[1] 'நாலடியார் விளக்கக் கதைகள்' என்னும் நூலையும் சேர்த்து ஒரே கட்டடம் செய்து நூல்நிலையங்கட்கும் பரிசுகட்கும் ஏற்றவாறு அழகியமுறையில், நீதிக்கதைக் கொத்து என்னும் பெயரால் முதற் புத்தகமாகவும், 'பழமொழி விளக்கக் கதைகள்' புறநானூற்றுக் கதைகள்' ஆகிய இரு நூல்களையும் இரண்டாம் புத்தகமாகவும், முன்னரே வெளியிட்டோம்.

அண்மையில் 'ஆத்திசூடி விளக்கக் கதைகள்' என்னும் நூலில் இருபகுதிகளையும் 'உலகநீதி விளக்கக் கதைகள்' 'வெற்றிவேற்கை விளக்கக் கதைகள்' ஆகிய இருநூல்களையும் சேர்த்து நீதிக் கதைக்கொத்து மூன்றும் புத்தகமாக வெளியிட்டோம். இப்போது 'கொன்றைவேந்தன் விளக்கக் கதைகள்,' 'மூதுரை விளக்கக் கதைகள்,' 'நல்வழி விளக்கக் கதைகள்,' 'நன்னெறி விளக்கக் கதைகள்,' ஆகிய நான்கு நூல்களையும் சேர்த்து நான்காம் புத்தகமாக வெளியிடுகின்றோம்.

நூல்நிலையக் காப்பாளரும், ஆசிரியப் பெருமக்களும், பிறரும் இத்தகைய நீதிநூல்களை வாங்கியும், வாங்குவித்தும் பயனெய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

பக்கம்

கழக வெளியீடு: அசஉ

# கொன்றைவேந்தன் விளக்கக் கதைகள்



ஆசிரியர்:

திரு. க. இனியன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
திருநெல்வேலி :: சென்னை-1

First Edition. Aug., 1956.

# KONRAIVENTHAN VILAKKAK KATHAIGAL



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office:*

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1—C. 1200.

# பதிப்புரை



செந்தமிழ் மொழிக்கண் திருக்குறள் பொதுநூல். இது நம் நாட்டகத்தும், வீட்டகத்தும் களிநடம்புரிதல் வேண்டும். அன்றே நம் தமிழகம் நன்றே மிளிரும் நாளாகும்.

இதன் சாயல்களே பிற்காலத்துத் தோன்றிய அற நூல்கள். அவற்றுள் ஒன்றே கொன்றைவேந்தன் என்னும் அறநூல். இஃது எளிய இனிய நடையில் ஔவையாரால் இயற்றப்பெற்றது.

இவ் அறநூல்களை இளஞ்சிறார்க்குக் கதைகள் வாயிலாக விளக்குதல் சிறந்தது, நலந்தருவது எனக்கருதி திருக்குறள், நாலடியார், ஆத்திசூடி, உலகநீதி, வெற்றிவேற்கை போன்ற அறநூல்களுக்குத் திரு. க. இனியன் அவர்களைக் கொண்டு விளக்கக் கதைநூல்கள் எழுதுவித்து வெளியிட்டுள்ளோம்.

இது அவற்றுள் கொன்றைவேந்தன் விளக்கக் கதைகளாகும். இதனையும், ஏனைய விளக்கக் கதைநூல்களையும் பந்தெறிந்தாடுஞ் சிறார் கைகளில் முந்திருப்பச் செய்து கற்கச் செய்வது, நம் தமிழகப் பெருமக்கள் கடன். பிற நூல்களைப்போல இந்நூலையும் வாங்கியும் வாங்குவித்தும் எம்மை ஊக்குவிப்பார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# கொன்றைவேந்தன் விளக்கக் கதைகள்



## க வழிபடு கடவுள்

முன்காலத்திலே காட்டில் ஒரு முனிவர் தவஞ் செய்து கொண்டிருந்தார். ஒருநாள் ஒரு பறவை மரத்தின்மேல் அமர்ந்து முனிவர்மீது எச்சம் இட்டது. முனிவர் சினந்து அப் பறவையை விழித்துப் பார்த்தார். அவ்வளவில் அப்பறவை எரிந்து போய்விட்டது. அதனால் முனிவர் தம்மைப் பெரிய ஆற்றல் படைத்தவராக எண்ணிக்கொண்டார்.

அன்று மாலை அவர் ஒரு வீட்டிற்கு ஐயமேற்கச் சென்றார். வீட்டுக்குரிய பெண் கணவனுக்குப் பணி புரிந்து கொண்டிருந்தாள். அதனால் சிறிதுபோது தாமதித்து உணவு கொண்டுவந்தாள். முனிவர் அப் பெண்ணைப் பார்த்து, 'என்னை இவ்வளவு நேரங் காக்குமாறு செய்தா யல்லவா?' என்று கூறிப் பறவையை விழித்துப் பார்த்ததுபோல அம் மாதை விழித்துப் பார்த்தார்.

அம் மாது எரிந்து போகவில்லை; அவள் முனிவரைப் பார்த்து, 'நான் பறவை யல்ல; உமக்கு மெய் யறிவு சிறிதும் இன்னும் உண்டாகவில்லை. மிதிலையில் ஒரு மெய்யறிவாளர் இருக்கிறார். அவரிடஞ் சென்று

மெய்யறிவு உண்டாகுமாறு அறிவுரை பெற்றுக் கொள்ளும்,' என்று கூறினள்.

முனிவர் அப்பெண்மணி கூறியவாறே மிதிலைக்குச் சென்றார். அங்கு மெய்யறிவாளர் யார் என்பதைப் பலரிடமுங்கேட்டுக்கொண்டு அவர் இருக்குமிடத்தை யடைந்தார்.

அவரோ ஊன்கடை யொன்றில் அமர்ந்து ஆட்டின் ஊனை அறுத்து வாணிகஞ் செய்துகொண்டிருந்தார். முனிவர் அதைக் கண்டு வெறுப்படைந்தார். அவரிடஞ் செல்வதற்கு நாணினர். தெருவிலேயே சிறிதுபோது நின்றுகொண்டிருந்தார்.

ஊன் வாணிகம் செய்துகொண்டிருந்த மெய்யறிவாளர் முனிவர் நின்றுகொண்டிருந்த இடத்திற்கு வந்தார். 'உம்மை ஒரு பெண்மணி அனுப்பிவைத்தாளா?'' என்று கேட்டார். சிறிதுநேரங் கழித்து அவரையும் அழைத்துக்கொண்டு தம்முடைய இல்லத்தை யடைந்தார். முனிவருக்கு மெய்ப்பொருளை உரைத்தார். முனிவர், அந்த மெய்யறிவாளரைப் பார்த்து, 'நீர் எவ்வாறு மெய்யறிவையடைந்தீர்?' என்று உசாவினர்.

மெய்யறிவாளர், அந்த முனிவரைப் பார்த்து, 'நான் என்னுடைய வழிபடு கடவுளாலேயே மெய்யறிவையடைந்தேன். உம்மை என்னிடம் அனுப்பியமாது அவளுடைய வழிபடு கடவுளானால் நீர் பறவையை எரித்த செய்தியை அறிந்தாள். அவளுடைய வழிபடு கடவுள் அவளுடைய கணவனேயாவன். என்னுடைய வழிபடு கடவுளை உமக்கு இப்பொழுது நேருக்கு நேராகவே காட்டுகிறேன் பாரும்' என்று

கூறி முனிவரை உள்ளே அழைத்துக்கொண்டு சென்றார்.

அகவை முதிர்ந்தவர்களாகக் கட்டிலில் படுத்துக் கொண்டிருந்த தம்முடைய தாய்தந்தையர்களை முனி வருக்குக் காட்டினார். 'இந்த இரண்டு தெய்வங்களையும் வழிபாடு செய்வதனால்தான் நான் மெய்யறிவை அடைந்தேன்' என்று கூறினார். முனிவர் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதை நன்கு அறிந்து கொண்டார். தாமும் இல்லத்திற்குச் சென்று தம் தாய்தந்தையர்களைப் போற்றலானார்.

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்"

(இதன்பொருள்) அன்னையும் - தாயும், பிதாவும் - தந்தையும், முன் - முன்னே, அறி-பார்க்கப்பெறுகிற, தெய்வம் - தெய்வங்க ளாவர்.

## உ. இரு நண்பர்கள்

ஒரு காலத்தில இரண்டு நண்பர்கள் வெளிப்பயா ணம் சென்றார்கள். அவர்களில் ஒருவன் பெயர் சடைமுத்து; மற்றவன் பெயர் மன்றவாணன். சடைமுத்து கடவுள் ஒருவர் உளர் என்பதைச் சிறிதும் ஒப்புக்கொள்ளமாட்டான். மன்றவாணனோ கடவுளிடத்திலே அன்பு நிறையப் பெற்றவன். இருவரும் இருவகையான கொள்கையுடையவர்களாக இருந்த போதிலும் நண்பர்களாக இருந்தார்கள்.

அவர்கள் சென்றுகொண்டிருந்த வழியிலே ஒரு திருக்கோயில் எதிர்ப்பட்டது. மன்றவாணன் தன் னுடைய வழக்கப்படி அக்கோயிலில் எழுந்தருளிய

இறைவனை வணங்கச் சென்றான். வணங்கிவிட்டு வலம் வந்தான். வலம்வரும்போது வழியிலே ஒரு கூரிய முள் கிடந்தது. மன்றவாணன் அதனைப் பாராமல் அதன்மீது அடியைவைத்துவிட்டான். அது பெரிய முள்ளாகையால் காலில் ஆழமாகப் பாய்ந்து முறிந்துவிட்டது. அதனால் ஏற்பட்ட துன்பத்தைப் பொறுக்க முடியாமல் மன்றவாணன் நொண்டிக்கொண்டே தன்னுடைய நண்பன் இருக்குமிடத்திற்குச் சென்று நிகழ்ந்ததை உரைத்தான்.

சுடலைமுத்து வழியில் ஓரிடத்தில் அமர்ந்து மணலைக் கிளறிக்கொண்டிருந்தான். அப்பொழுது பொற்காசு ஒன்று சுடலைமுத்துவுக்கு அகப்பட்டது. அதனால் அவன் மகிழ்ச்சியுடன் இருந்தான். அவன் துன்பப்பட்டுக்கொண்டுவந்த தன்னுடைய நண்பனைப் பார்த்து ஏளனம் செய்தான். 'நீ கடவுளைப் போற்றச் சென்று துன்பத்தை அடைந்தாய். நானோ ஓரிடத்தில் அமர்ந்திருந்து பொருள் வருவாயை அடைந்தேன். இதிலிருந்தாயினும் கடவுள் ஒருவர் இல்லையென்பதை நன்றாக உணர்ந்து கொண்டாயா?'' என்றான். மன்றவாணனோ யாதும் பதிலுரைக்கவில்லை.

நண்பர்கள் இருவரும் சிறிது தொலைசென்றனர். ஒரு பெரியவர் எதிர்ப்பட்டார். இருவரும் தத்தமக்கு நிகழ்ந்தவைகளை அவரிடம் கூறினர். சுடலைமுத்து தன்னுடைய கொள்கையைப் பெரியவருக்குக் கூறினான். பெரியவர் அறிவுக்கண்கொண்டு பார்த்தார்.

அவர் சுடலை முத்துவைப் பார்த்து, 'உம்முடைய பழவினை மிகவும் உயர்ந்தது; அதன் பலனால்

உனக்கு இப்பொழுது ஒருபெரும் புதையல் கிடைத்திருக்கவேண்டும். ஆனால் உனது கடவுள் வெறுப்புக் காரணத்தினால் அதுகெட்டு ஒரு பொற்காசோடு போய்விட்டது,' என்றார். பிறகு மன்றவாணனைப் பார்த்து, 'இப்பொழுது பழவினைப் பலனால் உனது உயிரே ஒழிந்திருக்கவேண்டும். ஆனால் உனது கடவுளன்பின் காரணத்தினால் அவ்வாறு நேராமல் காலில் முட்குத்தியதோடு போய்விட்டது,' என்று இயம்பினார்.

சடலமுத்து அன்று முதல் மனந்திருந்திவிட்டான். ஆலயந்தொழுவது சாலவும் நன்று என உணர்ந்தான். தன நண்பன் மன்றவாணனைப்போல ஆலயந்தொழும் நற்செயலை மேற்கொண்டு ஒழுகினான்.

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று"

(இ - ள்.) ஆலயம்-கோயிலுக்குச் சென்று, தொழுவது-கடவுளை வணங்குவது, சாலவும் நன்று-மிகவும் நல்லது.

## ௩. இல்லறம் புகுந்த துறவி

ஓர் ஊரில் ஒரு திருமடம் இருந்தது. அம்மடத்தில் பல துறவிகள் இருந்தனர். அவர்களுள் ஒருவர் மிக இளைஞர். அவருக்கு அகவை இருபத்திரண்டு தான் ஆகியது. அவர் தாடியும் சடைமுடியும் வளர்த்தார். கழுத்திலே சிவக்கண்மணி மாலை (உருத்திராக்க மாலை) அணிந்து கொண்டார். இடையிலே கண்டவர்களுடைய கண்ணைப் பறிக்கும்படியான செந்நிறம் பொருந்திய காவிவேட்டியைக் கட்டிக்கொண்டார்.

அவருடைய தோற்றம் முற்றத்துறந்த முனிவரைப் போலக் காணப்பட்டது. அவருடைய பெயர் உண்மை யறிவா நந்தர்.

உண்மையறிவா நந்தர் சில சமயங்களிலே கையில் அறிவு நூல்களையேந்திப் படித்துக்கொண் டிருப்பார். சில சமயங்களிலே கண்ணைமூடி உள் ளத்தை மெய்ப்பொருளின்பாற் படுத்தியவர்போல அமர்ந்திருப்பார். அவர் அவ்வாறு அமர்ந்திருந் தாலும் அவருடைய உள்ளம் ஒழுங்காக இருப்ப தில்லை. பட்டிமாடுபோல் பல வகையான எண்ணங் களிலே திரிந்துகொண்டிருந்தது. அவருடைய ஒழுக் கமும் நல்லொழுக்கமாக இல்லை. அவருடைய கோலம் பொய்க்கோலமே என்று பலரும் தெரிந்துகொண்ட னர். பலவாறு உண்மையறிவா நந்தரை இகழ்ந்து தூற்றவும் தொடங்கினர்கள்.

நாளடைவில் உண்மையறிவா நந்தர் ஒருபோலித் துறவி என்று எங்கும் பெயராகி விட்டது. உண்மை யறிவா நந்தர் உண்மையாகவே நல்லொழுக்கத்துடன் இருப்பதற்குப் பெரிதும் முயன்று பார்த்தார். மனம் ஒரு சிறிதும் கட்டுப்படவேயில்லை. இகழ்ச்சியோ நாளும் நாளும் மிகுதிப்பட்டுக்கொண்டே வந்தது.

உண்மையறிவா நந்தர் எண்ணமிட்டார்: பெரி யோர்கள் 'இல்லறம் அல்லது நல்லறம் அன்று' என்று கூறியிருக்கிறார்கள். நாம் உண்மையான துறவியாக இருக்கமுடியாதவரையில் குடும்பியாக மாறி விடுவதுதான் தகுந்தது. அப்போது நம்மைப் பலரும் இகழ்ந்துரைக்கும் இகழ்ச்சியானது இல்லாமற் போகும். நம்முடைய இளம்பருவத்திற்கு இத்தகைய

துறவுக்கோலம் ஏற்றதன்று என்று முடிவுசெய் தார். தாடி சடைமுடி ஆகியவைகளை மாற்றினார். காவியுடையை அவிழ்த்தெறிந்துவிட்டு வெள்ளிய ஆடையை அணிந்துகொண்டார். தாம்பிறந்த ஊருக்குச் சென்று ஒருமங்கையைத் திருமணஞ்செய்து கொண்டார்.

பலரும் உண்மையறிவா நந்தர் இல்லறம் புக்கதனைக் கண்டு மகிழ்ந்தனர். உண்மையறிவா நந்தர் இல்லற வொழுக்க முறைகளை உண்மையாகக் கடைப்பிடித்துச் சிறந்த புகழுடன் விளங்கினார். துறவற ஒழுக்கம் கடுமையானதாகையால் எல்லோரும் அதனை மேற்கொள்ளுதல் தகுதியாக மாட்டாது.

"இல்லறம் அல்லது நல்லறம் அன்று"

(இ - ள்.) இல்லறம் அல்லது-மனைவியோடு கூடிச் செய்யும் இல்லறம் அல்லாத பிறஅறமாகிய துறவறம், நல்அறம் அன்று-நல்ல அறமாக மாட்டாது.

## ௩. கள்ளர்கள் கொள்ளை

மட்டியூர் என்னும் ஊரிலே மாணிக்கசாமி என்னும் பெயருடைய ஒரு செல்வன் நாற்பது ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்தான். அவன் பல வழிகளாலும் பொருளைத் தேடினன். அவனிடம் ஏராளமான பொருள் குவிந்தது. மாணிக்கசாமி அந்தப் பொருள்களை நன்கு பயன்படுத்தவில்லை. எளியவர்களுக்கு ஒன்றுங்கொடான்; விருந்தினர்களுக்குக் கூட உணவிடான். விருந்தினர்களைக் கண்டால் ஏதேனும் சாக்குப்போக்குச் சொல்லி அனுப்பிவிடுவான்.

புலவர்கள் இவன் பெருஞ்செல்வனாக இருக்கிறானே ஏதேனும் உதவிசெய்வான் என்று சென்றால், 'சோம்பேறிகளாகத் திரியும் உங்களுக்கு ஏன்பொருள் கொடுக்கவேண்டும்' என்று வாய்க்கு வந்தபடி இகழ்ந்துரைப்பான். தானும் தக்கவாறு பொருளைச் செலவிட்டு உண்ணமாட்டான். உண்ண விரும்பும் மனைவிமக்களையும் உண்ணவிடமாட்டான் பொருள்களையெல்லாம் பெட்டிகளில் பூட்டிவைத்தான். தான் அப்பெட்டிகள்மீது தானே இராப் பகல் காவலாக இருந்துகொண்டிருந்தான்.

சாவு என்று ஒன்று இருக்கிறதென்பதையும் அது தனக்கும் உண்டாகும் என்பதையும் மாணிக்க சாமி அடியோடு மறந்துவிட்டான். அப் பொருளைக் கள்ளர்கள் வந்து கவர்ந்து கொண்டால் என்ன செய்வது என்னும் அச்சம் மாத்திரம் அவன் உள்ளத்தை உறுத்திக்கொண்டிருந்தது. அதனால் அவன் இராப்பகல் உறக்கங்கெட்டு வருந்திக்கொண்டிருந்தான்.

மாணிக்கசாமியிடம் பொருள் இருப்பது எல்லோருக்கும் தெரியும். ஒருநாள் இரவு தீவட்டிக்கொள்ளைக்காரர்கள் பலர் மாணிக்கசாமியின் வீட்டைச் சூழ்ந்துகொண்டனர். மாணிக்கசாமியைத் தடிகளால் நன்கு புடைத்தனர். முன்னரே உறக்கமில்லாமல் இளைத்திருந்த மாணிக்கசாமி குற்றுயிராகி விட்டான். மாணிக்கசாமியின் மனைவி மக்கள் கள்ளர்களின் அச்சத்தால் எப்பொழுதும் வீட்டிற் படுக்கும் வழக்கமில்லை. பக்கத்திலுள்ள வீடுகளில்தான் படுப்பார்கள்.

கள்ளர்கள் கொள்ளையிடுவதை ஊரார்கள் பார்த்தனர். கள்ளர்கள் மிகுதியாக இருந்தபடியாலும் அவர்களிடம் அஞ்சத்தக்க படைக்கலங்கள் இருந்தபடியாலும் தடுக்க முடியவில்லை. கள்ளர்கள் மாணிக்கசாமியின் பொருள்கள் அனைத்தையும் கொள்ளையடித்துச் சென்றனர். மாணிக்கசாமி, 'அந்தோ! நான் கூட்டிக்கூட்டிக் கொள்ளைகொடுக்கும் தேனீ ஆனேனே!' என்று புலம்பி நொந்து இறந்தான்.

"ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்"

(இ - ள்.) ஈயார் - பிறருக்குக் கொடாதவர்களுடைய, தேட்டை-பொருளை, தீயார் - கள்ளர் முதலிய தீயவர்கள், கொள்வர் - கைப்பற்றிக்கொள்வர்

## ௫. பலரையும் பகைத்த பச்சையப்பன்

ஓர் ஊரிலே பச்சையப்பன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுக்கு அகவை இருபத்தாறு ஆயிற்று. அவன் உடல் நன்கு கட்டமைந்து இருந்தது. தண்டால் எடுத்தல் முதலிய உடற்பயிற்சியால் உடலுக்கு மிகுந்த ஆற்றலைத் தேடியிருந்தான். அதனால் அவனுக்கு மிஞ்சிய ஆற்றல் அமைந்தவர்கள் அந்த ஊரிலேயே யாரும் இல்லை.

தான் மிகுந்த ஆற்றல் படைத்தவனாய் இருந்தபடியால் பச்சையப்பனுக்குச் செருக்கு வளர்ந்து கொண்டே இருந்தது. அவன் வீணாகவே பலரையும் பகைத்துப் பகைதேடிக்கொண்டான். மிகுந்த ஆற்றல் படைத்த தன்னை யாரும் ஒன்றும் செய்ய முடியாது என்பது அவனுடைய எண்ணம். ஊராரை

எல்லாம் அவன் ஒரு துரும்பாக மதித்துப்பேசினான். எல்லோரும் கையால் ஆகாதவர்கள் என்று இகழ்ந்துரைத்தான்.

பச்சையப்பனுடைய போக்கு எல்லோருக்கும் மிகுந்த வருத்தத்தை உண்டாக்கியது. பச்சையப்பன் வாய்ப்பேச்சளவில் நின்றுகொள்ளவில்லை. சிலர் மீது கைநீட்டவும் தொடங்கினான். நாளடைவில் பச்சையப்பனுடைய தொல்லை வளர்ந்து கொண்டு வந்தது. ஊரில் பச்சையப்பனுக்கு வேண்டியவர்கள் ஒருவருமே இல்லை. ஒருநாள் பலர் கூடிப் பேசினர். பச்சையப்பன் வலிய வம்புக்கு வரும்போது ஒன்று சேர்ந்து நன்கு புடைத்துவிடவேண்டும் என்றும் முடிவாகியது.

ஒருநாள் பச்சையப்பன் மற்றொருவனை இகழ்ந்து பேசினான். இகழ்ந்து பேசப்பெற்றவனும் எதிர்த்து இகழ்ந்து பேசினான். அவ்வளவில் பச்சையப்பனுக்கு மிகுந்த சினம் உண்டாயிற்று. 'பயலே என்னை நீ இகழ்ந்து பேசவும் துணிந்தாயா?' என்று கூறி எதிர்த்துப் பேசியவனைப் பிடித்து அடித்தான். முன் திட்டப்படிப் பலரும் ஒன்றுகூடினார்கள். பச்சையப்பனைப் பிடித்து நையப் புடைத்துக் குற்றுயிராக்கி விட்டார்கள்.

யாரும் பச்சையப்பனிடத்தில் இரக்கங் காட்டவில்லை. 'பயலுடைய ஆணவந் தொலைய வேண்டும்' என்று கூறிப் பேசாதிருந்தனர். நன்கு அடிபட்ட பச்சையப்பனுடைய கைகால்கள் ஒடிந்து போயின. பச்சையப்பன் எவ்வளவோ மருத்துவங்கள் செய்து பார்த்தான். ஒன்றும் பயனளிக்கவில்லை. ஒடிந்து

போன உறுப்புக்கள் பழமைபோல் ஆகவில்லை. பச்சையப்பனுடைய ஆணவம் பறந்துபோய் விட்டது. அனைவரும் பச்சையப்பனை நொண்டி யென்றே அழைக்கலானார்கள். பிறகு பச்சையப்பனுடைய ஆட்டம் இறுதிவரையில் தலை காட்டவேயில்லை. எல்லோரிடமும் பகை தேடினால் இவ்வாறுதான் தொல்லை நேரிடும்.

"ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்"

(இ - ள்.) ஊருடன் - ஊரார் அனைவருடனும், பகைக்கின் - ஒருவன் பகை தேடிக்கொண்டால், வேருடன் கெடும் - அவன் அடியோடு அழிந்து ஒழிவான்.

---

## ரு. கல்வியறிவில்லாக் கடைக்காரன்

மருதூர் என்னும் ஊரிலே சுடலையாண்டி என்னும் பெயருடையவன் ஒருவன் பல்லாண்டுகளுக்கு முன்பு இருந்தான். அவனை அவனுடைய பெற்றோர்கள் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பினார்கள். சுடலையாண்டியினுடைய தந்தை செல்வ நிலைமையிலே செல்வனும் அல்லன்; வறியவனும் அல்லன். சுடலையாண்டிக்குக் கல்வியிலே முழுக்கவனஞ் செல்லவில்லை. படிப்பதற்கு அவனுக்கு விருப்பமேயில்லை. மற்றைப் பையன்களோடு விளையாடியே பொழுதைப் போக்கினான். சுடலையாண்டியினுடைய தந்தையுந் தன் மகனுடைய கல்வியிற் கருத்துச் செலுத்தவில்லை. அதனால் சுடலையாண்டி முழுமகனாகவே இருந்தான். அகவை மட்டும் பதினைந்து, பதினாறு ஆகிவிட்டது.

சுடலையாண்டியினுடைய தந்தை திடீரென்று காலமாகிவிட்டான். அவன் தன் மகனுக்கு நிறையக்

கடன்களை வைத்து விட்டுச் சென்றான். சுடலை யாண்டி கடனைத் தீர்த்துவிட்டு எஞ்சிய தொகையைப் பார்த்தான். ரூபா முந்நூறுதான் மீதமாயிற்று. நிலபுலங்களெல்லாம் போய்விட்டன. வீடும் எஞ்சி யது. ரூபா முந்நூறைக் கொண்டு எப்படிப் பிழைப்ப தென்று எண்ணமிட்டான். கடை வைத்துச் செல் வத்தைப் பெருக்கிக் கொள்ளலாம் என்று முடிவு செய்து கடைவைத்தான். உப்பு, புளி, மிளகாய் முத லிய பொருள்களை வாங்கிவந்து விற்கத் தொடங் கினான்.

சுடலையாண்டிக்குப் படிக்கத்தெரியாத தென்ப தைப் பெரிய கடைக்காரன் முதன்முறையிலேயே தெரிந்து கொண்டான். எல்லாச் சாமான்களின் விலையையும் முதலில் குறையச் சொன்னான். விலைப் பட்டியலில் சொன்னதற்குமேல் போட்டுப் பணத்தை வாங்கிக் கொண்டான். சுடலையாண்டிக்கு எண்ணும் எழுத்தும் தெரியாதாகையால் கடைக்காரனுடைய சூழ்ச்சியை உணர்ந்து கொள்ளவில்லை.

பெரிய கடைக்காரன் சொன்ன விலைப்படி தன் னுடைய கடையிலே விற்றான். கணக்குச் சரியாகத் தெரியாதாகையால் சாமான்களின் விலையையும் சரியாகக் கூட்டிப் பணம் வாங்காமல், சாமான் வாங்கு பவர்கள் கொடுத்ததை வாங்கிக் கொண்டான். முந்நூறு ரூபாச் சாமான்களையும் விற்றதில் சுடலை யாண்டிக்கு ரூபா நூறுதான் தேறிற்று. தன்னுடைய வணிகத்தைத் தானே இகழ்ந்து கொண்டான்.

'அந்தோ அந்த நாளில் கல்வியை ஒழுங்காகக் கற்றுக்கொள்ளாமல் திரிந்தோமே! அதன் பலன்

தான் இவ்வாறு வந்து முடிந்திருக்கிறது' என்று வருந்தினன். 'எனக்கு அகவை ஆனது பற்றிக் கவலையில்லை' எண்ணையும் எழுத்தையும் கற்றுக் கொள்ளாமல் விடமாட்டேன் என்று உறுதிகொண்டு ஒரு பெரியவரை அடுத்து அவரிடம் படிப்பதற்கு நன்கு பழகிக் கொண்டான். அதன் பிறகு சடையாண்டியின் நிலை சிறந்து விளங்கியது.

"எண்ணும் எழுத்தும் கண் எனத்தகும்"

(இ - ள்.) எண்ணும்-கணிதநூலும், எழுத்தும் - இலக்கண நூலும், கண் எனத்தகும் - மக்களுக்கு இரண்டு கண்கள் என்று சொல்லப் பெறுவனவாம்.

## எ. நரைதிரையற்ற நாகனார்

ஆலங்குடி என்னும் ஊரிலே நாகனார் என்னும் பெயருடையவர் ஒருவர் அறுநூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்தார். அவருக்கு அகவை தொண்ணூற்று மூன்று ஆயிற்று. அவர் ஒரு நாள் சோழ மன்னனுடைய அவைக்குச் சென்றார். சோழ மன்னன் அவரை அதற்குமுன் பார்த்ததே யில்லை. கேள்விப் பட்டுமட்டும் இருந்தான். அவன் நாகனாரைப் பார்த்தற்கு விரும்பியே தன்னுடைய அவைக்கு அழைத்திருந்தான். அவருக்கு அகவை தொண்ணூற்றுமூன்று என்பதும் அரசனுக்குத் தெரியும்.

ஆகவே அரசன் நாகனார் தொண்டுகிழவராக நடக்க முடியாமல் தள்ளாடிக்கொண்டு வருவார் என்று எதிர்பார்த்திருந்தான். ஆனல் நாகனாரைக் கண்டதும் அவர் யார் என்று கேட்டான். நாகனார்

தாம் நாகனார் என்று கூறினார். அவர் கூறியதைக் கேட்ட அரசனுக்கு வியப்பு மிகுதியாயிற்று. அவன் நாகனாரைப் பார்த்து, 'உமக்கு அகவை தொண்ணூற்று மூன்று என்று சொன்னார்கள். நானும் ஐம்பதாண்டுகளாக உம்மைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். உமக்கு அகவை நாற்பதிற்குமேல் மதிக்க முடியாது போலிருக்கிறதே! நீவிர் இவ்வாறு இளமையோடிருப்பதற்குக் காரணம் யாது?'' என்று கேட்டான்.

மன்னன் கூறியவைகளைக் கேட்ட நாகனார், 'ஆம் எனக்கு அகவை தொண்ணூற்று மூன்று ஆகின்றது என்பது உண்மைதான். நான் இவ்வாறு இளமை யோடிருப்பதற்குக் காரணம் எனக்குத் தோன்றியுள்ள மக்களின் மாண்பேயாகும். என் மக்கள் அறிவு நிறையப் பெற்றவர்கள். எச் செயலையும் நான் கூறா மலே நன்கு முடிக்கும் இயல்பு பெருந்தியவர்கள். எல் லாச் செயல்களையும் அவர்கள் திறமையுடன் நடத்து கிற படியால் நான் யாதொரு கவலையும் அற்று நல் லுடலோடு இனிதிருக்கிறேன்,' என்று கூறினார்.

நாகனார் கூறியவைகளைக் கேட்ட மன்னன், நீவிர் கூறுவது இயம்புதற்கரிய வியப்பாகவன்றோ இருக் கிறது. மககட்பேறு நல்லதாக அமைந்துவிட்டால் மூப்பு வராமலா போய்விடும். நீவிர் கூறுவது நம்ப முடியாததாக இருக்கிறதே!' என்றான்.

நாகனார் அரசனைப் பார்த்து, ''ஏவா மக்கள் மூவா மருந்து' என்று ஒளவைப் பிராட்டியார் கூறியிருக் கிறார்களே அதனைத் தாங்கள் அறியமாட்டீர்களா? பெரியோர்கள் கூறியது பொய்யாகவா போய்விடும்?''

என்றார். அரசன், 'ஆம் ஆம் ஔவையார் கூறியதை அறிவேன். இப்பொழுதுதான் நினைவுக்கு வருகிறது. ஆனால், அதை நம்பாமலிருந்தேன். தங்களைப் பார்த்த பிறகுதான் ஔவையார் மொழி உண்மை என்று தெரிகிறது' என்று கூறினான்.

"ஏவா மக்கள் மூவா மருந்து"

(இ - ள்) ஏவா-பெற்றோர்கள் இதைச்செய் அதைச்செய் என்று ஏவுதலில்லாமலே செய்யவேண்டியவைகளை யெல்லாம் செய்கிற, மக்கள் - பிள்ளைகள், மூவா மருந்து-மூப்புவாராமல் தடுத்தற் குரிய அமுதத்தைப் போன்றவர்களாவர்.

## அ. திருப்பணிசெய்த சிவத்தொண்டர்

முன்னாளிலே ஒரு சிவத்தொண்டர் இருந்தார் அவர் திருக்கோயில் கூட்டுதல், திருவிளக்கேற்றுதல், பூமாலைகட்டுதல் முதலிய திருக்கோயில் திருப்பணிகளைச் செய்துகொண்டிருந்தார். அவர் திருப்பணி செய்துகொண்டிருந்த ஊர் திருவாரூர். அவர் திருக் கோயில் திருப்பணியிலே ஈடுபட்டுக் குடும்பச் செயல்களை நன்கு பார்க்கவில்லை. அதனால் வறுமை அவரைப் பற்றத் தொடங்கியது. அந்தச் சிவத்தொண்டருடைய வீடுவாசல் நிலம் முதலியவைகளைக் கடன்காரர்கள் கைப்பற்றிக் கொண்டார்கள்.

சிவத்தொண்டர் அந் நிலையிலும் உள்ளம் கலங்கவில்லை. எல்லாம் இறைவன் திருவருள் என்று தமது திருப்பணிகளைச் செய்து கொண்டிருந்தார். உணவுக்குத் தொல்லை யேற்பட்டது. கோயிலில் திருப்பணிதான் செய்தாரே தவிர அங்கிருந்து உணவோ

பொருளோ ஒன்றும் கிடைக்கவில்லை. சிவத் தொண்டர் அதனை யெதிர் பார்த்துத் தொண்டு செய்தவரும் அல்லர்.

வீடு வாசல்களை இழந்த பின் தொண்டர் பொது இடம் ஒன்றிலே தங்கிக்கொண்டார். நண்பகலிலும் பல வீடுகட்குச் சென்று உணவினைப் பெற்றுப் புசித்து விட்டுத் தமது திருப்பணிகளைச் செய்துகொண்டிருந் தார். சிவத்தொண்டரின் செயல் மக்களுக்கு உவகையை உண்டு செய்தது. அன்பர் எதையும் பொருட் படுத்தாமல் திருப்பணியிலே உறுதியுடன் அமைந்து நிற்கிறாரே என்று புகழ்ந்து கொண்டாடினார்கள்.

சிவத்தொண்டரின் சிவப்பணி அவரைத் தொல்லைகளுள்ளாக்கவில்லை. மக்கள் பலர் ஒன்று சேர்ந்து பொருளுதவிசெய்து அவருக்குப் புது வீடு ஒன்றை அமைத்துக் கொடுத்தனர். உணவுக்கும் ஒவ்வொருவர் இவ்வளவு நெல் கொடுப்பது என்று முறை செய்துகொண்டு கொடுத்தார்கள். அதனால் சிவத்தொண்டர் கவலையற்றுத் தம்முடைய திருப்பணி யிலே ஈடுபட்டிருந்தார். ஐயமேற்கப் புகுந்த காலத் திலும் அவர் தமது கடமையை விடாமையே அவ ருக்கு எல்லா நலங்களையும் உண்டாக்கியது.

"ஐயம்புகினுஞ் செய்வன செய்"

(இ - ள்.) ஐயம்புகினும் - பிச்சை யெடுத் துண்டு வாழ்க் கையை நடத்தினாலும், செய்வனசெய் - செய்யத் தகுந்த நற்காரி யங்களை விடாது செய்வாயாக.

## ௧௨. இரு பார்ப்பனர்கள்

ஓர் ஊரில் இரண்டு பார்ப்பனர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவர் பெயர் நல்லையர் மற்றவர் பெயர் தணிகைவேலையர். அவர்களிருவரில் நல்லையர் வடமொழிப் பயிற்சியுடையவர். தணிகைவேலையருக்கு வடமொழி தெரியாது. நல்லையர் நான்குமறைகளையும் காலையினும் மாலையினும் சிறிது சிறிது படிப்பார். அவர் மறைகளை ஓதினாராயினும் திருந்திய ஒழுக்கமுடையவராக இல்லை. பல் விளக்காமலும் நீராடாமலுங்கூட மறையை ஓதுவார். பாக்கு வெற்றிலையுடன் புகையிலையும் போடுவார். மறையோதுதலைத் தவிர அவரிடம் பார்ப்பனர்க் குரிய நற்பண்பு ஒன்றும் இல்லை. தீய நடத்தையை அவர் மேற்கொண்டிருப்பவர் என்றுஞ் சிலர் எண்ணினார்கள்.

தணிகைவேலையர் வடமொழியைப் பயிலாமையால் மறையோதும் பழக்கத்தை மேற்கொள்ளவில்லை. அவர் அதிகாலையில் நீராடித் திருநீறு அணிந்து இறைவனை எண்ணி வணங்குவார். காலையில் நீராடுவதற்கு ஒரு நாளுந் தவறமாட்டார். பாக்கு வெற்றிலை புகையிலை முதலியவைகளைப் பயன்படுத்தவும் மாட்டார். எல்லோரிடத்திலும் இன்சொற் பேசுவார். ஊரார்களுக்குத் தணிகைவேலையர் நாம் பிடித்திருந்தார். நல்லையரை ஒருவருக்கும் பிடிக்கவில்லை.

எல்லோரும் தணிகைவேலையரையே புகழ்ந்து போற்றினார்கள். நல்லையரை இகழ்ந்து தூற்றினார்கள். ஒரு நாள் நல்லையர் ஒருவரைப் பார்த்து, 'இந்த ஊர்க்காரர்களுக்கு என்ன தெரியும்? நான்மறையோதும் மறையவனாகிய என்னைப் புறக்கணித்துவிட்டுத் தென்

மொழியைத் தவிர வடமொழியாகிய தேவமொழியின் வாசனைகூட உணராத தண்கைவேலையனையே எல்லாருங் கொண்டாடுகிறார்கள். இஃது அவர்களுடைய அறியாமையைத்தான் காட்டுகிறது. அறிவிலிகளுக்கு நான் கூறுவதற்கு யாதிருக்கிறது?" என்று கூறினார்.

நல்லையரின் மொழிகளைக் கேட்டவருக்குச் சினம் உண்டாகி விட்டது. 'ஓய் போலிப்பார்ப்பனரே! நீர் வரம்பு கடந்து பேசுகிறீர். வடமொழியை உணர்ந் திருத்தலைவிட உமக்கு வேறு என்ன தெரியும்? நீர் மிகவுங் கெட்ட ஒழுக்கமுடையவர் என்பதை எல்லாரும் அறிவார்கள். நீர் சில நாட்களில் பல் கூடத் துலக்குவதில்லையென்று கேள்விப்பட்டிருக்கிறோம். பார்ப்பனர்களுக்கு மறையோதுதலைக் காட்டிலும் ஒழுக்கந்தான் உயர்வை அளிக்குமென்பதை நீர் உணரவில்லை. இனிமேலாயினும் நல்லொழுக்கத்தை மேற்கொள்ளும்; உம்மை எல்லாரும் போற்றுவார்கள்' என்று கண்டித்துரைத்தார். நல்லையரோ வாயடங்கி விட்டார்.

"ஓதலின் நன்றே வேதியர்க் கொழுக்கம்"

(இ - ள்.) வேதியர்க்கு - பார்ப்பனருக்கு, ஒழுக்கம் - நல்லொழுக்கமானது, ஓதலின் - மறையை ஓதுதலைக் காட்டிலும், நன்று - நல்லது.

---

## ௧௦. புளியங்குடி மருதப்பன்

புளியங்குடி என்னும் ஊரிலே மருதப்பன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் பொறாமையே ஓர் உருவமெடுத்து வந்ததைப் போன்ற பொறாமைக் குணம் உடையவன். பிறர் நல்ல உடைகளை உடுத்தினாலும் நல்ல உணவுகளை உண்டாலும், அணிகலன்களைப் பூண்டாலும் மருதப்பன் உள்ளம் பொறுக்கமாட்டான். நல்ல இன்பங்களை நுகர்பவர்களைக் கண்டால் அவர்கள்மீது ஏதேனும் குற்றங் குறைகளைக் கூறிக்கொண்டேயிருப்பான்.

மருதப்பன் வீட்டிற்குப் பக்கத்திலே ஒரு செல்வனுடைய இல்லம் அமைந்திருந்தது. அந்தச் செல்வனுடைய பெயர் தென்றல்வாணன் அவனுக்கு நூறு ஏகருக்கு மேற்பட்ட நன்செய் புன்செய் நிலங்களும் அழகிய வீடுவாசல்களும் இருந்தன. அவனுக்கு ஓர் இரட்டைக்குதிரை வண்டியும் பல மாட்டுவண்டிகளும் இருந்தன. மருதப்பனுக்குப் பத்து ஏக்கர் நிலங்களும் இரண்டொரு மாடு கன்றுகளுந்தான் இருந்தன. செல்வனுடைய வீடு சிறந்த ஓட்டுவீடு; மருதப்பனுடைய வீடோ கூரைவீடு. தென்றல்வாணனுடைய சிறந்த வாழ்க்கையைப் பார்க்கும்போதெல்லாம் மருதப்பனுடைய வயிறு பற்றிக்கொண்டு எரிந்தது. அந்தோ தென்றல்வாணன் இனிய வாழ்வு நடத்துகிறானே என்னும் ஏக்கமே மருதப்பனை ஏங்கி இளைத்துத் துரும்பாகப் போகுமாறு செய்து விட்டது.

'தென்றல்வாணன் களவினாலும் கொள்ளையினாலும் தான் பொருள் தேடிச் சுகமாக வாழ்கிறான்' என்று மருதப்பன் பலரிடமுஞ் சொல்லிக்கொண்டு

திரிந்தான். இந்தச் செய்தி தென்றல்வாணனுக்குத் தெரிந்தது. அவன், 'தன் பெருமைக்கு இழிவுண்டாகுமாறு மருதப்பன் தன்னை இகழ்ந்துரைப்பதாகவும் கொள்ளைக்காரன் என்று கூறுவதாகவும் அதனால் தன் பெருமை குறைந்திருப்பதாகவும் அதன் பொருட்டுத் தனக்குப் பொருளிழப்பு ஈடாக ரூபா பத்தாயிரம் தரவேண்டும்' என்றும் நீதிமன்றத்திலே வழக்குத் தொடர்ந்தான். தகுந்த ஏற்பாடுகளையும் செய்தான். கரி (சாட்சி) கூறுவோர் பலர் ஏற்படுத்தப் பெற்றனர்.

வழக்கு உசாவலின் முடிவில் நீதிபதி மருதப்பன் தென்றல்வாணனை இகழ்ந்துரைத்தபடியால் குற்றவாளியே என்றும், தென்றல்வாணனைப் பலரிடமும் இகழ்ந்துரைத்ததற்காக ரூபா ஏழாயிரம் கொடுக்கவேண்டும் என்றும் முடிவு கூறிவிட்டார். மருதப்பன் தன்னுடைய நிலங்கள் வீடுவாசல்கள் முதலிய எல்லாவற்றையும் விற்று அத் தொகையைக் கட்டினன். அவனுக்கு அதற்குமேல் செல்வம் ஒரு தம்படிகூட இல்லை. அதனால் மருதப்பன் போனவிடந் தெரியாமல் போய்விட்டான். பொறுமைக் குணம் உடையவர்கள் இத்தகைய முடிவைத்தான் அடைவார்கள்.

"ஔவியம் பேசுதல் ஆக்கத்திற் கழிவு"

(இ - ள்.) ஔவியம் - பொறாமை மொழிகளை, பேசுதல் ஒருவன உரைத்தல், ஆக்கத்திற்கு - அவனுடைய செல்வத்திற்கு, அழிவு - கேட்டை விளைவிப்பதாம்.

---

## ௧௧. வறியவன் செல்வனானன்

காட்டுப்பட்டி என்னும் ஊரிலே இளையதம்பி என்னும் பெயருடைய ஓர் இளைஞன் இருந்தான். அவனுக்குச் சிறிது நிலமும் ஒரு குடிசையும்தான் இருந்தன. இளையதம்பி நான்காவது வகுப்புவரையில்தான் பள்ளிக்கூடத்தில் படித்தான். அதற்குமேல் படிப்பதற்கு அவனால் முடியவில்லை. பொருளீட்டுந் தொழிலிலே ஈடுபட்டான். தன் உரிமை நிலங்களைக் கண்ணுங் கருத்துமாகச் சாகுபடிசெய்தான். பிறருடைய நிலங்களினும் சிறிதுசிறிது குத்தகைக்கு எடுத்துச் சாகுபடி செய்தான். அதனால் அவனிடத்தில் விளைபொருள்கள் மிகுதியாகச் சேர்ந்தன.

அவைகளைப் பாதுகாப்புடன் தொகுத்துவைத்து விளைபொருள்களின் விலை மிகுதியாக இருந்த சமயங்களில் விற்றான். விற்கப்பட்ட பொருள்களால் கிடைத்த பணத்தை வீண்செலவு செய்யாமல் பொருட் பாதுகாப்பு நிலையங்களிற் போட்டுவைத்தான். இளையதம்பி ஆண்டுகள்தோறும் இவ்வாறே செய்தான்.

ஐந்தாறு ஆண்டுகளில் இளைய தம்பியினிடம் ஆயிரக் கணக்கான ரூபாக்கள் சேர்ந்து விட்டன. விளைநிலங்களின் விலை குறைவாக இருக்கும்போது இளையதம்பி விளைநிலங்களை மிகுதியாக வாங்கினான். இதனால் இளையதம்பியிடம் மேலும்மேலும் பொருள் குவியலாயிற்று. இளையதம்பி சிக்கனமாக வாழ்க்கையை நடத்தியபடியால் மிகு விரைவில் பணக்காரன் ஆனான்.

இளையதம்பி விளை பொருள்களாகிய கூலங்களையும் காசையும் சிக்கனமாகச் செலவு செய்து தேடியபடி

யால் தான் விரைவிற் பணக்காரனாக முடிந்தது. அதன் பிறகு அவன் திருமணஞ்செய்து கொண்டு சிறப்பாக வாழ்க்கை நடத்தினான். பலருக்கும் உதவி செய்யும் நற்செயலையும் மேற்கொண்டான். சிக்கன வாழ்வைச் செல்வம் மிகுதிப்படும் வரையில் ஒவ்வொரு வரும் மேற்கொள்ள வேண்டியது கட்டாயமாகும்.

"அஃகமுங் காசுஞ் சிக்கெனத் தேடு"

(இ - ள்.) அஃகமும்-கூலங்களையும், காசும் - பணத்தையும், சிக்கெனத்தேடு-வீண் செலவு செய்யாமல் தேடுவாயாக!

## ௩௨. அவாவறுத்த நரி

ஒருநரி ஒருவயலின் வரப்பின்மீது சென்று கொண்டிருந்தது. ஒரு வளையிலே நன்கு கொழுத்த நண்டொன்று இருந்தது. அதைக் கண்ட நரி விரைந்து பிடிக்கத் தொடங்கியது. அந்த நண்டோ விரைவாக வளைக்குள் மறைந்து விட்டது. நரி அதனைப் பிடிப்பதற்குத் தான் கற்றிருந்த சூழ்ச்சிகளை யெல்லாம் பயன் படுத்திப் பார்த்தது. நண்டைப் பிடிக்க முடியவில்லை. அந் நரி உடனே தன் அவாவை முற்றிலும் ஒழித்தது.

"எனக்கு நண்டு வேண்டுமானால் எவ்வளவோ நண்டுகள் பிடிக்கத் தெரியும். ஆனாலும் இனிமேல் நான் நண்டுகளைப் பிடித்து உண்ணாமல் சைவமாக இருக்கப்போகிறேன். 'நண்டை முறித்துத் தின்பது தீவினையாகும்' என்று பெரியோர்கள் சொல்லியிருக் கிறார்கள். நண்டு தின்றவர்கள் மறுபிறப்பில் தொழு நோயையுடையவர்களாகப் பிறப்பார்களாம். ஆகை

யால் நண்டைப் பிடித்துத் தின்னல் கூடாது. பரம்பொருளாகிய சிவபெருமானுக்குச் சம்பு என்று பெயர் இருக்கிறது. எனக்குஞ் சம்பு என்று பெயர் இருக்கிறது. ஆகையால் எனக்கும் சிவபெருமானுக்கும் வேறுபாடு என்ன இருக்கிறது? சிவபெருமான் நண்டைப் பிடித்துத்தின்றுகொண்டா இருக்கிறார்?" என்று சொல்லிக்கொண்டே தன்வழியே போய் விட்டது.

நண்டு அகப்படாமற் போகவே அதனை உடனே மறந்துவிட்ட நரியைப் போல நாமும் நமக்குக் கிடைக்காத பொருள்களை உடனே மறந்துவிடுதல்தான் நல்லது.

"கிட்டாதாயின் வெட்டென மற"

(இ - ள்.) கிட்டாதாயின் - விரும்பிய பொருள் எளிதிற் கிடைக்காமற் போகுமானல், வெட்டென - விரைவில், மற - அப்பொருளை மறந்துவிடு.

## கங. பணிவால் உயர்ந்த பெரியோர்

சோழமங்கலம் என்னும் ஊரிலே அறிவுடைநம்பி என்னும் பெயருடைய பெரியவர் ஒருவர் முன்னளில் இருந்தார். அவர் பல நூல்களையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தவர். ஒரு நாளைக்கு ஐந்நூறு புதுப்பாடல்களைப் புதிதாகப் பாடக் கூடிய ஆற்றலமைந்தவர். அவர் மேன்மேலும் பல நூல்களைப் படித்துக் கொண்டே யிருந்தார். ஒருவர் இறுதிவரையிலும் கல்வியைக் கற்றுக்கொண்டே இருக்கவேண்டுமென்பது அவருடைய கொள்கை.

அப் பெரியவர், சிறியோர் பெரியோர் ஆகிய எல்லோரிடத்திலும் பணிவாகப் பேசுதலைத் தம்முடைய கடமையாக மேற்கொண்டிருந்தார். ஐந்தாண்டுக் குழந்தை சென்று அவரிடம் பேசினும் அவர் அதனிடமும் பணிவாகவும் அடக்கமாகவும் தான் பேசுவார். அவருடைய பணிவான மொழியும் அன்பும் மக்கள் அனைவருக்கும் மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. எல்லோரும் அப் பெரியவரை மிகவுஞ் சிறந்தவராகக் கொண்டாடலானார்கள். பலவூர்களிலும் அவருடைய புகழ் பரவியது. மக்கள் பலரும் அவரைக் கண்டு மகிழ்வதற்காகவே வந்தனர்.

பெரியாரிடத்திலே அன்புகொண்ட செல்வர் சிலர் பெருந் தொகையைப் பரிசளித்தனர். அப் பெரியவர் அத்தொகையைத் தமது செலவிற்குப் பயன் படுத்தவில்லை. தம்மைக் காணுதற்குவரும் அன்பர்களுக்கு உணவிடுதல் முதலிய நற் செலவுகளுக்குப் பயன்படுத்தினார். அனைவரிடத்திலும் தாழ்மையாகப் பேசும் பெருங்குணமுடையவர்கள் சிறப்படைவார்களென்பது அறிவுடை நம்பியாரிடம் நன்கு பெறப்பட்டது.

"கீழோர் ஆயினும் தாழஉரை"

(இ - ள்.) கீழோர் ஆயினும் - கேட்பவர்கள் உனக்குக் கீழ்ப் பட்டவர்களாக விருந்தாலும், தாழஉரை - நீ கூறுவதை வணக்கமாகக் கூறுவாயாக.

---

## கசு. கன்னன் கதை

கன்னன் என்பவன் கதிரவனுடைய மகன். பெரும் போர் ஆற்றல் படைத்தவன். அவன் பாரதப் போரிலே துரியோதனனுடைய பக்கத்திலே சேர்ந்திருந்தான். அவனிடத்திலே கூரிய கணைகள் பல இருந்தன. அவைகளெல்லாம் பகைவர்களைக் கொல்லத்தக்க தன்மை பொருந்தியவைகள். பாரதப் போர் நடந்த பொழுது துரியோதனன் பக்கத்திற்குத் தோல்வி அடிக்கடி ஏற்பட்டுக்கொண்டிருந்தது.

தோல்வியேற்படும் பொழுதெல்லாம் துரியோதனன் கன்னனைப் பார்த்து, 'அந்தோ என்பக்கம் தோல்வியடைகிறதே, தோல்வியடைகிறதே' என்று கூறினன். துரியோதனன் வருந்தும்போதெல்லாம் கன்னன் துரியோதனனைப் பார்த்து,' 'நண்பா! வருந்தாதே! கூரிய கணைகள் பல என்னுடைய அம்புக் கூட்டில் இருக்கின்றன. இந்தப் பாரதப் போரில் உனக்கே வெற்றி ஏற்படும்படியாகச் செய்கிறேன். என்னுடைய கூரிய கணைகட்கு முன் நின்று போராற்றக்கூடிய ஆண்மையாளர் யாரும் இருக்கிறார்களா? நான் இன்னும் முழுமனது வைத்துப் போரில் இறங்கவில்லை. நான் போரில் இறங்கி விட்டால் உனக்குக் கட்டாயமாக வெற்றியேற்படும். நம் பக்கத்துப் பெரு வீரர்களனைவரும் இறந்து தொலையட்டும். இறுதியில் நான் உனக்கே வெற்றியேற்படும்படி செய்கிறேன்,' என்று பலமுறை கூறிக்கொண்டேயிருந்தான்.

கன்னன் கூறுவதைக் கேட்ட துரியோதனன் இறுதியில் நமக்கு வெற்றியேற்படுமென்று வீணாக எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தான். கன்னன்

கூறியவைகளால் தேறியிருந்த துரியோதனன் அவன் இறந்தபோது பெரிதும் வருந்தினான். ஆண்மையாளர்கள் பலரும் கன்னன் பேசிய வீரம் வாய்ப் பேச்சளவாக முடிந்ததே என்று எண்ணி இகழ்ந்து நகையாடினார்கள். ஆகவே, கையில் கூரிய அம்பிருந்தாலும் யாரும் வீரம்பேசுதல் கூடாது.

"கூரம் பாயினும் வீரியம் பேசேல்"

(இ - ள்.) கூர் அம்பு ஆயினும் - கையிலிருப்பது கூர்மை பொருந்திய அம்பாக இருந்தாலும், வீரியம் பேசேல் - உன்னுடைய ஆண்மையை வீணாக வியந்து பேசாதே.

## ௧௫. கருப்பண்ணனும் சிற்றம்பலமும்

திருக்குடந்தை நகரிலே கருப்பண்ணன் என்பவனும் சிற்றம்பலம் என்பவனும் நண்பர்களாக இருந்தார்கள். கருப்பண்ணன் தீக்குணங்கள் எல்லாம் அமையப்பெற்றவன். சிற்றம்பலமோ நற்குணங்கள் எல்லாம் அமையப் பெற்றவன். இவர்கள் இரண்டு பேருக்கும் எப்படியோ நட்பு ஏற்பட்டிருந்தது. சிறிது காலம் இருவரும் வேற்றுமையின்றிப் பழகிக்கொண்டிருந்தார்கள். கருப்பண்ணன் தன்னுடைய குறும்புச் செயல்களையெல்லாம் மற்றவர்களிடத்திலே காட்டிக்கொண்டிருந்தானே யன்றிச் சிற்றம்பலத்திடம் நீண்டநாள்வரையும் ஒன்றையுங் காட்டவில்லை. பிறகு சிறிது சிறிதாகக் காட்டத் தொடங்கினான். சிற்றம்பலத்திற்குச் சில தீமைகளைச் செய்யத்

கருப்பண்ணன் தன்னுடைய குறும்பைக் காட்டத் தொடங்கியதைச் சிற்றம்பலம் கண்டான். 'சரி

கருப்பண்ணன் இனி நட்புச் செய்தற்குத் தகுந்தவனல்லன். அவனுடைய நட்பை இனிமேல் விட்டொழித்தல்தான் தக்கது' என்று முடிவு செய்தான். தனக்குத் தீமைகளைச் செய்த கருப்பண்ணனைப் பார்த்து, 'ஏன் இவ்வாறு செய்தாய்? அவ்வாறு செய்தாய்?' என்று கேட்கவில்லை. கருப்பண்ணனுடைய தொடர்பு முழுவதையும் விட்டுவிட்டான். கருப்பண்ணனைக் கண்டும் காணாதவன் போல் நடந்து கொள்ளலானான். சிற்றம்பலத்தின் போக்கைக் கண்ட கருப்பண்ணன் நாம் தீமை செய்துங் கூடச் சிற்றம்பலம் ஏன இவ்வாறு செய்தான் என்று கேட்கவில்லை. நமது நட்பை வெறுத்து விட்டிருக்கிறான். இவ்வளவு நல்லவனோடு கொண்ட நட்பைக் கெடுத்துக்கொண்டோமே என்று வருந்தினான்.

"கெடுவது செய்யின் விடுவது கருமம்"

(இ - ள்.) கெடுவது-தீமையை, செய்யின்-நண்பன் செய்வானாயின், விடுவது-அவனுடைய நட்பை விட்டுவிடுவது, கருமம்- நற்செய்கையாம்.

## ௧௬. பாண்டவர் மனவுறுதி

துரியோதனன் தன்னுடைய மாமனாகிய சகுனியைக் கொண்டு சூதாடச் செய்து பாண்டவர்களுடைய நாடு நகரங்களையெல்லாம் கைப்பற்றிக்கொண்டான். சிறந்த பேரரசர்களாக இருந்த பாண்டவர்கள் ஒன்றுமற்ற ஆண்டிகளானார்கள். ஆனால் அவர்கள் தங்களுக்கேற்பட்ட நிலைமையைக் குறித்துத் தளர்ச்சியடைந்து வருந்தவில்லை. அரசாட்சியிலிருப்பதுபோலவே மிகுந்த மகிழ்ச்சியுடன் இருந்தார்கள்.

பாண்டவர்களுடைய மனமகிழ்ச்சியைக் கண்டு துரியோதனனும் மிகுந்த பொறாமைப்பட்டான். பாண்டவர்களுக்குக் காட்டு வாழ்க்கை நாட்டு வாழ்க்கையைப் பார்க்கினும் சிறந்ததாகவும் களிப்புடையதாகவும் இருந்தது. குறிப்பிட்டகாலம் முடிந்தவுடன் பாண்டவர்கள் தகுந்த ஏற்பாட்டோடு போர் செய்து தாங்கள் இழந்துபோயிருந்த அரச செல்வத்தைத் திரும்பவுங் கைப்பற்றிக் கொண்டார்கள்.

செல்வத்தை யிழந்த காலத்தில் பாண்டவர்கள் கலக்கத்தை யடைந்து வருந்தித் தளர்ந்துபோயிருப்பார்களானால் அவர்கள் போர் செய்து தாங்கள் இழந்துபோன அரசியலைக் கைப்பற்ற முடியாமற் போயிருக்கும். ஆகையால் பொருளை யிழந்தவர்கள் தளர்ச்சியடையாமல் ஊக்கத்துடன் நின்று முயற்சி செய்வதுதான் இழந்துபோனவைகளை மீண்டும் பெறுதற்குச் சிறந்த வழியாகும்.

**"கேட்டில் உறுதி கூட்டும் உடைமை"**

(இ - ள்.) கேட்டில் - கைப்பொருளை யிழந்த காலத்திலும், உறுதி - மனந்தளராமை, உடைமை கூட்டும் - செல்வத்தை யுண்டாக்கும்.

---

## கஎ. செல்வந்தேடச் சென்றவர்கள்

ஏறக்குறைய இருநூறாண்டுகளுக்கு முன்பு சாத்தனூர் என்னும் ஊரிலிருந்து மூன்றுபேர் பொருள் தேடும் நோக்கத்தோடு சென்னைக்குப் புறப்பட்டார்கள். அவர்கள் ஆளுக்கு ஆயிரம் ஆயிரம் ரூபாவைத்திருந்தார்கள். அதை முதற் பொருளாகவைத்து வாணிகஞ் செய்து பொருள் தேடவேண்டுமென்பது அவர்கள் நோக்கம். அம் மூவரோடு அறிஞர் ஒருவருஞ் சென்றார். அவரிடம் ஐந்து ரூபாய்கள்தான் இருந்தன. அவரும் பொருள் தேடிவரவேண்டும் என்னும் எண்ணத்துடன்தான் அவர்களுடன் சென்றார். அவருடைய பெயர் கண்ணம்பாணனார்.

நால்வரும் சாத்தனூரை விட்டுப் புறப்பட்டுக் கால் நடையாகவே சென்னையை நோக்கிச் சென்றார்கள். இக்காலத்தைப்போல் அக்காலத்தில் புகைவண்டி இல்லாமையால்தான் அவர்கள் நடந்து சென்றார்கள். சாத்தனூருக்கும் சென்னைக்கும் இருநூற்றுப் பதினேழுமைல்கள் இருந்தன. நால்வரும் இடை இடையே தங்கிப் பயணம் செய்துகொண்டிருந்தனர். ஒருநாள் இரவில் ஓர் ஊரில் அறச்சாலையொன்றில் நால்வரும் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தனர்.

மறுநாள் விடிவதற்கு முன்பு புறப்படத் தொடங்கினார்கள். புறப்படுமுன்பு பணம் பாதுகாப்பாக இருக்கிறதா என்று பார்த்தார்கள். மூவருடைய பணத்துடன் கண்ணம்பாணனாருடைய ஐந்து ரூபாய் பணமும் காணவில்லை. இரவில் கள்ளர்கள் யாரோ கட்டிக்கொண்டு போய்விட்டார்கள். பணம் போய் விட்டதைக் கண்ட மூவரும் திரும்பிவிடுவோம் என்

னார்கள். கண்ணம்பாணனார், "பெரும்பாலுஞ் சென்னைக்கு அண்மையில் வந்துவிட்டோம். சென்னைக்கு இன்னும் முப்பத்திரண்டு மைல்கள்தான் இருக்கின்றன. சென்னைக்குப் போய் ஊரையாவது சுற்றிப் பார்த்துக்கொண்டு வருவோம்; உணவுக்குஞ் செலவிற்கும் நான் பொருள் தேடித்தருகிறேன்," என்றார். மற்றவர்களும் அதற்கு உடன்பட்டார்கள்.

இடையிட்ட ஊர்களில் சிறிது உதவிபெற்று நாம் வருஞ் சென்னையை அடைந்தார்கள். தெருத் தெருவாகச் சுற்றிப் பார்த்தார்கள். கையிற் பொருளில்லாக் குறைதான் பெருங்குறையாக இருந்தது. புலவர், 'சென்னையில் கொடைக்குணம் படைத்த செல்வர்கள் எவரேனும் இருக்கிறார்களா?" என்று பலரையும் வினவினார். சென்னையிலுள்ள மயிலாப்பூர் என்னும் ஊரிலே பொன்னம்பலம் பிள்ளை என்னும் பெயருடைய செல்வன் ஒருவன் இருக்கிறான் என்றும், அவன் தக்கார்க்கு ஏதேனும் உதவிசெய்கிறான் என்றும் கண்ணம்பாணனார் அறிந்தார்.

தாங்கள் ஊரைவிட்டுப் புறப்பட்ட நோக்கம், வழிநடந்த வருத்தம், இடையே அறச்சாலையிற் பொருளைக் களவிற் பறிகொடுத்தது முதலிய எல்லாச் செய்திகளையும் அமைத்து நீண்ட அகவற்பா ஒன்றைப் பாடி முடித்துக்கொண்டு துணைவர் மூவருடனும் பொன்னம்பலம் பிள்ளையைச் சென்று கண்டார். அவன் நல்லமனிதனாகவே இருந்தான். நால்வருக்கும் உணவிட்டுப் போற்றினான். உண்டு முடிந்த பின்னர் நால்வரையும் பார்த்து, 'நீங்கள் எந்த ஊர்? எதன் பொருட்டு இங்குவந்தீர்கள்?' என்று உசாவினான்.

புலவர் தாம் எழுதிவைத்திருந்த நீண்ட பாடலை இசையுடன் படித்தார். இடையிடையே பொருள் விளக்கமுஞ் செய்தார். கண்ணம்பாணனூர் கூறிய முறை செல்வனுக்குப் பாடங்கேட்பதுபோல் இருந்தது. செய்திகளெல்லாம் உள்ளத்தில் பசுமரத்தாணி போற்பதிந்தன. செல்வன் எல்லாவற்றையுங் கருத்துடன் கேட்டுக்கொண்டான். 'உங்களுக்கு என்னால் ஆன உதவிசெய்கிறேன். நகரத்தை நன்றாகச் சுற்றிப் பாருங்கள்,' என்று கூறித் தன்னுடைய குதிரை வண்டியையும் அனுப்பினான்.

பொன்னம்பலம் பிள்ளையின் உதவியைக் கண்டு நால்வரும் மகிழ்ச்சியடைந்தனர். 'நாம் பொருள் தேடாவிட்டாலும் போகிறோம். சென்னைக்கு வந்ததற்கு இத்தகைய நற்குணச் செல்வனைப் பார்த்தோமே! இஃதொன்றே போதும்' என்று பேசிக்கொண்டார்கள். ஐந்தாறு தினங்கள் சென்றன. நால்வரும் செல்வனைப் பார்த்து, 'நாங்கள் சென்னை நகரை நன்றாகச் சுற்றிப் பார்த்து விட்டோம். இனிமேல் ஊருக்குப் போகிறோம்' உங்களுடைய அன்புடைமைக்கும் பண்புடைமைக்கும் நன்றிசெலுத்துகிறோம், என்று கூறினார்கள்.

செல்வன், நால்வருக்கும் ஆளுக்கு ஐந்நூறு ஐந்நூறு ரூபாக்களைக் கொடுத்தான். 'நீங்கள் ஏதேனும் பொருள் தேடிக்கொண்டு செல்லலாம் என்று நினைத்தால் இதனையே முதற்பணமாகக் கொண்டு அப்படியே செய்யுங்கள்' என்று கூறினான். செல்வனுடைய பெருந்தன்மையைக் கண்டு நால்வரும் பெரும் வியப்படைந்தார்கள். மூவரும் எல்லாவற்றிற்கும்

கண்ணம்பாணருடைய கல்வியறிவும் சொல்வன்மையுமே காரணம் என்று அவரைப் போற்றினார்கள்.

சில காலஞ் சென்னையில் தங்கித் தாங்கள் வழியில் இழந்துபோன பொருளைத் தேடிக்கொண்டு தங்களுடைய சொந்த ஊரை யடைந்தார்கள். வழியில் நிகழ்ந்தவைகளை யெல்லாம் அனைவருக்குந் தெரியப் படுத்திப் புலவருடைய கல்விப் பெருமையை வியந்து பேசினார்கள். அதன் பிறகு அனைவரும் 'கைப் பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி' என்பதை ஐயமற அறிந்துகொண்டார்கள்.

"கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி"

(இ - ள்.) கைப்பொருள் தன்னின் - கையிலிருக்கிற பொருளைப் பார்க்கிலும், மெய்ப் பொருள்-உண்மையில் நிலைபெறக்கூடிய பொருள், கல்வி-கல்விப் பொருளே யாகும்.

---

## கஅ. தலை தப்பியது

தென்மலை என்னும் ஊரிலே பொன்னழகு என்னும் பெயருடையவன் ஒருவன் மூந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்தான். அவன் சிறிது செல்வம் உடையவன். நல்ல நிலைமையிலே சிறந்து விளங்கியிருந்தான். அந்தத் தென்மலையை அந்நாளில் சுந்தரபாண்டியன் என்னும் பெயருடைய குறுநிலமன்னன் ஒருவன் ஆட்சி புரிந்து கொண்டிருந்தான். பொன்னழகு சுந்தரபாண்டிய மன்னனைத் தெரிந்து வைத்திருக்கவேண்டும் என்று விரும்பினான். இரண்டொருமுறை தகுந்த கையுறைகளோடு சென்று அரசனுடைய அறிமுகத்தைப் பெற்றான்.

அப்போது தென்மலையில் ஊர்க்காவல் நிலையத் தலைமை யதிகாரியாயிருந்தவன் முடிகொண்டான் என்னும் பெயரையுடைய ஒரு மூர்க்கன். யாராவது சிறிது ஏமாந்திருந்தால் அவன் ஏமாந்தவர்களுடைய தலையையே வாங்கினாலும் வாங்கி விடுவான். அந்த முடிகொண்டானுடைய வீடு பொன்னழகினுடைய வீட்டிற்குப் பக்கத்து வீடாக இருந்தது. பக்கத்து வீடாக இருந்தால் எதையேனும் முன்னிட்டுச் சண்டை சச்சரவு வருவது உலக வழக்கந்தானே. சில காரணங்களை முன்னிட்டு முடிகொண்டானுக்கும் பொன்னழகிற்கும் அடிக்கடி பகையுண்டாயிற்று.

முடிகொண்டான் தான் ஓர் அதிகாரி யாகையால் பொன்னழகு தனக்கு அடங்கி நடக்கவேண்டுமென்று விரும்பினான். பொன்னழகோ தனக்கு அரசனுடைய பழக்கமே யிருப்பதால் முடிகொண்டானை ஒருபொருட்படுத்துவதில்லை யென்று முடிவு செய்தான். இருவருக்கும் பகைமுறுகி வளர்ந்தது. முடிகொண்டான் பொன்னழகை எப்படியாவது தொலைத்து விடுவதென்று உறுதிகொண்டான். கொலைவழக்கு ஒன்றைப் பொய்யாகக் கற்பனை செய்து, பொன்னழகு கொலைசெய்தான் என்று அவன் மீது வழக்குத் தொடர்ந்தான். பொய்க்கரி புகல்வதற்குப் பலபேரை ஏற்பாடு செய்தான். நீதி மன்றத்திலே வழக்கு நடைபெற்றது. முடிகொண்டான் எல்லாவற்றையும் நன்கு கற்பித்து வைத்திருந்தானாகையால் நீதிமன்றத்தலைவர் பொன்னழகு உண்மையாகவே கொலை செய்தவன்தான் என்று எண்ணினார். பொன்னழகிற்குத் தூக்குத் தண்டனை

விதித்தார். முடிகொண்டான் தன்னுடைய சூழ்ச்சி பலித்ததென்று மகிழ்ந்தான்.

அந் நாளில் எத்தகைய வழக்கும் அரசனிடம் சென்றுதான் இறுதியில் உறுதியாகும். பொன்னழகு மீது ஏற்பட்ட கொலைவழக்கு முடிவும் அரசனிடம் சென்றது. அரசன் பொன்னழகைப் பார்த்து, 'நிகழ்ந்தது யாது?' என்று உசாவினான். பொன்னழகு தனக்கும் முடிகொண்டானுக்கும் உள்ள பகையை எடுத்துரைத்தான். வழக்குப் பொய்யாகக் கற்பிக்கப்பட்டதென்று தெளிவாகக் கூறினான்.

அரசன் பொன்னழகோடு பழகியிருந்ததால் வழக்கைத் தன் முன்பு மறுபடியும் உசாவ ஏற்பாடு செய்தான். பொய் கூறுபவர்கள் தலைபோய்விடும் என்று கண்டித்தான். பொய்க்கரி கூறவந்தவர்கள் உண்மையைக் கூறிவிட்டார்கள். அரசன் முடிகொண்டான்மீது பெருஞ் சினங்கொண்டான். அவனுக்குச் சிறைத் தண்டனை கிடைத்தது. பொன்னழகு விடுதலை செய்யப் பட்டான். பொன்னழகு அரசன் பழக்கத்தைத் தேடியிராவிட்டால் இறப்புத் தண்டனைக்கு உள்ளாகி யிருப்பான். அரசனுடைய அறிமுகந்தான் பொன்னழகைக் காப்பாற்றியது.

"கோற்றவன் அறிதல் உற்றிடத் துதவி"

(**இ - ள்.**) *கொற்றவன்-அரசனானவன், அறிதல்-ஒருவனைத் தெரிந்திருத்தல், உற்ற இடத்து-அவனுக்கோர் ஆபத்துவந்த காலத்திலே, உதவி-நல்ல உதவியாகும்.*

---

## ௧௪. கோளைப்பரப்பிய குட்டித்தம்பி

புங்கனூர் என்னும் ஊரிலே குட்டித்தம்பி என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் கோளைப் பரப்புவதில் மிகவுங் கெட்டிக்காரன். ஏதாவதொரு செய்தி ஊர்முழுவதும் பரவவேண்டுமானல் அச் செய்தியைக் குட்டித் தம்பியிடம் சொல்லிவிட்டாற் போதும்; கால்நாழிகைக்குள் புங்கனூர் முழுவதுகரும பரப்பிவிடுவான்.

ஒருமுறை புங்கனூரிலே ஒரு களவு நடந்துவிட்டது. களவைச் செய்தவன் அடுத்த ஊரைச் சேர்ந்தவன். களவுசெய்தவனுடைய பகைவன் ஒருவன் களவுசெய்தவன் இன்னன் என்று தெரிந்துகொண்டான். களவுசெய்தவனைக் காட்டிக் கொடுத்துவிட வேண்டுமென்பது அவனுடைய எண்ணம். ஆயினுந் தான் அந்தச் செய்தியை வெளிப்படுத்த விரும்பவில்லை. புங்கனூருக்கு வந்தான். குட்டித் தம்பியினுடைய செய்தி வந்தவனுக்கு நன்கு தெரியும். ஆகவே அவன் குட்டித்தம்பியிடம் வந்தான். "தம்பி! இந்த ஊரிலே களவுநடந்ததே! அதைச் செய்த பேர்வழியைக் கண்டுபிடித்து விட்டார்களா? அந்தக் களவைச் செய்தவன் எங்களூரைச் சேர்ந்த இன்னபெயருடையவன்தான். இதனை நீ வெளியே சொல்லாதே. உன் மனத்திலே மறைமுகமாக வைத்துக்கொள்," என்று கூறிவிட்டான்.

செய்தியை அறிந்த குட்டித்தம்பி துள்ளிக் குதித்தான். அந்தச் செய்தியை ஒரு நாழிகைக்குள் புங்கனூர் முழுவதற்கும் பரப்பிவிட்டான். களவிற் பொருளையிழந்தவர் ஊர்க்காவல் நிலையத்திற்குச்

செய்தியைத் தெரியப்படுத்தினர். ஊர்க்காவலர்கள் விரைந்து சென்று களவுசெய்தவன் வீட்டை ஆராய்ந்தனர். களவுபோன பொருள்கள் அகப்பட்டன. குற்றவாளி பிடிபட்டான். கோள்சொல்லும் பழக்கமுடையவர்கள் மறைவுச் செய்தியை மிகுவிரைவாக எங்கும் பரப்பி விடுவார்கள்.

"கோட்செவிக் குறளை காற்றுடன் நெருப்பு"

(இ - ள்.) கோள்செவி-கோள்கேட்கும் குணமுடையவனது காதிலே, குறளை-பிறர்மேல் ஒருவன் வந்து சொன்ன கோளானது, காற்றுடன் நெருப்பு-காற்றுடன் சேர்ந்த நெருப்பைப் போல யாண்டும் பரவுதலை யடையும்.

---

## உ௦. இகழ்ந்துரையாடிய இளம்பேகன்

ஆலங்குடி என்னும் ஊரிலே இளம்பேகன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் பொதுவாக நல்லவனேயாயினும் பிறர்மேல் ஏதேனும் பழிகளைக் கண்டால் அதனைப் பலரிடமும் கூறுவான். அதனால் இளம்பேகனிடத்தில் ஆலங்குடியார்கள் சிறிது வெறுப்புடையவர்களாக இருந்தார்கள். அந்த ஆலங்குடியிலே கணிமேதாவி என்னும் பெயருடையார் ஒருவர் இருந்தார். அவர் நல்ல அறிஞர்; பலநூல்களையுந் தெளிவாகக் கற்றுணர்ந்தவர். அவர் ஊரார் அனைவருடைய நன்மதிப்பையும் பெற்றிருந்தார். அவருக்குச் சோதிடமும் நன்கு தெரியும்.

கணிமேதாவியார் ஒருநாள் இளம்பேகனுக்குச் சில அறிவுரைகள் கூறினர். அவ்வுரைகள் இளம்பேகனுக்குப் பிடிக்கவில்லை. அவன் பலரிடமும், "கணிமேதாவியார் வரவர மேலே தாவப் பார்க்கிறார். ஊரார்கள் அவருக்கு வீண் மதிப்புக் கொடுத்துக்

கெடுத்து விட்டார்கள். அவரை அளவுடன் வைத்திருக்க வேண்டும். அவர் சோதிடம் கூறுவதில் ஒன்றுவது சரியேயில்லை.'' என்று பலவாறு இகழ்ந்துரைத்தான்.

ஆலங்குடியார்கள் இளம்பேகனையும் கணிமேதாவியையும் நன்கு அறிவார்கள். இளம்பேகன் கணிமேதாவியைக் குறித்து இழிவாகப் பேசியது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. அனைவரும் இளம்பேகனை முற்றிலும் வெறுத்தார்கள். சிலர் இளம்பேகனைப் பிடித்து, இரண்டொரு உதைகள் அவனுடைய வாய்க் கொழுப்பு அடங்கும்படியாகக் கொடுத்தார்கள். அது முதல் இளம்பேகன் எல்லோருக்கும் பகைவனாகி அனைவராலும் வெறுத்தொதுக்கப்பட்டான். ஆகையால் எவர்மீதும் பழிசொல்வது நல்லதாக மாட்டாது.

''கேளவை சொல்லின் எவ்வருக்கும் பகை''

(இ - ள்.) கேளவை - பிறர்மேல் பழிச்சொற்களை, சொல்லின்-ஒருவன் சொல்லுவான் ஆனால், எவ்வருக்கும் பகை - அவன் மக்கள் அனைவருக்கும் பகையாவான.

---

## உக. முனிவரின் சிவவழிபாடு

ஒரு காட்டிலே முனிவர் ஒருவர் தவஞ்செய்து கொண்டிருந்தார். அவர் பெரும்பாலும் கண்களை மூடிக்கொண்டு இறைவனை எண்ணிக்கொண்டிருப்பார். சில சமயங்களில் அறிவு நூல்களை ஆராய்ச்சி செய்வார். அந்த முனிவருடைய பெயர் நெடுஞ்சடையனார். அந்த முனிவருடைய சடை கணைக்கால் வரையில் தொங்கிக்கொண்டிருந்தது. அதனால்தான் அந்த முனிவருக்கு அப்பெயர் வழங்கியது.

நெடுஞ்சடையனார் தவஞ்செய்துகொண்டிருந்த காட்டுக்கு அண்மையில் சிவபெருமானுடைய திருக்கோயில் ஒன்று இருந்தது. நெடுஞ்சடையனார் ஒவ்வொருநாளும் காலையிலும் மாலையிலும் தவறாமல் அந்தத் திருக்கோயிலுக்குச் செல்வார். சிவபெருமானைப் போற்றி வழிபடுவார். ஒருநாள் வேறு சில முனிவர்கள் நெடுஞ்சடையனாரைப் பார்ப்பதற்காக அவர் தங்கியிருந்த இருப்பிடத்திற்கு வந்தார்கள். அப்பொழுது நெடுஞ்சடையனார் திருக்கோயிலுக்குச் சென்றிருந்தார். வந்த முனிவர்கள் சிறிது நேரம் தங்கியிருந்தார்கள். பிறகு நெடுஞ்சடையனார் வந்தார். அவரைப் பார்த்து அளவளாவி மகிழ்ந்தார்கள். நெடுஞ் சடையனாரைப் பார்த்துத், "தாங்கள் மெய்யறிவு கைவரப் பெற்றவர்களாயிற்றே. அவ்வாறாகத் திருககோயிலுக்கு ஏன் செல்லுதல் வேண்டும்? நம்மையொத்த முனிவர்களுக்குத் தவஞ்செய்வது ஒன்றே போதுமன்றோ?" என்றார்கள்.

நெடுஞ்சடையனார் வந்த முனிவர்களைப் பார்த்து, "நாம் தவஞ்செய்வதோடு மட்டும் நின்றுவிடுதல் கூடாது சிவபெருமானுடைய திருக்கோயிலுக்குச் சென்று இறைவழிபாடும் புரிதல்வேண்டும். அவ்வாறு செய்தால்தான் நமது தவஞ் சிறப்படையும். 'சிவத்தைப் பேணில் தவத்திற்கழகு' என்று பெரியோர்களும் கூறியிருக்கிறார்கள்," என்று விடையளித்தார்.

"சிவத்தைப் பேணில் தவத்திற் கழகு"

(இ - ள்.) சிவத்தைப் பேணில் - முதற் கடவுளாகிய இறைவனை வழிபட்டால், தவத்திற்கு அழகு-அஃது ஒருவர் செய்யும் தவத்திற்கு அழகைக் கொடுப்பதாகும்.

## உஉ. பொருள் இழந்த வணிகன்

திருநாகை என்னும் ஊரிலே பூந்தேரப்பன் என்னும் பெயருடைய வணிகன் ஒருவன் இருந்தான். பூந்தேரப்பனுடைய தந்தை தன் குலத்தொழிலாகிய வணிகத்தோடு நிலங்கள் பல வைத்துப் பயிர்த்தொழில் செய்தலையும் மேற்கொண்டிருந்தான். ஆனால் பூந்தேரப்பன் தன்னுடைய தந்தை இறந்த பிறகு நிலங்களை விற்றுப் பயிர்த்தொழிலை நிறுத்திவிட்டான். வணிகத்தொழிலை மட்டும் மேற்கொண்டிருந்தான். எதிர்பாராதவாறு அவனுக்கு வணிகத்துறையிலே மிகுந்த பொருளிழப்பு ஏற்பட்டது. பொருளை மிகுதியாக இழந்ததனால் எஞ்சியுள்ளவற்றிற்கும் ஆபத்து ஏற்படுமோ என்று அஞ்சினான். யாதுசெய்வதென்று எண்ணமிட்டான். பெரியோர் சிலரை யடுத்து அவர்களுடைய எண்ணத்தைக் கேட்டான்.

பெரியோர்கள் பூந்தேரப்பனைப் பார்த்து, "நீ வணிகத் தொழிலில் மட்டும் உன்னுடைய பொருளைப் போட்டிருப்பது தக்கதன்று. பயிர்த்தொழில் செய்யும் நிலங்களையும் வைத்திருக்கவேண்டும். வணிகத் துறையிலே திடீரென்று வீழ்ச்சியேற்பட்டால் அதனைத் தாங்கிக்கொள்வதற்குத் தக்கவாறு நிலபுலங்களை உடையவனாக இருத்தல்வேண்டும். நாம் நலத்தொடு வாழவிரும்பினால் பயிர்த்தொழில்தான் அதற்கு மிகுந்த உதவியாக இருக்கும். இதை யெண்ணித்தான், 'சீரைத்தேடின் ஏரைத்தேடு' என்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள்." என்று கூறினார்கள்.

அவர்கள் கூறியதைக் கேட்ட பூந்தோப்பன் "நம்முடைய தந்தை இதனையெண்ணித்தான் நிலங்களும் சேர்த்திருந்தார். நாம் அறிவில்லாமல் நிலத்தை விற்றுவிட்டோம். நிலம் வாங்கிப் பயிர்த் தொழிலையும் புரிவதுதான் நல்லது," என்று முடிவு செய்து நிலங்களும் வாங்கிக்கொண்டு பயிர்த்தொழிலையும் மேற்கொண்டான்.

"சீரைத் தேடின் ஏரைத் தேடு"

(இ - ள்.) சீரை-நலத்தை, தேடின்-உனக்குத் தேட விரும்புவாயானால், ஏரைத்தேடு-பயிரிடுந் தொழிலைத் தேடிக் கொள்வாயாக!

## உரு. உறவினரைப் போற்றிய உலகப்பன்

இலுப்பூர் என்னும் ஊரிலே உலகப்பன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். உலகப்பனுக்கு நாகப்பன் என்னும் பெயருடைய அண்ணன் ஒருவன் இருந்தான். உடன்பிறந்தார்கள் இருவரும் தந்தையினுடைய செல்வத்தைச் சரியாகப் பங்கிட்டுக் கொண்டு சிறப்புடன் வாழ்ந்திருந்தார்கள்.

உலகப்பன் மிகவும் நல்லவன். அவன் வறியவர்களாக இருந்த தன்னுடைய உறவினர்கள் அனைவரையும் தன்னுடைய வீட்டிலே சேர்த்துவைத்து உணவளித்துக்கொண் டிருந்தான். எப்பொழுது பார்த்தாலும் உலகப்பனுடைய வீட்டிலே அவனுடைய உறவினர்கள் ஐம்பது அறுபது பேர்களுக்குக் குறையாமல் இருந்துகொண்டே யிருப்பார்கள். சுற்

றத்தினர்மீது உலகப்பன் மிகுந்த பற்றுக்கொண்டிருந்தான்.

நாகப்பனோ உலகப்பனுக்கு முற்றிலும் மாறான வன். விருந்தினரைக் கண்டாலும் சுற்றத்தினரைக் கண்டாலும் மிகுந்த வெறுப்புடன் பேசுவான். அதனால் நாகப்பனுடைய வீட்டிலே யாரும் தங்குவதில்லை. நாகப்பன் வீட்டில் நாகப்பன், அவனுடைய மனைவி, இரண்டு மக்கள் ஆகியவர்களைத் தவிர வேறு யாரும்

ஒருநாள் இரவு இருபது நாழிகைக்குப் பத்துப் பேர் கள்ளர்கள் உலகப்பனுடைய வீட்டிற்குச் சென்றார்கள். அந்நேரத்தில்கூட அங்கு நாலைந்துபேர் பேசிக்கொண்டு படுத்திருந்தனர். அதனால் கள்ளர்கள் திரும்பி நாகப்பனுடைய வீட்டிற்குப் போனார்கள். அங்கு நாகப்பன் வீட்டைச் சேர்ந்தவர்களைத் தவிர வேறு யாரும் இல்லாதபடியால் வீட்டார்களைப் புடைத்துவிட்டு வேண்டியபடி கொள்ளை யடித்துச் சென்றார்கள். ஒவ்வொருவரும் சுற்றத்தாரைப் போற்றிப் பாதுகாத்துப் பக்கத்திலே வைத்துக்கொள்வதுதான் நல்லது.

"சுற்றத்திற்கழகு சூழவிருத்தல்"

(இ - ள்.) சுற்றத்திற்கு அழகு-உறவினர்கட்கு அழகாவது; சூழ இருத்தல்-தம் உறவினர்களைச் சூழ்ந்திருத்தலாம்.

---

## ௨௩. பல்லுடைபட்ட கலிங்கன்

கலிங்க நாட்டிலே ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கலிங்கன் என்னும் பெயரையுடைய ஓர் அரசன் இருந்தான். அவன் சூதாடுவதிலே கெட்டிக்காரன். சகுனியினுடைய மாணவன். சூதாடுதற்குரிய சூழ்ச்சிகளை யெல்லாம் சகுனியினிடம் கற்றறிந்தவன். சூதாடுதலிலே மிகவும் விருப்ப முடையவன். எப்பொழுது பார்த்தாலும் சூதாடிக்கொண்டே யிருப்பான்.

ஒருநாள் பலராமர் என்பவரும் உருக்குமன் என்பவனுஞ் சூதாடிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது கலிங்கன் அவர்கள் பக்கத்திலே இருந்தான். கலிங்கன் உருக்குமனுக்கு உதவியாக இருந்து சூழ்ச்சிகளைச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான். கலிங்கனுடைய சூழ்ச்சியால் பலராமர் வெற்றியடைய முடியவில்லை. பலராமர் தோற்கும் பொழுதெல்லாம் கலிங்கன் எள்ளி நகையாடிக்கொண்டிருந்தான். உருக்குமன் வஞ்சகமாகச் சூதாடுகிறான் என்பது பலராமருக்கு நன்கு தெரிந்தது. உடனே அவர் சினங்கொண்டெழுந்து உருக்குமனை அடித்தார். அதனால் அவன் இறந்தொழிந்தான்.

உருக்குமன் இறந்தொழிந்ததைக் கண்ட கலிங்கன் மிகுந்த அச்சத்தை யடைந்தான். அஞ்சி ஓடினான். பலராமர் அவன் ஓடிப்போகாதபடி தொடர்ந்து பிடித்தார். "என்னை இகழ்ந்து நகைத்த வாய் இது தானா?" என்று கூறி வாயிலே ஓங்கி ஓங்கிக் குத்தினார். கலிங்கன் வாயிலிருந்து குருதிசொரிந்தது. பற்கள் பாதிக்குமேல் உதிர்ந்து போய்விட்டன. பற்கள் போனாலும் போகின்றன; உயிர் போகாதது நாம்

செய்த நல்வினையே என்று விரைந்தோடிப் போனான். பிறகு அவன் பொய்ப் பற்கள் கட்டிக்கொண்டு காலங்கழித்தான். சிறந்த அரசனாக இருந்தும் சூதி லேயும் வாதிலேயும் இறங்கிய படியால்தான் பல் உடை படும் படியாக நேரிட்டது.

"சூதும் வாதும் வேதனை செய்யும்"

(இ - ள்.) சூதும் - சூதாடுதலும், வாதும் - சொற்போரிடுத லும், வேதனை செய்யும்-துன்பத்தை யுண்டாக்கும்.

## உரு. தவத்தை மறந்த பெரியார்

ஒரு காட்டிலே பெரியவர் ஒருவர் தவஞ்செய்து கொண்டிருந்தார். அவருடைய தவம் மிகுதிப்பட மிகுதிப்பட அவருடைய பெருமையும் மிகுதிப்பட்டுக் கொண்டிருந்தது. தவத்தின் சிறப்பால் அவருக்கு மெய்யறிவு சிறந்து விளங்கியது. முனிவருடைய பெருமை காட்டிலும் நாட்டிலும் எல்லோராலும் பேசப் பட்டது. பலபேர் பெரியவரைப் பார்த்தற்கு வந்த னர். பார்க்க வந்தவர்கள் பலவகையான அரிய உண வுப் பொருள்கள், பழங்கள், பொருள்கள் முதலியவை களைக் கொண்டுவந்தனர். வரும்படி நாள்தோறும் மிகுதிப்பட்டது.

பார்க்கவருகிற அன்பர்கள் கூட்டமும், வரும்படி யும் மிகுதிப்படவே பெரியவர் தவஞ்செய்வதைச் சிறிது சிறிதாகக் குறைத்து இறுதியில் அடியோடு நிறுத்திவிட்டார். வருகிறவர்களோடு அரட்டை யடிப் பதற்கும், வருகிற அரும் பொருள்களை நுகர்வதற்

குமே அவருடைய பொழுது சரியாகப் போய் விட்டது.

பெரியவர் தவத்தை நிறுத்திவிடவே அவருடைய மெய்யறிவு குன்றத் தொடங்கியது. நாளடைவில் அவர் மற்றவர்களைப் போன்று ஒரு பொதுவான மனிதராகவே மாறிவிட்டார். அவரைக் காண்பதற்கு வரும் கூட்டமும் வரும்படியும் அடியோடு நின்று போயின. அதன் பிறகுதான் பெரியவர் விழிப் படைந்தார். 'செய்தவம் மறந்தால் கைதவம் ஆளும்' என்னும் பெரியார் வாக்கும் அவருக்கு விளக்க மாகியது.

"செய்தவம் மறந்தால் கைதவம் ஆளும்"

(இ - ள்.) *செய்தவம் மறந்தால்-செய்கிற தவத்தை ஒருவர் மறந்தால், கைதவம் ஆளும் அவ்வாறு மறந்தவரைப் பொய்யாகிய அறிவின்மையானது அடிமையாகக் கொண்டுவிடும்.*

## உகூ. வீடுபேறடைந்த வீரப்பர்

செட்டிமார் நாட்டிலே அளகாபுரி என்னும் ஊரிலே வீரப்ப செட்டியார் என்று பெயருடைய ஒரு செட்டியார் இருந்தார். அவருக்குப் பொருள் மிகுதி யாக இருந்தது. வாணிகத் துறையில் முயன்று மேலும் மிகுதியாகப் பொருளைத் தேடினார். தேடிய பொருளை அவர் பெட்டியிற் பூட்டியோ மண்ணிற் போட்டுப் புதைத்தோ வைக்கவில்லை. ஏழை எளிய வர்களுக்குத் தகுந்த உதவி செய்தார். சில திருக் கோயில்களுக்குத் திருப்பணி செய்தார். இயன்ற

வழிகளில் எல்லாம் அறங்கள் செய்தார். நுகர வேண்டிய உலக நன்மைகளையும் இனிது நுகர்ந்தார்.

செட்டியார் அறநெறியிலே மிகுதியாக உள்ளஞ் செலுத்தி நின்றபடியால் அவருக்கு நல்வினை மிகுதி யாகப் பெருகுவதாயிற்று. நல்வினையின் பெருக்கால் உள்ளம் வீடுபேற்று வழியிலே சென்றது. சில பெரி யோர்களை யடுத்து அறிவுநூல்களைப் பயின்றார். பயின்றபடியே ஒழுகினர். அதனால் அவருக்கு மெய் யறிவு உண்டாகியது. மெய்யறிவின் பெருக்கால் அவ ருடைய உள்ளம் இவ்வுலகப் பற்றைச் சிறிதுசிறிதாக வெறுத் தொதுக்கியது. இறுதியில் அவர் எப்பொரு ளின் மேலும் பற்றற்றவரானார்.

வீரப்ப செட்டியார் மெய்யறிவு கைவரப் பெற்ற மேன்மையுடையவ ரென்பது மிகுவிரைவில் எங்கும் பரவியது. மக்கள் கூட்டங் கூட்டமாகத் திரண்டு செட்டியாரைப் புகழ்ந்து போற்றினர். செட்டியார் சில காலம் மெய்யறிவாளராக உலகில் விளங்கிக் கொண்டிருந்து இறுதியில் வீடுபேற்றை யடைந்தார். பொருளால் எல்லா நலங்களையும் அடையலாம் என் பது செட்டியார்பால் நன்கு விளங்கியது.

"சோக்கர் என்பவர் அத்தம் பெறுவர்"

(இ - ள்.) சொக்கர் என்பவர் - பொருளுடையவர் என்று சொல்லப் பெறுவோர், அத்தம் பெறுவர்-அறம் இன்பம் வீடு முத லிய மற்றைய நன்மைகளைப் பெறுவர்.

# ௨௭. இரு சோம்பேறிகள்

பூவணம் என்னும் ஊரிலே இரண்டு சோம்பேறிகள் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் பெயர் வடுகப்பன்; மற்றவன் பெயர் மன்னப்பன். அவர்களிருவரும் பள்ளிக்கூடத்து நண்பர்கள். கல்விப் பயிற்சிக்காகப் பள்ளிக்கூடத்திற் படித்துக்கொண்டிருக்கும்போதே நன்கு படிக்காமல் விளையாடித் திரியும் பழக்கத்தை மேற்கொண்டார்கள். அதனால் அவர்களுக்குப் படிப்பும் ஏறவில்லை; அகந்தைதான் ஏறிக்கொண்டிருந்தது. பள்ளிக்கூடத்தை விட்ட பிறகு இருவரும் திண்ணையிற் படுத்துத் தூங்கும் பழக்கத்தை மேற்கொண்டார்கள். அவர்கள் தூங்கும்போது உண்பதற்குக் கூட அவர்களை எழுப்புதல் கூடாது. அவ்வாறின்றி எழுப்பினால் எழுப்புபவர்களை அடித்து விடுவார்கள். தூங்கும் பழக்கத்தால் அவர்களுக்குச் சோம்பேறித் தன்மை மிகுதிப் பட்டுக்கொண்டிருந்தது. வடுகப்பன் முக்காற் சோம்பேறி; மன்னப்பன் முழுச்சோம்பேறி. இருவரும் ஏறக்குறைய ஒரே அளவையுடையவர்கள்.

நல்ல காளைப்பருவத்திலே இருவரும் தங்கள் தங்கள் பெற்றோரை இழந்தனர். அதன் பிறகு அவர்களுக்கு வயிற்றுப் பாட்டிற்கே திண்டாட்டமாகி விட்டது. அவர்களுடைய வீடுவாசல் முதலிய பொருள்களையுஞ் சூழ்ச்சிக்காரர்கள் சிலர் சூழ்ச்சியாகக் கைப்பற்றி விட்டனர். எல்லாந் தொலைந்த பிறகு இருவரும் பட்டினியாகக் கிடக்குமாறு நேரிட்டது. பட்டினியை எத்தனை நாளைக்குத் தாங்கமுடியும்? வேறுவழியில்லாத படியால் இருவரும் ஒன்றாகவே பிச்சை

எடுக்கத் தொடங்கினார்கள். உடல்வன்மையும் தோற்றமும் வாய்ந்த அவர்களுக்குச் சரியாகப் பிச்சை கிடைக்கவில்லை. ஊர்ஊராக அலைந்து திரிந்து வருந்தினார்கள். சோம்பேறித்தனத்தை மேற்கொண்டால் இவ்வாறுதான் தொல்லைப் படும்படியாக நேரிடும்.

"சோம்பர் என்பவர் தேம்பித்திரிவர்"

(இ - ள்.) சோம்பர் என்பவர் - சோம்பலுடையவர் என்று சொல்லப் பெறுவோர், தேம்பித் திரிவர்-வறுமையினாலே வருந்தியலைவார்கள்.

## உ அ. நண்டால் உயிர்பிழைத்த நல்லப்பன்

ஓர் ஊரிலே முன் காலத்திலே **நல்லப்பன்** என்னும் பெயருடைய சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் தன் தாயினிடத்திலே மிகுந்த அன்புடையவன். ஒருவர், 'நீ உன்னுடைய தாயை நாடோறும் போற்றுவாயானால் எல்லா நலமும் அடைவாய்,' என்று அறிவுரை கூறியிருந்தார். அவ்வுரைப்படியே நல்லப்பன் நாடோறும் தன்னுடைய தாயை வணங்கி அவள் சொற்படியே நடந்துகொண்டிருந்தான். அதனால் அவனுக்குப் பல நன்மைகள் உண்டாகிக் கொண்டிருந்தன.

ஒருநாள் நல்லப்பன் ஒருவேலையை முன்னிட்டு வேறோர் ஊருக்குச் செல்லும்படியாக நேர்ந்தது. அவன் தான் வேறோர் ஊருக்குப்போய்விட்டுவர வேண்டிய செய்தியைக் கூறிவிட்டுப் புறப்பட்டான்.

அவனுடைய தாய் அவனைப் பார்த்துத், 'தனியே செல்வது தக்கதன்று; தகுந்த துணையுடன் செல்ல வேண்டும்' என்று கூறினாள். துணைக்கு யாரையாவது அனுப்புவதற்குப் பார்த்தாள். யாரும் அகப்படவில்லை. பிறகு ஒரு நண்டைப் பிடித்தாள். அதனை ஒரு கலயத்திற்போட்டு 'இதனையேனும் துணையாகக் கொண்டு செல்வாயாக!' என்று கூறினாள்.

நல்லப்பன் அப்படியே எடுத்துக்கொண்டு சென்றான். களைப்பினால் வழியில் ஒரு மரத்தடியிற் படுத்து உறங்கினான். அப்பொழுது அங்கு ஒரு நல்ல பாம்பு வந்தது. அது நல்லப்பனைக் கடிப்பதற்குச் சென்றது. கலயத்தில் யாதுளது என்று அறிய அதற்குள் தலையைவிட்டது. நண்டு தன்னுடைய கொடுக்கால் இடுக்கிப் பாம்பின் தலையைத் துண்டித்து விட்டது.

விழித்தெழுந்த நல்லப்பன் தான் பாம்பால் உயிர் பிழைத்ததை அறிந்தான். வேலையை முடித்துக்கொண்டு ஊருக்குச் சென்றான். வழியில் நிகழ்ந்ததைத் தாயிடம் கூறி வணங்கினான். மேலும் தன்னுடைய தாயையே வழிபடு கடவுளாகக்கொண்டு போற்றினான்.

### "தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை"

(இ - ள்.) தாயில் சிறந்த - தாயைப் பார்க்கினும் சிறப்பினை யுடைய, ஒரு கோயிலும் இல்லை - ஒரு கோயிலும் இவ்வுலகத்திலே இல்லை.

## உ௪. பொருள்தேடிய மாவளத்தான்

முன்னாளிலே காவிரிப்பூம்பட்டினம் என்னும் ஊரிலே மாவளத்தான் என்னும் பெயருடைய ஒரு வணிகன் இருந்தான். அந்தக் காவிரிப்பூம்பட்டினத்திலே பல வணிகர்கள் இருந்தார்கள். அவர்கள் அனைவரும் உள்ளூரில் தானே பலவகையான வணிகங்களில் ஈடுபட்டிருந்தார்கள். எல்லோருமே வணிகத் தொழிலில் ஒரே ஊரில் ஈடுபட்டிருந்தபடியால் வணிகம் நன்கு நடை பெறவில்லை. எல்லோருடைய வணிகமும் மந்தமாகவே இருந்தது. மாவளத்தானுக்கு அடிக்கடி மிகுந்த பொருளிழப்பு ஏற்பட்டது.

அவன் தனக்குப் பொருளிழப்பு ஏற்படுவதையும் உள்ளூரில் எல்லோருமே வணிகத்தில் ஈடுபட்டிருத்தலையும் பார்த்துப் பொருளை மிகுதியாகத் தேடுதற்கு வழி யாது என்று ஆராய்ந்தான். நீர்மேல் செல்லக் கூடியதாகவும் மழையில் பொருள்கள் நனையாதவாறும் மரங்களைக்கொண்டு ஒரு கப்பல் செய்தான். அதில் தன்னுடைய பொருள்களை ஏற்றிக்கொண்டு இரங்கூன் முதலிய வெளி நாடுகட்குச் சென்று வணிகம் செய்வதென்று முடிவுசெய்தான்.

முதன் முதலில் காவிரிப்பூம்பட்டினத்தில் மாவளத்தான்தான் மரக்கலஞ் செய்து கடல்மேல் பயணஞ்செய்யத் தொடங்கினன். மக்கள் மாவளத்தான் செயலைக் கண்டு அச்சமடைந்தார்கள். சிலர் அவ்வாறு செல்ல வேண்டாம் என்றும் தடுத்தார்கள். ஆனால், மாவளத்தான் அவர்கள் கூறியதைக் கேட்காமலே புறப்பட்டான்.

பல நாள்கள் கடலில் பயணஞ்செய்த பிறகு கப்பல் இரங்கூனை அடைந்தது. மாவளத்தான் தான் கொண்டு சென்ற பொருள்களை மக்களுக்குக் காட்டினான். தான் தொலைப்பட்டு வந்திருப்பதால் மிகுந்த விலைகொடுக்கவேண்டு மென்றும் கேட்டுக்கொண்டான். மாவளத்தான் சொன்ன விலையைக் கொடுத்து மக்கள் பொருள்களை வாங்கினார்கள்.

மாவளத்தான் தான் கொண்டுசென்ற பொருள்களை எல்லாம் விற்று மிகுந்த பொருளுடன் காவிரிப் பூம்பட்டினத்திற்குத் திரும்பினான். பலரும் மாவளத்தானைப் பின்பற்றிக்கடல்மீது சென்று வணிகஞ் செய்யத் தொடங்கினார்கள். இதன் பிறகுதான், கடலிலே சென்று வாணிகஞ் செய்யும் பழக்கம் தொடங்கியது.

"திரைகடல் ஓடியும் திரவியம் தேடு"

(இ - ள்.) திரைகடல் - அலைவீசுகின்ற கடலிலே, ஓடியும் - கப்பலேறிச் சென்றாயினும், திரவியம் - பொருளை, தேடு-தேடி அடைவாயாக!

---

## ௩௦. சினம் வளர்ந்து போர் நடந்தது

பனையூர் என்னும் ஊரிலே மளவன் என்பவனும் மாமலை என்பவனும் மிகுந்த நட்பினர்களாக இருந்தார்கள். இருவரும் பக்கத்து வீட்டுக்காரர்கள். இருவரும் நெருங்கிய உறவினர்கள் அல்லர். ஆயினும் நன்மை தீமைகளிலே நன்றாகக் கலந்துகொள்வார்கள். நட்புக் கடுமையாக வளர்ந்துகொண்டிருந்தது.

'கடுங்காற்று மழைகாட்டும் கடுநட்பு பகைகாட்டும்' என்பது பழமொழி. பழமொழி மளவனிடத்திலும்

வடமலையிடத்திலும் உண்மையாக முடிந்து விட்டது. ஒரு சிறு காரணத்தை முன்னிட்டு இருவருக்கும் சொற்போர் தொடங்கியது. சொற்போர் வளர்ந்து கடுஞ் சினத்திற்போய் நின்றது. இருவரில் ஒருவரு டைய சினமும் ஆறுவதாகத் தெரியவில்லை.

நாளடைவில் இருவர் சினமும் வளர்ந்து கொண்டே சென்றது. இருவரும் ஒருவரை யொருவர் கடுமையாக இகழ்ந்து கொண்டார்கள். பிறகு கையை நீட்டி அடித்துக் கொள்ளவுந் தொடங்கினார்கள். இரு வரும் போரிடுதலைக் கண்ட சிலர் விலக்குவதற்கு முயன்றார்கள். ஆனால் பயன் ஏற்படவில்லை. கைச் சண்டை மாறித் தடிச் சண்டையிலே இறங்கியதில் இருவருடைய மண்டைகளும் உடைந்து போயின.

இருவரையும் மருத்துவசாலைக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். மளவனுக்குக் காயங் கடுமை யாக இருந்தபடியால் அவன் மருத்துவசாலையிலே இறந்து போனான். பிறகு வடமலைமீது கொலை வழக்கு ஏற்பட்டது. இறுதியில் வடமலைக்கு மரண தண்டனை கிடைத்தது. அவனுந் தூக்கிலே போடப்பட்டு இறந் தான். ஆறாத சினம் இவ்வாறு மனிதனுக்கு அழி வையுண்டாக்கும் என்பதற்கு இவர்களிருவருமே எடுத்துக் காட்டாக முடிந்தார்கள்.

"தீராக் கோபம் போரா முடியும்"

(இ - ள்.) தீராக்கோபம்-நீங்காத சினமானது, போரா முடி யும் - பிறகு அடிதடிப்போராக முடிந்து விடும்.

---

## ௩௧. கலங்காத அரக்கி

சென்னை நகரிலே பொன்னுக்கண் என்னும் பெயரையுடைய ஒருமனிதன் இருந்தான். அவன் ஒரு கொலை வழக்கிலே அகப்பட்டுக்கொண்டான். உண்மையில் பொன்னுக்கண் கொலை செய்யவில்லை. கொலை செய்தவர்களோடு சிறிது பழக்கமுடையவனாக இருந்தமையைக் கொண்டே அவனையுங் கொலை வழக்கில் சேர்த்து விட்டார்கள். வழக்கின் இறுதியிலே அனைவருக்கும் தூக்குத்தண்டனை ஏற்படுத்தப் பெற்றது. சிலர் பொன்னுக்கண்ணனுடைய மனைவி ஏலக்குழலி என்பவளிடத்திலே அந்தச் செய்தியைத் தெரியப்படுத்தினார்கள்.

கணவனுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டதைக் கேட்டதும் ஏலக்குழலி ஒப்பாரிவைத்துப் புலம்பி அழுவாள் என்று அவளிடஞ் செய்தி சொன்னவர்கள் எதிர் பார்த்தார்கள். ஆனால், ஏலக்குழலி தன் கணவனுக்கு ஏற்படுத்தப் பெற்றுள்ள தண்டனையைக் கேட்டுச் சிறிதும் கலங்கவில்லை. "அப்படியா?" என்று கேட்டுவிட்டு வழக்கம்போலவே இருந்தாள். பொன்னுக்கண் தனக்கு விதிக்கப்பட்ட தண்டனையை எதிர்த்து உயர்தர நீதிமன்றத்தில் வழக்காடினான். அங்கு அவனுடைய குற்றமற்ற தன்மை மெய்ப்பிக்கப்பட்டது. அவன் விடுதலை யடைந்து வெளி வந்தான்.

சிலர் பொன்னுக்கண்ணனிடம், "உன் கொலைத் தண்டனையைக் கேட்டு நாங்கள் எல்லாம் கலங்கிப் போனோம். ஆனால், உன்மனைவியோ சிறிதும் வருந்தவேயில்லை. 'அப்படியா?' என்று கேட்டுவிட்டுப்

பேசாமலிருந்தாள்" என்று கூறினார்கள். தன் மனைவியின் குணம் முன்னரே பொன்னுக்கண்ணுக்குப் பிடிக்கவில்லை. அதனால் வெறுப்படைந்திருந்த அவன் இச்செய்தியைக் கேட்டதும் இவளோடு குடித்தனம் பண்ணுவது மடியில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருப்பதைப் போன்றதாகும் என்று கூறிவிட்டுத் துறவியாகப் போய்விட்டான்.

"துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு"

(இ - ள்.) துடியா-தம் கணவருக்கொரு துன்பம் வந்ததைத் தெரிந்தும் மனம் வருந்திப் பதறாத, பெண்டிர்-பெண்கள், மடியில் நெருப்பு-மடியிற் கட்டிக் கொள்ளப் பெற்ற நெருப்பைப் போன்றவர்களாவர்.

## கஉ. தெய்வங்களை இகழ்ந்த முனிவர்

ஒரு காட்டிலே முனிவர் ஒருவர் தவஞ்செய்து கொண்டிருந்தார். அவர் முதலில் ஐம்பொறிகளையும் அடக்கித் தவத்தை மனவுறுதியுடன் செய்துகொண்டிருந்தார். அதனால் அவருக்குத் தவம் வளர்ந்து பெருகியது. முனிவருக்குப் பல வகையான ஆற்றல்கள் உண்டாயின. அவருடைய பெயர் திருவிளங்க முனிவர். முனிவர்களுக்குக் கைகூடும் எண்வகை ஆற்றல்கள் (அட்டமாசித்தி) திருவிளங்க முனிவருக்குக் கைகூடியிருந்தன. முனிவர் நினைத்தவுடனே நினைத்த இடங்களுக்குச் செல்லக் கூடியவர். ஒரே நாளில் காசியில் இருப்பார்; இராமேசுரத்தில் இருப்பார்; கைலையில் இருப்பார்; தில்லையில் இருப்பார்; அருணையில் இருப்பார்.

நாளடைவில் முனிவருக்கு ஆணவம் வளர்ந்தது. எதையும் பொருட்படுத்தாத செருக்கு அவருக்கு உண்டாயிற்று. "தெய்வங்களும் நம்மைப் போன்ற ஆற்றலுடையவைகள் தாம். மேலும் ஆராய்ந்தால் நம்மைப் பார்க்கினும் தெய்வங்கள் ஆற்றலிற் குறைந்தவைகள் என்றே சொல்லவேண்டும். ஆகையால் நாம் தெய்வங்களை வணங்க வேண்டியதில்லை; வணங்குவது வீணேயாகும்," என்னும் முடிவுக்கு வந்தார்.

நாளடைவில் திருவிளங்க முனிவருக்கு இந்த எண்ணம் மிகுந்தது. தெய்வங்கள் பலவற்றை இகழவும் தொடங்கினர். அதனால் தெய்வங்களின் சீற்றம் முனிவருக்கு உண்டாயிற்று. அவருடைய எண்வகை ஆற்றல்கள் ஒவ்வொன்றாக மறையத் தொடங்கின. முனிவர் விண்வழியாகச் செல்வதற்கு மேலெழத் தொடங்கினர் தொப்பென்று கீழே விழலானார். ஆற்றல் குறையவே அவருடைய செருக்கடங்கிற்று. எனவே, தெய்வஞ் சீறுமாறு யாரும் நடத்தல் கூடாது.

"தெய்வம் சீறில் கைதவம் மாளும்"

(இ - ள்.) தெய்வம் சீறில்-தெய்வமானது ஒருவனைச் சினந்தால், கைதவம் மாளும்-அவனுக்குக் கைகூடியிருந்த தவமானது அழிந்து போகும்.

## ௩௩. பெருஞ்செலவு செய்த பெருமாள்

களக்காடு என்னும் ஊரிலே ஐயம்பெருமாள் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். ஐயம்பெருமாளுடைய தந்தை பெருஞ்செல்வனாக விளங்கியிருந்த படியால் ஐயம்பெருமாள் எத்தகைய கவலையும் இல்லாதவனாகக் காலந் தள்ளிக் கொண்டிருந்தான். அவனுடைய தந்தை இறந்து போனான்.

ஐயம்பெருமாளுடைய பாடு கொண்டாட்டம் ஆகிவிட்டது. நண்பர்கள் சிலரைச் சேர்த்துக்கொண்டு மனம்போனவாறு செலவுசெய்தான். தன்னுடைய தந்தை நடத்திய வாணிகத்தையும் நிறுத்தி விட்டான். செல்வத்தைப் பெருக்குவதற்கு எத்தகைய முயற்சியுஞ் செய்யவில்லை. 'நிலபுலம் முதலிய செல்வங்கள் தான் மிகுதியாக இருக்கின்றனவே; மேலும் ஏன் தொல்லைப்பட்டுச் செல்வம் தேடவேண்டும்' என்று எண்ணினான்.

ஆண்டுகள் சில சென்றன. ஐயம்பெருமாள் நிலபுலங்களின்மீது கடன்வாங்கி வீண்செலவு செய்து கொண்டிருந்தான். ஐயம்பெருமாளுடைய நண்பர்கள் ஐயம்பெருமாளுடைய வீண்செலவுக்கு மனக்கிளர்ச்சியை (உற்சாகத்தை) உண்டு பண்ணிக்கொண்டிருந்தார்கள். மேலுஞ் சில ஆண்டுகளில் கடன் மிகுதியாக வளர்ந்துவிட்டது. கடன் கொடுத்தவர்கள் முறைமன்றத்திலே வழக்கிட்டு நிலபுலங்கள் வீடு வாசல்கள் முதலியவைகளைக் கைப்பற்றிக்கொண்டார்கள். சிலருடைய கடனைத் தீர்ப்பதற்கு எத்தகைய வழியுமே இல்லாமற்போய்விட்டது.

ஐயம்பெருமாளுடைய வறிய நிலையைக்கண்ட அவன் நண்பர்கள் அவனை விட்டுவிட்டுப் பிரிந்து விட்டார்கள். "நீ எதற்கும் அஞ்ச வேண்டாம் நாங்கள் இருக்கிறோம் உனக்கு எந்தவகையான தொல்லையும் வராமல் பார்த்துக்கொள்ளுகிறோம்" என்று உறுதி கூறியவர்கள் இப்போது ஐயம்பெருமாளைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. சிலர் ஐயம்பெருமாளைப் பிடித்துக் கடனைத் திருப்பிக்கொடுக்காததற்காகச் சிறையிலே அடைத்து விட்டார்கள். அவன் சிறையிலே கிடந்து துன்பப்பட்டான். செல்வம் மேன்மேலும் பெருகுவதற்கு வழிசெய்து கொள்ளாமல் செலவுமட்டும் வீணாகச் செய்துகொண்டிருந்தால் இவ்வாறுதான் துன்பம் நேரிடும்.

"தேடா தழிக்கில் பாடா முடியும்"

(இ-ள்.) தேடாது அழிக்கில்-ஒருவன் தன்னுடைய செல்வம் மேன்மேலும் பெருகுவதற்கு வழிசெய்துகொள்ளாமல் செலவு மட்டும் செய்துகொண்டிருப்பின், பாடா முடியும்-பிறகு அவனுக்கு வருத்தமாக முடிவு பெறும்.

## ௩௬. ஏர் பிடித்த இரவலன்

பெருங்குளத்தூர் என்னும் ஊரிலே ஒரு பிச்சைக்காரன் இருந்தான். அவனுடைய பெயர் **சின்னண்ணன்.** அவன் பல ஊர்களிலும் பிச்சை யெடுத்துக்கொண்டு திரிந்தான். பிச்சையெடுக்கும் இடங்களில் கண்டவர்களை யெல்லாம் தொழுது பல்லைக் காட்டிக் கெஞ்சுவது சின்னண்ணனுடைய பழக்கம்.

சின்னண்ணன் எவ்வாறு கெஞ்சிக் கூத்தாடினாலும் அவன் வயிற்றுக்குப் போதிய அளவு பிச்சை அகப்படுவதில்லை. சில நாட்கள் அவன் பட்டினி கிடக்கும்படி யாகவும் நேரிடும். அதனால் சின்னண்ணன் மிகுந்த தொல்லைப்பட்டான். பிச்சை யெடுக்கும் வேலையை விட்டுவிட்டு வேறு ஏதேனும் ஒரு தொழிலைச் செய்ய வேண்டுமென்று முடிவு செய்தான்.

பெருங்குளத்தூரிலே ஒரு செல்வனுக்கு மிகுதியாக விளைநிலங்கள் இருந்தன. சின்னண்ணன் அச் செல்வனிடம் சென்று தான் உழுதொழிலை மேற்கொள்ள விரும்புவதாகவும் தனக்கு உதவிபுரிய வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டான்.

செல்வன் மிகவும் நல்லவன். சின்னண்ணனுக்கு இரண்டு மூன்று ஏக்கர் நிலமும் மாடு கலப்பை விதை முதலியனவுங் கொடுத்து மிகவும் உதவி செய்தான். அதனால் சின்னண்ணன் பயிர்த்தொழிலை மேற்கொண்டான். முதலாண்டிலேயே நல்ல பலன் கிடைத்தது. செல்வனுக்குக் கொடுக்கவேண்டிய கடன்களையுங் கொடுத்துவிட்டு மேலும் அத்தொழிலிலேயே ஈடுபட்டுச் சிறப்பாக வாழ்ந்தான்.

ஒருநாள் சிலர், “நீ முன் பிச்சைக்காரனாக இருந்தாயே; அதனை விட்டுவிட்டு ஏர்த்தொழிலிலே ஏன் இறங்கினாய்?” என்று சின்னண்ணனைப் பார்த்துக் கேட்டார்கள். அதற்குச் சின்னண்ணன், “ஒருவரைத் தொழுது பிழைப்பதைவிட நிலத்தை உழுது பிழைப்பது மிகவும் நல்லது என்றுதான் இத்

தொழிலை மேற்கொண்டேன்," என்று பதிலுரைத்தான்.

"தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது"

(இ - ள்.) தொழுது - ஒருவரை வணங்கி, ஊண் - உண்ணும் உணவினது, சுவையின் - சுவையைப் பார்க்கிலும், உழுது-பயிர்த் தொழில் செய்து, ஊண் - உண்ணும் உணவின் சுவை, இனிது - இனிமை தருவதாம்.

## ௩௫. கண்ணபிரானும் குசேலரும்

குசேலருக்கு இருபத்தேழு மக்கள் தோன்றினார்கள். அதனால் வறுமைப் பேய் குசேலரைப் பிடித்துக்கொண்டு பலமாக ஆட்டியது. அதனால் அவர் மிகுந்த துன்பப்பட்டார். குசேலருடைய மனைவி மக்களைக் காப்பாற்ற முடியாமல் திணறினாள். தன் கணவனைப் பார்த்து, "உங்கள் நண்பராகிய கண்ண பிரானைப் பார்த்து விட்டு வாருங்கள். உங்கள் வறுமைநிலையை அவருக்குக் கூறினால் தகுந்தபடி உதவி செய்வார்" என்று சொல்லித் துவாரகைக்கு அனுப்பினாள்.

மனைவியின் சொற்படியே குசேலர் துவாரகைக் குச் சென்றார். அவருடைய உடையே அவருடைய வறிய நிலைமையைப் புலப்படுத்திக் கொண்டிருந்தது. இளமைக் காலத்து உயிர் நண்பராகிய குசேலரைக் கண்ட கண்ணபிரான் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தார். அளவற்ற அன்புடன் இன்னுரையாடி அளவளாவி னார். சில நாட்கள் கண்ணபிரானுடன் தங்கியிருந் தார் குசேலர்.

கண்ணபிரானும் குசேலரும் இளமைக் காலத்தில் ஒன்றாகக் கல்வி பயின்றவர்கள். மிகவும் நெருங்கிய நண்பர்கள். அவ்வாறிருந்துங் கூடக் குசேலர் தமது வறுமை நிலைமையைக் கண்ணபிரானுக்குச் சொல்லவில்லை. பட்டினியால் இறந்து பட்டாலுஞ் சரி; நம்முடைய ஏழ்மைநிலையை வெளிப்படுத்தக் கூடாது என்னும் எண்ணத்துடன் தம்முடைய ஊருக்குப் புறப்பட்டு விட்டார். ஆனால், எல்லாவற்றையும் உணர்ந்த கண்ணபிரானே, குசேலருடைய நிலைமையை அறிவுக்கண்ணால் உணர்ந்து திருவருள் செய்தார். தோழனோடும் ஏழைமையைப் பேசாத குசேலருடைய மாண்பு போற்றத் தக்க தன்றோ?

"தோழ னோடும் ஏழைமை பேசேல்"

(இ - ள்.) தோழனோடும்-நண்பனுடனாயினும், ஏழைமை-உனக்குள்ள எளிய நிலைமையை, பேசேல் - பேசாதே.

## ௩௯. பிணப்பெட்டியும் பெண்களும்

வடநாட்டில் இரண்டுபெண்கள் புகைவண்டியிற் சென்றுகொண்டிருந்தனர். இந்தப் பெண்களுக்குப் பிறகு வண்டியில் ஏறியபெண் ஒருத்தி ஒரு சிறிய கைப்பெட்டியை வண்டியில் வைத்துவிட்டு இறங்கிச் செல்வதைப் பார்த்தனர். இறங்கிச் செல்லும் பெண், மறதியாக அப் பெட்டியைப் புகைவண்டியில் வைத்துவிட்டுப் போவதாக அவர்கள் எண்ணிக் கொண்டனர். பெட்டியில் அணிகலன்கள் துணி மணிகள் முதலியன இருத்தல் கூடும் என்று நினைத்தனர். ஒவ்வொருவரும் அப் பெட்டி தத்தமக்கு உரியதென்று சொற்போரிட்டுக் கலாம் விளைத்தனர்.

பெண்களின் போராட்டத்தைப் பார்த்தார்கள் வண்டியில் இருந்தவர்கள். அவர்கள் பெட்டியின் பொருட்டுப் போரிடுஞ் செய்தியை வண்டிப் பொறுப் பாளிக்கு (கார்டுக்கு)த் தெரியப்படுத்தினார்கள். வண் டியின் கார்டு விரைந்துவந்தார். போரிடும் பெண் களைப் பார்த்துப், 'பெட்டியில் யாதுளது?' என்று கேட்டார். இரண்டு பெண்களும் பதில் உரைக்க முடியாமல் விழித்தனர்.

ஐயங்கொண்ட அவர் அப்பெட்டியின் பூட்டை உடைத்துத் திறந்து பார்த்தார். அதற்குள் ஒரு சிறு குழந்தையின் பிணம் இருந்தது. அதனைக் கண்டு இருபெண்களும் அலறினர். அந்தோ! நாம் சிறிதும் எண்ணிப் பாராமல் பதற்றத்துடன் போரிட் டோமே இவ்வாறு வந்து முடிந்ததே; இப்போது கொலைக் குற்றத்தினின்றும் தப்பவேண்டுமே என் னும் ஏக்கத்துடன் அவர்கள் வண்டிக் கார்டைப் பார்த்து, "ஐயா! இப்பெட்டி எங்களுடையதும் அன்று; நாங்கள் விளையாட்டாகப் போரிட்டோம்," என்று உண்மையை விளக்கிக் கூறிப் பல்லைக் காட்டினர்.

வண்டியிலிருந்த மக்கள் அவ்விருவருடைய நிலை மையையுங் கண்டு விழுந்து விழுந்து நகைத்தனர். அப் பெண்கள் இருவரும் நாணத்தால் தலை குனிந்து வருந்தினர். சிறிய காரியமாயினும் நன்றாக ஆராய்ந்து செய்யவேண்டி யிருக்க, நாம் இவ்வாறு சிக்கிக்கொண் டோமே; நாம் இதிலிருந்து எவ்வாறேனும் விடுபட்டுப் போனால் போதும் என்று அவர்கள் கலங்கினர். எண்ணுமற் செய்யுஞ் செயல்களால் இவ்வாறுதான் இடுக்கண் உண்டாகும்.

"நுண்ணிய கருமமும் எண்ணித் துணி"

(இ - ள்.) நுண்ணிய கருமமும்-ஒரு சிறிய செய்கையையும், எண்ணி-நன்ருக ஆராய்ந்து, துணி-இது செய்யத் தக்கது செய்யத் தகாதது என்று உறுதி செய்த பின்னரே செய்வாயாக!

---

## ௬௭. இறைவழிபாடு எவ்விடத்தில்?

தமிழ்மறையாகிய திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர், தாம் செய்யும் தொழிலாக நெய்யுந் தொழிலையே தெரிந்தெடுத்து அதனை மேற்கொண்டார். தம்முடைய மாணவர் ஒருவரிடத்திலே இருந்து நூல் வாங்கினர். அதனை நெய்து ஆடையாக்கி அதனுற் கிடைக்கும் சிறு வருவாயைக் கொண்டே இல்லறத்தை இனிது நடத்தினர்.

ஒருநாள் நூல்வாங்குவதற்காக; நூல் வணிகஞ் செய்தவரும் தம்முடைய மாணவரும் ஆகிய ஒரு செட்டியார் இல்லத்திற்குச் சென்ருர். அப்போது காலை நேரம்; செட்டியார் இறைவழிபாடு (சிவபூசை) செய்து கொண்டிருந்தார். திருவள்ளுவரைக் கண்டதும் செட்டியாருடைய உறவினர்கள், "செட்டியார் இறைவழிபாடு செய்துகொண்டிருக்கிருர்," என்று கூறினர்கள்.

திருவள்ளுவர் அதனைக் கேட்டுக்கொண்டு வீட்டிலே உட்கார்ந்திருந்தார். நீண்டநேரம் ஆகியும் செட்டியாருடைய இறைவழிபாடு முடிவு பெறவில்லை. செட்டியார் ஒழுங்காகப் பூசை செய்கிருரா என்று திருவள்ளுவர் அறிவுக்கண் கொண்டு பார்த்தார். செட்டியாருடைய மனம் அடங்கவில்லை. கைதான் பூசை செய்துகொண்டிருந்ததே தவிர மனம் பட்டி

மாடுபோல் திரிந்துகொண்டிருந்தது. குப்பம் என்னும் இடத்தில் உள்ள நிலங்களைப்பற்றி அவர் எண்ண மிட்டுக்கொண்டிருந்தார். முக்காலமும் உணர்ந்த திரு வள்ளுவருக்குச் செட்டியாருடைய மனநிலை நன்கு தெரிந்தது.

திருவள்ளுவர், "செட்டியார் இறைவழிபாடு செய் கிறார்," என்று கூறியவரைப் பார்த்துச், "செட்டியார் இறைவழிபாடு எவ்விடத்தில் செய்கிறார்? குப்பத் திலா?," என்று கேட்டார். திருவள்ளுவருடைய மொழி களைக் கேட்டவர் விரைந்து செட்டியாரிடம் சென்று திருவள்ளுவர் சொன்னதைச் சொன்னார்கள். அவர் பூசையை விட்டுவிட்டு எழுந்தோடி வந்தார். திருவள் ளுவரைக் கண்டு வணங்கினார்.

பின்பு செட்டியார் திருவள்ளுவரைப் பார்த்து "என் உள்ளம் அடங்கமாட்டேன் என்கிறது. அத னால்தான் மனம் குப்பத்தில் உலாவப் போய்விட்டது," என்று கூறினார். மனத்தொடு பொருந்தாத இறை வழிபாடு பயனளிக்காதென்றும், மனத்தை யடக்கி வழிப்படுத்த வேண்டுமென்றும் திருவள்ளுவர் அச் செட்டியாருக்கு அறிவுரைகூறி யருளினார். செட்டியார் அன்று முதல் மன ஓட்டத்தை நிறுத்து வதற்கு முயன்றார்.

"நேரா நோன்பு சீரா காது"

(இ - ள்.) நேரா-மனத்தொடு பொருந்தாத, நோன்பு-இறை வழிபாடு, சீர் ஆகாது-சிறப்பைக் கொடுக்காது.

## ௩௮. தடியடி பெற்ற சாத்தப்பன்

ஓர் ஊரிலே சாத்தப்பன் என்னும் பெயருடைய வன் ஒருவன் இருந்தான். அவன் ஒரு குறும்பன். இவர்கள் நம்மை ஒன்றுஞ் செய்யமாட்டார்கள் என்று அவன் ஒருவரைப் பற்றி நன்கு அறிந்துகொண்டானயின் அவர்களிடத்திலே வம்புகருச் செல்வது அவனுடைய வழக்கம். அவன் இருந்த ஊரிலே ஒரு பெரியவர் இருந்தார். அவர் மிகுந்த பொறுமையுடையவர். யாராவது இகழ்ந்து கூறினலும் அவர் அதனை ஒரு சிறிதும் பொருட்படுத்த மாட்டார்.

சாத்தப்பன் யாரையேனும் எப்பொழுதும் இகழ்ந்து கூறிக்கொண்டிருப்பது வழககமாகையால்; அந்தப் பெரியவரையே அடிக்கடி இகழ்ந்து கூறிக் கொண்டிருப்பான். அவருடைய இயற்கைப்படி அவர் யாதுஞ் செய்யமாட்டாராகையால் அவரிடத்தில் சாத்தப்பனுக்குச் சிறிதும் அச்சமில்லை.

ஒருநாள் சாத்தப்பன் தனது இயற்கைப்படி அப் பெரியவரைப் பலவாறு இகழ்ந்து அவர் வருந்துமாறு பேசினன். சாத்தப்பன் இகழ்வதைக் கேட்டு அப் பெரியவர் தம் வழக்கம்போல் வருந்திக்கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு தடியன் அங்கிருந்தான். அவன் மிகவும் முரடன்; யாருக்கும் அஞ்சமாட்டான். சினம் உண்டாகி விடின் பிறகு எதையும் ஒரு பொருட்படுத்த மாட்டான்.

சாத்தப்பன் வீணுக அப் பெரியவரை இகழ்ந்து பேசுதலையும், அவரோ எல்லாவற்றையுங் கேட்டுக் கொண்டு பேசாதிருத்தலையும் அவன் கண்டான்.

சாத்தப்பன்மீது அவனுக்கு மிகுந்த சினம் உண்டாகிவிட்டது. அந்தச் சமயத்திலே அவனுடைய கையிலே தடி ஒன்றும் அகப்பட்டுக்கொண்டது. அத் தடியன் தன் கையிற் கிடைத்த தடியினால் சாத்தப்பனை நன்கு புடைத்து விட்டான்.

தடியடி பெற்ற சாத்தப்பனோ கதறினான். அவன் அடிபடுவதைக் கண்டும் எவரும் தடியனை விலக்கவில்லை. தடியன் அடித்துக் கை சலிக்கட்டும். எனவே அவனது இவ்வாறு போட்டால்தான் சாத்தப்பன் அடங்குவான் என்று எண்ணிப் பேசாமல் இருந்துவிட்டார்கள். சாத்தப்பன் கதறுவதைக் கண்டு அப் பெரியாரால் பொறுக்க முடியவில்லை. அவர் விரைந்து வந்தார். "சாத்தப்பன் யாதுந் தவறு செய்யவில்லையே; அவனை ஏன் வீணாகப் புடைக்கிறாய்?" என்று கூறித் தடுத்து நிறுத்தினார். "அடி உதவுவதுபோல் அண்ணன் தம்பிகள்கூட உதவமாட்டார்கள்," என்பது பழமொழி அன்றோ? அன்றுமுதல் சாத்தப்பன் திருந்தி நல்லவனாகி விட்டான்.

"நைபவர் எனினும் நொய்ய உரையேல்"

(இ - ள்.) நைபவர் எனினும் - கேட்பவர் எதிர் பேசாமல் வருந்துபவராயினும், நொய்ய உரையேல் - சிறுமையான மொழிகளைப் பேசாதே.

## ௩௪. அறிவிலார் நோன்பு

ஓர் ஊரிலே வீரப்பன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் வேலாத்தாள். இருவரும் அறிவு சிறிதும் இல்லாதவர்கள். அடிக்கடி நோன்பிருப்பதாகச் சொல்லிக்கொண்டு ஒரு நாளைக்கு அரைப்பட்டினியாக இருப்பர். மறுநாளோ புலாலை மிகுதியாகக் கொண்டு வந்து அதனைச் சமைத்து உண்பர். இவ்வாறு அவர்கள் தம் மனம்போனவாறு நோன்பு நோற்றனர்.

ஒருமுறை இருவரும், ஒருநாள் முழுப்பட்டினியாக இருந்து நோன்பு நோற்றனர். வழக்கப்படி மறுநாள் பலவகைப் புலால் உணவுகள் உண்டலுக்குத் திட்டமிட்டு, அதற்கான ஏற்பாடுகளைச் செய்தனர். வீரப்பன் மனைவி வேலாத்தாள் தன் கணவனைப் பார்த்து, "யாராவது ஒரு துறவிக்கும் இன்று நமது இல்லத்தில் பிச்சை யளித்தல் வேண்டும். தெருவிலே பார்த்துக் கூப்பிட்டுக்கொண்டு வாருங்கள்," என்று கூறினள்.

வேலப்பன் தெருவில் சுற்றிப் பார்த்தான். ஒரு துறவி அகப்பட்டார். அவரை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்தான். அவர் உண்பதற்கு உட்கார்ந்தார். புலால் உணவுகள் அந்தத் துறவியினுடைய இலையில் படைக்கப்பட்டன. புலால் உணவைக் கண்டார் துறவி. அவர் ஒரு போலித் துறவி யல்லர். உண்மையான துறவி. மெய்யறிவு நன்கு கைவரப் பெற்றவர். அவர் வீரனைப் பார்த்து, "நோன்பு என்று கூறினையே; அப்புறம் புலால் உணவை ஏன் தின்று

கிறாய்? நோன்பு என்பதனுடைய பொருள் உனக்குத் தெரியாதா?" என்று கேட்டார்.

வீரப்பன் துறவியைப் பார்த்து, "அடிகாள்! எங்கட்கு ஒன்றுந் தெரியாது. நோன்பின் முடிவில் நாங்கள் இவ்வாறு தான் ஊன் உண்பது வழக்கம்," என்று கூறினான்.

துறவி வீரப்பனைப் பார்த்து, "உன்னுடைய நோன்பு ஒழுங்கான தன்று; நோன்பு என்பதனுடைய பொருளே, ஓர் உயிரையும் அழித்து அதனுடைய ஊனினை உண்ணாமல் இருத்தல் என்பதுதான். உணவை ஒடுக்குதல் பட்டினி கிடத்தல் முதலியன நோன்புகள் அல்ல; நீ இனிமேல் புலாலுண்டலை முற்றிலும் ஒழித்து விடுவாயாக! அதுதான் பெரிய நோன்பாகும்," என்று அறிவுரை கூறிச் சென்றார்.

"நோன்பென் பதுவே கொன்று தின்னாமை"

(இ - ள்.) நோன்பு என்பது-தவம் என்று சொல்லப் பெறுவது, கொன்று தின்னாமை-ஓர் உயிரையுங் கொன்று அதனுடைய ஊனினை உண்ணாமலிருத்தலே யாம்.

## ௪௦. விருப்பு வெறுப்பற்றவர்

ஓர் ஊரிலே மாமூலன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் பெரியார்களை அடுத்து அறிவு நூல்களைப் படித்தான். அதனால் அவன் உள்ளத்தில் இருந்த உலகப் பற்றுக்கள் முற்றும் ஒழிந்தன. பற்றொழியப் பெற்ற அவன் நாட்டையும் வீட்டையுந் துறந்து காட்டை யடைந்தான். ஒரே இடத்தில் ஒரே நிலையில் அமர்ந்து கடுந்தவஞ் செய்தான்.

அதனால் அவனுடைய புகழ எங்கும் பரவியது. பலரும் மாமூலனைப் பார்ப்பதற்கு வந்தனர்.

மாமூலனது கடுந்தவத்தைப் பார்த்தவர்கள் மாமூலமுனிவர் என்று பெயரை நீட்டிவைத்தனர். பல பகங்களிலும் இருந்து பலர் வருவதும் போவது மாகவே மாமூல முனிவருடைய புகழ் நாடு முழுவதும் பரவிவிட்டது மாமூல முனிவருடைய உறவினர் களும் பகைவர்களும் பிறரும் மாமூல முனிவரை வந்து பார்த்தனர். முனிவருடைய உறவினர்கள், நாம் முனிவரைக கண்டு இன்றென்று தெரியப்படுத் தினல் தமது ஆற்றலைக் கொண்டு யாதாயினும் உதவிபுரிவார் என்று எண்ணினார்கள்.

மாமூலர் இல்லத்தில் இருக்கும்போது பகைமை கொண்டிருந்த சிலர், முனிவர் இப்போது தமது ஆற் றலாலே ஏதேனும் தீமையைச் செய்தாலும் செய் வாரோ என்று எண்ணி அஞ்சினார்கள்.

முனிவருடைய உறவினர்கள் முனிவரை வணங்கி, "அடிகாள்! எங்களைத் தங்கட்குத் தெரிகிறதா?" என்று கேட்டார்கள். முன்பு பகைவர்களாக இருந்த வர்கள் முனிவரை வணங்கி, "அடிகாள்! நாங்கள் அந் நாளில் செய்த தவறுகளைப் பொறுத்து மன்னித் தருளவேண்டும்," என்று வேண்டிக் கொண்டார்கள்.

முனிவருடைய நிலைமையோ எதையும் உணர்ந்து கொண்டதாகத் தெரியவில்லை. அவர் வாய்திறந்து யாதும் பேசவில்லை. மலர்ந்த முகத்துடன் எல்லோ ரிடத்திலும் ஒரே பார்வையைச் செலுத்தினவராக இருந்தார். அப்போது ஒருவர் மற்றவரைத் தனியே அழைத்து, "என்ன முனிவர் எதற்கும் மாற்றங் காட்

டாமல் ஒரே படியாக இருக்கிறார்?" என்று கேட்டார்.

அதற்கு மற்றவர், மெய்யறிவைப் பெற்று விளங்கும் உண்மைத் துறவிகளுக்கு ஒருவர் மாட்டு விருப்பமும், ஒருவர் மாட்டு வெறுப்பும் எப்படி உண்டாகும்? அவர்களுடைய நிலை இவ்வாறு தான் பொது நோக்காக இருக்குமென்று பதிலளித்தார்.

"பெற்றோர்க்கில்லை சுற்றமும் சினமும்"

(இ - ள்.) பெற்றோர்க்கு - மெய்யறிவைப் பெற்றவர்களுக்கு, சுற்றமும்-உறவினர்மீது பற்றும், சினமும் - மற்றவர்மீது வெறுப்பும்; இல்லை-உண்டாக மாட்டாது.

## ௪௩. மனைவி சொற்கேட்டு மாண்டவன்

ஓர் ஊரில் ஒரு சாலியன் இருந்தான். அவன் நெசவுத்தொழில் செய்து வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தான். ஒருநாள் அவனுடைய தறிமரம் ஒடிந்து போய்விட்டது. புதுமரம் ஒன்று வெட்டி வருவதற்காகக் காட்டிற்குச் சென்றான். நல்லமரம் ஒன்றைத் தேடி அதனை வெட்டத் தொடங்கினான். அம் மரத்திலே வாழ்ந்திருந்த ஒரு தேவதை சாலியனைப் பார்த்து, "இம்மரம் என்னுடைய இருப்பிடம், இதனை வெட்டாதே. உனக்கு எதுவேண்டுமாயினும் கேள்; நான் கொடுக்கிறேன்," என்று கூறிற்று.

சாலியன் அவ்வளவு அறிவாளியல்லன். "வீட்டிற்குப் போய் மனைவியைக் கேட்டுக்கொண்டு வருகிறேன்," என்று கூறிவிட்டுத் திரும்பினான். அவன் திரும்பி வரும்வழியில் அவனுடைய நண்பனாகிய நாவி

தன் ஒருவனைக் கண்டான். அவனிடம் நிகழ்ந்த செய்திகளைக கூறினான்.

சாலியன் கூறியவைகளைக் கேட்ட நாவிதன், "நீ அரசனாக ஆகவேண்டும் என்று கேள். நான் உனக்கு அமைச்சனாக வந்துவிடுகிறேன்," என்று சொல்லிக் கொடுத்தான். சாலியன் அதனையுங் கேட்டுக்கொண்டு வீட்டிற்குச் சென்றான். நிகழ்ந்தவைகளை மனைவியிடங் கூறினான்.

அவள் தன்னுடைய கணவனைப் பார்த்து, "அரசனாவது தக்கதன்று; அதனால் பல தொல்லைகள் நேரிடும். இன்னும் ஒரு முகமும் இரண்டு கைகளுங் கேள்; அவ்வாறு கேட்டுப் பெற்றால் இன்னும் ஒரு தறிபோட்டுத் துணி நெய்து மிகுதியாகப் பொருள் தேடலாம். அதனால் வாழ்க்கை தொல்லையில்லாமல் நடைபெறும்," என்று அறிவு சொல்லிக் கொடுத்தாள்.

சாலியன் காட்டிற்குச் சென்றான். மனைவி சொல்லிக் கொடுத்தபடியே தேவதையிடம்கேட்டான். தேவதையும் அவ்வாறே வழங்கியது. சாலியன் இரண்டு தலைகளுடனும் நான்கு கைகளுடனும் ஊருக்குவந்தான். சாலியனைக கண்ட ஊர் மக்கள் இவனோர் அரக்கன் என்று எண்ணினார்கள். இரக்கம் இல்லாமல் அடித்துக் கொன்றுவிட்டார்கள். பேதைமைமிக்க மாதின் பேச்சைக் கேட்ட சாலியன் வீணே இறந்தொழிந்தான். அறிவின்மை சில மாதர்களுக்கு உரிமைக் குணமாகையால் அவர்கள் கூறுவதைக் கேட்டல் கூடாது.

"பேதைமை என்பது மாதர்க் கணிகலம்"

(இ - ள்.) பேதைமை என்பது-அறியாமை என்று சொல்லப் பெறுங் குணமானது, மாதர்களுக்கு - பெண்களுக்கு, அணிகலம் - அணிகலமாகும்.

## ௩௨. தனிச் சாப்பாட்டைவிட்ட தம்பிரான்

ஒரு திருமடத்திலே மடத்தலைவராக இருந்தார் ஒரு தம்பிரான். அவர் எல்லோருக்கும் பொதுவாகச் சமைக்கும் சாப்பாட்டைச் சாப்பிடமாட்டார். தமக்கு மட்டும் நெய் பால் தயிர் முதலியவைகளால் சாப்பாட்டைத் தனிமையாகச் செய்யச் செய்வார். அதனைத் தாம் மட்டுமே உண்பாரே யல்லாமல் வேறு யாருக்குங் கொடார். யாரேனும் விருந்தாளிகள் வந்தாலுங் கூட அவர்களுக்குங் கொடார். அதனால் தம்பிரான் மிகவுங் கொடியவரென்றும், இவ்வாறு செய்தல் கூடாது என்றும் பலரும் தம்பிரானை வைதனர்.

அத் தம்பிரான் இறந்த பிறகு வேறொருவர் தலைவராக வந்தார். முதல் தம்பிரானுக்கு நடந்ததைப் போலவே சாப்பாடு சிறந்த முறையில் தலைவருக்கு மட்டும் தனிமையாக நடைபெற்றது. ஆயினும் அவர் தாம் மட்டும் அதனை உண்ணவில்லை. விருந்தினராக வருபவர்கட்கும் பிறருக்கும் அளித்துத் தாமும் உண்டார். எவ்வளவு உயரிய உணவுப் பொருளாக இருப்பினும் அதனை அவர் விருந்தினரோடும் பிறரோடும் சேர்ந்துதான் உண்பார். இதனால் புதிய தலைவருடைய நல்லியல்பை எல்லோரும் பாராட்டினார்கள்.

ஆகையால், தாம் உண்பது கிடைத்தற்கரிய தேவாமிர்தமாக இருப்பினும் அதனைத் தன்னைச் சூழ்ந்துள்ளவர்களோடு தான் உண்ணுதல்வேண்டும்.

"மருந்தே ஆயினும் விருந்தோ டுண்"

(இ - ள்.) மருந்தே ஆயினும்-நீ உண்பது கிடைத்தற் கரிய தேவாமிர்தமாக இருந்தாலும், விருந்தோடு உண்-வந்த விருந்தினர்களுடன் அதனை உண்பாயாக.

---

## ௩௩. மேழியின் மேன்மை

ஓர் ஊரிலே அக்காளுந் தங்கையுமாக இரண்டு மங்கையர் இருந்தனர். அவர்களுள் அக்காள் பெயர் துரைச்சி. தங்கையினுடைய பெயர் நிலமடந்தை. இருவரும் கல்விகற்றுச் சிறப்புற்று விளங்கினர். மணத்திற்கான அகவையை அடைந்ததும் அம்மங்கையர்களுடைய தந்தை அவர்கட்குத் திருமணஞ்செய்து வைக்க முயன்றார். மணமகன் தேடினார்.

மூத்தவளான துரைச்சிக்கு ஒரு மணமகனை முடிவு செய்தார். அவனுடைய பெயர் உழுதாண்டான். அவன் இருபத்து முப்பது ஏக்கர் நிலங்களுக்கு உரியவனாக இருந்ததுடன், நல்ல அறிவாளியாகவும் இருந்தான். துரைச்சி தனக்கு அந்த மணமகன் வேண்டாம் என்றும், அவன் உழு தொழிலாளனாக இருப்பது பிடிக்கவில்லை என்றும், அரசாங்க அலுவல்களிலே அமர்ந்துள்ள அதிகாரியாகப் பார்த்துத் தனக்குத் திருமணஞ் செய்துவைக்க வேண்டும் என்றும் கூறிவிட்டாள்.

ஆனால், நிலமடந்தை தான் உழுதாண்டானைத் திருமணஞ் செய்து கொள்வதாகக் கூறினாள். தந்தையும் அவ்வாறே செய்து வைத்தார். பிறகு துரைச்சிக்குத் தக்க கணவனைத் தேடினார். அரசியலில்

தகுந்த அலுவலிலே இருந்த ஒரு மணமகன் அமைக்கப் பட்டான். அவனுடைய பெயர் பழநித்துரை. அவன் மாவட்டப் போலீஸ் தலைமை அதிகாரி வேலையிலே இருந்தான்.

ஆண்டுகள் சில கடந்து சென்றன. மங்கையர் இருவரும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருந்தனர். பழநித் துரை பெரிய வழக்கொன்றிலே கைக்கூலி (இலஞ்சம்) வாங்கியதாகக் குற்றச்சாட்டு ஏற்பட்டது. அவன் தண்டிக்கப்பட்டதுடன் வேலையில் இருந்தும் விலக்கப் பட்டான். அவனுக்குச் சொந்த நிலைமையும் தகுந்த வாறு இல்லாதபடியால் பெரிதும் தொல்லைப் பட்டான். அவனுடைய நிலைமை உணவுக்கே திண் டாட்டத்தில் வந்துவிட்டது.

உழுதாண்டானாகிய நிலமடந்தையின் கணவன் மேலுஞ் செல்வம் பெருகப் பெற்றுச் சிறந்து விளங் கினன். அவன் பழநித்துரையையும் அவனுடைய மனைவியையும் அழைத்து மிகவும் போற்றினன். உழுதாண்டானுடைய செல்வச் சிறப்பைக் கண்ட துரைச்சி வலியவந்த சீதேவியைக் காலால் உதைத் துத் தள்ளினேமே என்று உள்ளம் வருந்தினள். உழுதொழிலுக்கு ஒரு நாளும் பழுது ஏற்படமாட்டா தென்பதையும் அவள் உணர்ந்து கொண்டாள்.

"மேழிச்செல்வம் கோழை படாது"

(இ - ள்.) மேழிச் செல்வம் - கலப்பையைப் பிடித்து உழுதலால் உண்டாகின்ற செல்வமானது, கோழை படாது - ஒரு நாளும் குறைவை யடையமாட்டாது.

## ௪௪. சிலந்தியால் உயர்ந்து சிறந்தவன்

ஓர் அரசன் தன் பகைவர்களோடு போருக்குச் சென்றான். போரிலே படுதோல்வி உண்டாயிற்று. மீண்டும் மீண்டும் பன்முறை போர் செய்தான். அப்பொழுதும் தோல்விதான் ஏற்பட்டது. இனிமேல் போர் புரிவதில்லையென்று முடிவு செய்தான். உள்ளம் உடைந்து பாழடைந்த கட்டிடம் ஒன்றிலே படுத்திருந்தான்.

அக்கட்டிடத்தில், சிலந்தி வலை பின்னிக்கொண்டிருந்தது. அஃது ஒரு பக்கத்திலே இருந்து மற்றொரு பக்கத்திற்குத் தன்னுடைய வலையை இணைப்பதற்கு முயன்று கொண்டிருந்தது. பன்முறை முயன்றும் அதனுடைய முயற்சி தோல்வியையே அடைந்தது. ஆயினும் அது தளர்ச்சியை அடையவில்லை. பலமுறை முயன்று இறுதியிலே அது வெற்றிபெற்றது.

மனந்தளர்ந்து படுத்திருந்த மன்னனுக்குச் சிலந்தியின வேலை ஒரு படிப்பினையாக முடிந்தது. "இந்தச் சிலந்திப் பூச்சி எவ்வளவு! இதுவே முயன்று தன்னுடைய காரியத்தில் வெற்றிபெறுமானால் ஆறறிவு படைத்த நாம் தளர்ச்சி யடையலாமா?" என்று உள்ளக கிளர்ச்சியடைந்தான். அவனுடைய ஊக்கம் ஆக்கம் பெற்றது. மீண்டும் படைகளைத் திரட்டிக் கொண்டு போருக்கு எழுந்தான்.

ஒவ்வொரு முறையும் போருக்குச் சென்று அடையுந் தோல்வியை வெற்றியாக எண்ணிப் பல தடவை முயன்றான். அதனால் அவன் இழந்த நாடு திரும்பவும் அவனுடைய கைக்குவந்தது. மேலும் மேலும் ஊக்கங்கொண்டு பல நாடுகளைக் கைப்பற்றி

னான். பேரரசனாகத் திகழ்ந்து பெருமை பெற்றான். மன்னன் சிலந்தியால் ஊக்கம் பெறாமல் இருந்திருப்பான் ஆயின் இழிந்த முறையிலே அழிந்து தொலைந்திருப்பான். அவனுடைய ஊக்கமே அவனுக்கு ஆக்கத்தைக் கொடுத்தது. ஆகையால் ஒவ்வொருவரும் ஊக்கத்துடன் இருந்து ஆக்கம் பெறவேண்டியது கட்டாயமாகும்.

"ஊக்கம் உடைமை ஆக்கத்திற் கழகு"

(இ - ள்.) ஊக்கம் உடைமை - மனத் தளர்ச்சியை அடையாமை, ஆக்கத்திற்கு - செல்வம் உடையராதற்கு, அழகு - அழகாகும்.

## ௪௫. அம்பிகாபதியின் முடிவு

அம்பிகாபதி என்பவன் கம்பருடைய மகன். ஒரு காரணத்தை முன்னிட்டு அரசனுக்கு அம்பிகாபதியின்மேல் அளவு கடந்த சீற்றம் உண்டாகி விட்டது. அரசனுக்கும் கம்பருக்கும் நெருங்கிய நட்பு உண்டு. ஆயினும் அம்பிகாபதியின்மேல் அரசனுக்கு ஏற்பட்டுள்ள சீற்றத்தைக் கம்பரால் மாற்ற முடியவில்லை. எவ்வளவோ முயன்று பார்த்தும் ஒன்றும் பயன்

அரசன் அம்பிகாபதியைக் கொலைசெய்து விடவேண்டும் என்று முடிவு செய்துவிட்டான். அம்பிகாபதியைக் கொன்றால் கம்பரோடு பகைமை ஏற்படும் என்பதையும் அரசன் ஒரு பொருட்படுத்தாமல் அம்பிகாபதியைக் கொன்று விட்டான். அதனால் கம்பருக்கும் அரசனுக்கும் பெரும்பகை உண்டாகி விட்டது.

அரசன் அம்பிகாபதியின்மேற் கொண்ட சீற்றத்தை யாராலும் மாற்ற முடியாமற் போனதையும், அரசன் கம்பருடைய பகைமையை ஒரு பொருட்படுத்தாமையையுங் கண்டவர்கள், 'அரசன் ஒருவர்மீது சீற்றங்கொள்வானாயின் அதனை எவராலும் மாற்ற முடியாது' என்பதையும், 'அரசன் சினத்திற்கு ஆளானவர்கட்கு எத்தகைய உதவியையும் மற்றவர்களால் செய்ய முடியாது' என்பதையும் ஐயமற அறிந்துகொண்டார்கள்.

"வேந்தன் சீறின் ஆந்துணை இல்லை"

(இ - ள்.) வேந்தன் சீறின்-அரசனானவன் ஒருவரைச் சினப்பான் ஆயின், ஆம் துணை இல்லை - அப்போது அவனுக்கு உதவி செய்வார் எவரும் இலர்.

## ருஅ. அறிஞரின் பதில்

ஒருநாள் மாலையில் ஓர் அறிஞரும் அவருடைய நண்பர் ஒருவரும் உலாவிகொண்டு வந்தார்கள். ஓரிடத்திலே பலர் கூடித் தமது மனம்போனவாறு ஆட்டம் போட்டுக்கொண்டிருந்தனர். சிலர் புகை குடித்துக்கொண் டிருந்தார்கள். சிலர் சூது விளையாடிக்கொண் டிருந்தார்கள். சிலர் மேன்மக்கள் காதிலே விழக்கூடாத பலவகை இழிமொழிகளைப் பேசி நகைத்துக்கொண்டிருந்தார்கள்.

சிலர் போரிட்டு ஒருவரை யொருவர் தாக்கிக் கொண்டு கட்டி யுருட்டிப் புரண்டார்கள். சிலர் தெருவிலே செல்வாரைப் பார்த்துப் பழித்துக்கொண்டிருந்தனர். சிலர் பெண்களையும், பெரியவர்களையும் பார்த்

னுக் கேலிசெய்தனர். அவர்களிடம் யாரேனும் வாய் கொடுத்தால் வம்பிழுத்துப் போர்தொடுத்து அல்லல் விளைவித்து விடுவர். அவர்களுக்கு அஞ்சி அனைவரும் ஒடுங்கிச் சென்றுகொண்டு இருந்தனர்.

மக்கள் அடங்கி ஒடுங்கிச் செல்வதையும் குறும்பர்கள் கூத்தையும் அறிஞருடன் சென்ற நண்பர் கண்டார். அவர் அறிஞரைப் பார்த்து, "என்ன இந்தக் கீழ்மக்கள் தம் மனம் போனவாறு நடக்கின்றனர்? இவர்கட்கு நாணம் என்பது சிறிதும் இல்லையா? இவர்கள் இவ்வாறு நல்லொழுக்கம் அற்றவர்களாகவும், அறிவில்லாதவர்களாகவும் இருப்பதற்குக் காரணம் யாது?" என்று கேட்டார்.

அறிஞர் தம் நண்பரைப் பார்த்து, "மக்களாகப் பிறந்தோர் கல்வியைக் கற்றல் வேண்டும்; அவ்வாறு கல்விகற்றபின் அவர்களுடைய அறிவு சிறந்து திகழும். அதனால் அவர்கள் நல்லறிவும் நற்பண்பும் உடையவர்களாகத் திகழ்வார்கள். கல்வி கற்காமல் அறிவற்றவர்களாக இருந்தால் நல்லறிவு உண்டாக மாட்டாது. நல்லறிவு இல்லாமற்போனால் நல்லொழுக்கமும் இல்லாமற் போகும். இக் கீழ்மக்கள் கல்வியறிவு பெறாதபடியால் நல்லுணர்வு இல்லாமல், தீயொழுக்கம் உடையவர்களாக இருக்கிறார்கள்," என்று விடையளித்தார்.

"ஓதாதார்க்கில்லை உணர்வோடும் ஒழுக்கம்

(இ - ள்.) ஓதாதார்க்கு — கல்விகற்காதவர்களுக்கு, உணர்வோடும் - நல்லறிவுடனே, ஒழுக்கம்-நல்ல நடையும், இல்லை-உண்டாக மாட்டா.



கழக வெளியீடு : ௮௪௬

# முதுரை விளக்கக் கதைகள்



ஆசிரியர் :

திரு. க. இனியன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
திருநெல்வேலி : : சென்னை-1

# பதிப்புரை

செந்தமிழ்மொழிக்கண் திருக்குறள் பொதுநூல்! இது நம் நாட்டகத்தும், வீட்டகததும் களிநடம் புரிதல் வேண்டும். அன்றே நம் தமிழகம் நன்றே மிளிரும் நாளாகும்.

இதன் சாயல்களே பிற்காலத்துத் தோன்றிய அற நூல்கள். அவற்றுள் ஒன்றே மூதுரை என்னும் அறநூல். இது எளிய இனிய நன்னடையில் இயன்றது. ஔவை யாரால் இயற்றியருளிச் செய்யப் பெற்றது

'இளமையிற் கல்வி சிலையிலெழுத்து' என்ப. ஆக லான், நம் இளஞ்சிறுர்க்கு, விளையாடும் பருவ முளைப்பரு வத்தினர்க்கு இவைகளைக் கதைகள் வாயிலாக விளக்குதல் சிறந்தது, நலந்தருவது எனக் கருதி ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, வெற்றிவேற்கை, நல்வழி, நன்னெறி போன்ற ஏனைய அறநூல்களுக்கும் திரு. ரு. இனியன் அவர்களைக்கொண்டு எழுதுவித்து நாலுருவாக்கி வெளி யிட்டுள்ளோம்.

இது அவற்றுள் மூதுரை விளக்கக் கதைகளாகும் இத னையும் ஏனைய விளக்கக்கதை நூல்களையும் பந்தெறிந் தாடுஞ் சிறுர்கைகளில் முந்திருப்பச் செய்து கற்கச்செய் வது, நம் தமிழகப் பெருமக்கள் கடன். இதனை வாங்கிக் கற்குமாறு செய்து எம்மையும் ஊக்குவிப்பார்களென நம்புகின்ரேம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# முதுரை விளக்கக் கதைகள்



## க. நம்பியாண்டார் நம்பி

நம்பியாண்டார் நம்பி என்பவர் திருநாரையூரிலே ஆதி சைவ அந்தணாளர் குலத்திலே தோன்றினார். அவ்வூரில் எழுந்தருளிய பொல்லாப் பிள்ளையார் என்னும் விநாயகரை அவர் மிகு இளமைப் பருவத்திலேயே வழிபடும் பேற்றைப் பெற்றார். அதனால் அவருக்கு மிகுந்த கல்வி யறிவும் செய்யுள் பாடுந் திறமையும் அபயகுலசேகர சோழமன்னனுடைய நட்பும் உண்டாயின.

அவருடைய பாடல்கள் அருமையும், பெருமையும் அமைந்து விளங்கின. அவை பன்னிரு திருமுறைகளிலேயும் இடம்பெற்றன. நம்பியாண்டார் நம்பிக்கு இவ்வுலகத்திலே எல்லாச் சிறப்புகளும் ஆனைமுகக் கடவுளைப் பூசனை புரிந்து வழிபட்டதனாலேதான் உண்டாயின.

[illegible]லே நாம் படைக்கும் உணவுப் பொருள்களைக் கடவுளர்கள் உண்ணமாட்டார்கள். நம்பியாண்டார் நம்பியோ தம்முடைய மெய்யன்பினால் உணவுப் பொருளை விநாயகக் கடவுள் எடுத்து உண்ணுமாறு செய்துவிட்டார். இத்தகைய செயல்

செயற்கருஞ் செய்கையல்லவா? ஆகையால் கடவுளை வழிபடுதல் எந்தக் காலத்திலும் வீணாகமாட்டாது.

"வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு."

(உரை) துப்பார் - பவளம்போலச் சிவப்பாகிய, திருமேனி - திருவுடலையும், தும்பிக்கையான் - துதிக்கையையும் உடைய விநாயகக் கடவுளின், பாதம் - திருவடிகளை, பூக்கொண்டு - மலரைக்கொண்டு, தப்பாமல் - நாள்தோறும் தவறாமல், சார்வார் தமக்கு - அடைந்து வழிபடுவோருக்கு, வாக்கு உண்டாம் - சொல்வளம் உண்டாம், நல்ல மனம் உண்டாம் - நல்ல எண்ணம் உண்டாகும், மாமலராள் - திருமகளின், நோக்கு உண்டாம் - திருவருட்பார்வை உண்டாம், மேனி நுடங்காது - அவர் உடல் நோய் முதலியவைகளால் வாடாது.

(கருத்து) ஆனைமுகக் கடவுளின் அடிமலர்களை வழிபடுபவர்களுக்குக் கல்வியும் செல்வமும் உடல்நலமும் உண்டாகும்.

## உ. உதவி வீண்போகாது

பர்ஷன் என்னும் பெயருடைய ஒரு பெண் 1886-ஆம் ஆண்டில் வறுமைப் பிணியால் மெலிந்து இலண்டனுக்குச் சென்றாள். திக்கற்றுத் தெருவில் நின்றுகொண்டிருந்தாள். அவள் நின்றுகொண்டிருந்த இடத்திற்கு அண்மையில் ஒரு பெருஞ்செல்வர் மயக்கத்தால் பீடிக்கப்பட்டுக் கீழேவிழுந்து மூர்ச்சை யடைந்துவிட்டார்.

இதனைப் பார்த்துக்கொண்டிருந்த மேற்படி பெண் நினைவற்றுக் கிடந்த செல்வருக்கு உதவிகள் செய்தாள். அவரை வண்டியில் ஏற்றி அவரது வீட்டை மற்றவர்களை உசாவித் தெரிந்துகொண்டு, வீட்டிலே கொண்டுபோய் விட்டுவிட்டுப் போய்விட்டாள். செல்வருக்கு நினைவு உண்டான பிறகு அப் பெண்ணைப் பற்றி விசாரித்துத் தெரிந்துகொண்டார். அப் பெண்ணோ தன்னுடைய ஊருக்குப் போய்விட்டாள்.

சில ஆண்டுகளுக்குப் பிறகு அந்தப் பெண்ணுக்கு வழக்கறிஞரிடம் இருந்து ஒரு கடிதம் வந்தது. அதில், "நீ தக்க சமயத்தில் ஒரு செல்வரைக் காப்பாற்றியதற்காக அவர் இறந்தபோது தமது செல்வத்தில் உனக்கு ஏழரை இலட்சம் ரூபா கொடுக்கும்படி எழுதியிருக்கிறார். நீ உடனே புறப்பட்டு வா," என்று எழுதப்பட்டிருந்தது.

"நன்றி ஒருவற்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்."

(உரை) நின்று - நிலைபெற்று, தளரா வளர்தெங்கு - சோர்வு படாமல் வளருகின்ற தென்னைமரமானது, தாள் உண்ட நீரை - தன் அடியால் உண்ட தண்ணீரை, தலையாலே தான் தருதலால் - முடியாலே இளநீராகக்கொடுக்கிறபடியினால், ஒருவற்கு - நற்குணம் உடைய ஒருவனுக்கு, நன்றி செய்தக்கால் - உதவி செய்தவிடத்து, அந்நன்றி - அவ்வுதவியை, என்று தரும்கொல் - எப்பொழுது செய்வாரோ, என வேண்டா - என்று ஐயப்படவேண்டாம்.

(க - து.) நல்லியல்பு உடையவனுக்கு உதவி செய்தால் அவனுஞ் சிறந்த உதவியை விரைவிற் செய்வான்.

---

## ௬. அந்தணனும் செட்டியும்

ஓர் ஊரில் ஓர் ஏழை அந்தணன் இருந்தான். அவன் வறுமையால் வாடித் துன்பப்பட்டுக் கொண்டிருந்தான். அந்த ஊரில் செல்வனாக விளங்கிய செட்டி ஒருவன் அந்தணனுடைய வறுமையைப் போக்க எண்ணினான். அந்த அந்தணனுக்குத் தக்க உதவிசெய்து அவன் வறுமையால் பிறகு எந்தக் காலத்திலும் வருந்தாதபடி செய்துவிட்டான். அந்தணன் செட்டியின் உதவியைப் பலரிடமும் புகழ்ந்து போற்றினான். பலரும் செட்டியின் உதவியைப் போற்றிப் பலவாறு வியந்தார்கள். செட்டியின் புகழ் என்றும் நிலைபெற்றது.

## ௭. நன்றியற்ற கள்ளன்

ஒரு கள்ளன் ஒரு பாதிரியாரின் இருப்பிடத்தில் நள்ளிரவிற் புகுந்து களவு செய்தான். பாதிரியார் ஒலியைக்கேட்டு விழித்துக்கொண்டார். கள்ளனைக் கண்டார். அவன் வறுமையின் கொடுமையால் களவு செய்தான் என்று அவன்மீது இரக்கங்கொண்டார்.

அவன் களவு செய்த பொருள்களை அவர் அவனுக்குக் கொடுத்ததோடு வேறு சில பொருள்களையும் அளித்துக் களவு செய்தலை விட்டொழிக்கவேண்டுமென்று அறிவுரையுங் கூறினார். நாட்கள் சில சென்றன. பாதிரியாரிடம் களவு செய்த பொருள்கள் கள்ளனுக்குத் தீர்ந்துவிட்டன. மீண்டுங் களவுத் தொழிலுக்கே புறப்பட்டான்.

*பாதிரியார் தாம் தன் களவுக்குத் துணைசெய்கிருர் என்று எண்ணியவனுய்ப் பாதிரியார் இருப்பிடத்திற்கே வந்து களவு செய்யத்தொடங்கினுன். இப்பொழுதும் பாதிரியார் விழித்துக்கொண்டார். கள்ளன் அவர் கூச்சலிட்டு மற்றவர்களை அழைத்தாலும் அழைத்துவிடுவார் என்று எண்ணியவனுய்த் தன்னுடைய தடியினுல் பாதிரியார் தலையில் இரண்டு அடிகள் போட்டுவிட்டு ஓடிப்போனுன். முன்பு அந்தப் பாதிரியார் கள்ளனுக்குச் செய்த உதவி பயன் ஒன்றும் இல்லாமற் போய்விட்டது.*

“ நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போற் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர்.”

(உரை) *நல்லார் ஒருவர்க்கு - நற்குணம் உடைய ஒருவர்க்கு, செய்த உபகாரம் - செய்த உதவியானது, கல்மேல் எழுத்துப் போல் - கருங்கல்லின்மேல் வெட்டப்பெற்ற எழுத்தைப்போல், காணும் - அழியாமல் நிலைபெற்றிருக்கும், அல்லாத - நற்குணம் இல்லாத, ஈரம் இலா நெஞ்சத்தார்க்கு - அன்பற்ற மனம் உடையவர்களுக்கு, ஈந்த உபகாரம் - செய்த உதவியானது, நீர்மேல் எழுத்திற்கு நேர் - தண்ணீரின்மேல் எழுதப்பட்ட எழுத்திற்கு ஒப்பாக அழிந்துபோம்.*

(க - து.) *நல்லவர்களுக்குச் செய்யப்பெற்ற உதவி சிறந்து விளங்கும்; தீயவர்களுக்குச் செய்யப்பெற்ற உதவி உடனே மறைந்துபோகும்.*

---

## ரு வறுமையால் மாண்டவன்

மேல் நாட்டிலே ஓர் இளைஞன் இருந்தான். அவன் நன்றாகக் கல்வி கற்றிருந்தான். அவனுக்கு இளமைப் பருவத்திலேயே திருமணமும் ஆகிவிட்டது. ஆயினும் அந்த இளைஞனுக்கு எத்தகைய வேலையும் அகப்படவில்லை. அவன் செல்வம் உடையவனும் அல்லன். மிகுந்த வறிய நிலையினன்.

அவன் வேலைதேடிப் பலவிடங்களினும் அலைந்து திரிந்தான். நாள்கள் பல ஆகியும் அவனுக்கு எத்தகைய வேலையும் அகப்படவில்லை. வேலைதேடிக் கொண்டு ஒரு நகரத்திற்குச் சென்றான். அங்கு ஒரு பெரிய வாடகைக் கட்டிடத்தில் தங்கியிருந்தான். நாள்கள் பல ஆகியும் அங்கும் வேலையொன்றும் அகப்படவில்லை.

இளைஞனுடைய உள்ளம் உடைந்துபோய்விட்டது தான் தங்கியிருந்த கட்டிடத்தில் சமையல் அறையில் இருந்த மின்சார விசையைத் திறந்துவிட்டான். அந்தக் கட்டிடம் இடிந்து தகர்ந்து தூளாகியது. அதில் தங்கியிருந்தவர்கள் எல்லோரும் மாண்டொழிந்தார்கள். இளைஞனும் இறந்து தொலைந்தான்.

"இன்னா இளமை வறுமைவந் தெய்தியக்கால்
இன்னா அளவில் இனியவும்—இன்னாத
நாளல்லா நாட்பூத்த நல்மலரும் போலுமே
ஆளில்லா மங்கைக் கழகு."

(உரை) இளமை - இளமைப் பருவத்தில், வறுமைவந்து எய்தியக்கால் - வறுமைவந்து சேர்ந்தால், இன்னா - அது துன்பத்தைக் கொடுப்பதாகும், இன்னா அளவில் - துன்பத்தைத்தரும் முதுமைப் பருவத்தில், இனியவும் - இன்பத்தைச் செய்யும் பொருள்களும், இன்னாத - துன்பத்தைக் கொடுப்பனவாம், (அவைகள்) நாள் அல்லா நாள் பூத்த - காலம் அல்லாத காலத்திலே மலர்ந்த, நல்மலரும் - நல்லமலரையும், ஆள் இல்லா மங்கைக்கு அழகும் - தலைவன் இல்லாத பெண்ணுக்கு ஏற்பட்ட அழகையும், போலும் - ஒக்கும்.

(க - து.) வறுமைக்காலத்து இளமையும் முதுமைக் காலத்துச செல்வமும் துன்பத்தைக் கொடுப்பனவாம்.

## ௬௩. பாண்டவர்களும் அமைச்சனும்

புரோசனன் என்னும் பெயருடையவன் ஒருவன் அந்நாளில் இருந்தான். சூழ்ச்சித்திறமும் அறிவும் உடையவன். ஆனால், கீழ்மைக்குணமும் வஞ்சகமும் துரியோதனனுடைய நட்பினால் அமைந்திருந்தன. தனக்கு நண்பனாக இருந்த இவனைப் பாண்டவர்களைத் தொலைப்பதற்குக் கருவியாகப் பயன்படுத்தினான் துரியோதனன்.

இந்தப் புரோசனனைப் பாண்டவர்களுக்குத் தலைமை அமைச்சனாக ஏற்படுத்தினான். அரக்கு மாளிகை அமைத்து அதில் கொன்றொழிக்க இவன் முனைந்து நின்றான். உள்ளுக்குள் வஞ்சக்குணம் எவ்வளவு மிகுதியாக அமைந்திருந்ததோ அவ்வளவுக்கவ்வளவு வெளியிலே நல்லவன்போல் நடித்தான். பாண்டவர்களைக் காப்பாற்றுவதற்கும் நன்மைகளையெல்லாம் செய்வதற்கும் பாடுபடுபவன்போல் நடந்தான்.

இவனுடைய வெளிக்கோலத்தைப் பாண்டவர்கள் உண்மையாகவே நம்பி அவனைத் துணைவனாகவும் நண்பனாகவும் எண்ணியிருந்தார்கள். அரக்குமாளிகை நெருப்பில் எரிந்த பிறகுதான் இந்தப் புரோசனன் பொல்லாதவன் என்பதை அவர்கள் அறிந்தார்கள். உலகமும் புரோசனனுடைய நயவஞ்சகத்தை அறிந்து கொண்டது.

தருமர் எவ்வளவு வறுமையுற்றுக் காட்டில் கெட்டலைந்தபோதும் அவருடைய பெருமைக்கு ஒரு சிறி

துங் குறைறவேற்படவில்லை. அவர் முடிவுவரையில் பெரியவராகவே எல்லோராலும் போற்றப்பட்டார்.

"அட்டாலும் பால்சுவையில் குன்று தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்."

(உரை) அட்டாலும் - நன்றாகக் காய்ச்சினாலும், பால் - பாலானது, சுவையில் குன்றாது - அது தனக்குரிய இனிய சுவையில் குறைவுபட மாட்டாது, சங்கு - சங்கினை, சுட்டாலும் - சுட்டு நீறாக்கினாலும், வெண்மைதரும்-அது வெண்ணிறத்தையே கொடுக்கும்; இவைபோல, மேன்மக்கள் - பெரியோர்கள், கெட்டாலும் - வறுமையுற்றாலும், மேன்மக்களே - பெரியோர்களேயாவர், நண்பு அல்லார் - நட்புக்குணமில்லாத கீழோர், அளவளாய் நட்டாலும் - மிகுதியாகக் கலந்து நட்புச் செய்தாலும், நண்பு அல்லர் - நண்பர்களாக மாட்டார்கள்.

(க - து.) பெரியோர்கள் வறுமையுற்றாலும் பெரியோர்களே; நற்குணமில்லாதவர்கள் எவ்வளவு மிகுதியாகக் கலந்து உரையாடினாலும் நண்பர்களாகமாட்டார்கள்.

---

## எ. முயற்சிமிக்க மேல்நாட்டார்

நம் நாட்டில் தற்காலம் வழங்கிவரும் பொறிகள் பலவற்றையுங் கண்டுபிடித்தவர்கள் பெரும்பாலும் மேல் நாட்டார்களே ஆவர். அவர்கள் கண்டுபிடிக்கத் தொடங்கியவை தொடங்கிய உடனே நிறைவேறிவிட வில்லை. சிலர் பன்னெடுங்காலம் முயன்று தாம் தொடங்கிய செயலை நிறைவேற்றினர். சிலர் தொடங் கியவைகளோ அவர்களுடைய வாணாளில் முடிவுபெறா மல், அவர்கட்குப்பின் முயற்சி செய்தவர்களால் செய்து முடிக்கப்பட்டன.

பெர்னார்ட் பெல்லி என்பவர் உருக்குப் பொருந்திய சாடிகளைக் கண்டுபிடிக்கப் பல ஆண்டுகள் பெரும் பொருளைச் செலவிட்டு வருந்தி உழைத்தபின்னரே காரியங் கைகூடப்பெற்றார். ஆகவே நாம் தொடங் குஞ் செயல்கள் உடனே பலன் அளித்துவிடும் என்று எண்ணாமலும் காரியத்தை நிறுத்திவிடாமலும் முயன்றுகொண்டிருக்க வேண்டியது கடமையாகும்.

" அடுத்து முயன்றாலும் ஆகுநாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா "

(உரை) தொடுத்த - கிளைத்த, உருவத்தால் நீண்ட - வடிவத் தினால் உயர்ந்த, உயர் மரங்கள் எல்லாம் - பெரிய மரங்களெல்லாம், பருவத்தால் அன்றிப் பழா - பழுக்குங்காலம் வந்தால் அல்லாமல் பழுக்கமாட்டா; அதைப்போல், அடுத்து முயன்றாலும் - அடிக்கடி முயற்சி செய்தாலும், ஆகும்நாள் அன்றி - நிறைவேறுங் காலம் வந்தால் அல்லாமல், எடுத்த கருமங்கள் - மேற்கொண்ட செயல் கள், ஆகா - நிறைவேற மாட்டாவாம்.

(க - து.) மரங்கள் பழுக்குங்காலம் வந்தால் அல்லாமல் பழுக்கமாட்டாத செயலைப்போல், எச் செயலும் எவ்வளவு முயன் றாலும் நிறைவேறுங்காலம் வந்தால் அல்லாமல் நிறைவேற மாட்டாவாம்.

---

## அ. வீரபாண்டியக்கெட்டி பொம்மு

வீரபாண்டியக்கெட்டிபொம்மு என்பவன் பல ஆண்டுகளுக்கு முன்பு பாண்டிநாட்டிலே தனியரசு செலுத்திய ஒரு குறுநிலமன்னன். வீரமும் மானமும் ஒருங்கே அமையப்பெற்றவன். சூழ்ச்சித் திறம் உடையவன். இவனுடைய காலத்திலேதான் ஆங்கிலேயர்கள் முதன்முதலாகத் தென்னாட்டிற்கு வந்து நாட்டைத் தம் ஆட்சிக்குள் அடக்கத் தொடங்கினார்கள்.

குறுநில மன்னர்களாக இருந்தவர்கள் எல்லோரும் ஆங்கிலேயர்கட்கு அடிபணிந்து திறை செலுத்தி அவர்கட்கு அடக்கமாயினர். வீரபாண்டியக் கெட்டிபொம்மு தன்மானம் மிக்கவனானமையால் ஆங்கிலேயரிடம் பணியவில்லை. இறுதிவரை எதற்கும் அஞ்சாமல் நிமிர்ந்து நின்று போரிட்டுப் பிறகு மறைந்துபோனான்.

பெருமைக்குச் சிறுமையேற்படக் கூடிய காலத்தில் உயிரையும்விடக் கூடியவர்கள் பகைவர்களுக்குப் பணிய மாட்டார்கள் என்பது வீரபாண்டியக்கெட்டி பொம்முவிடம் நன்கு விளங்கியது.

"உற்ற இடத்தில் உயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்."

(உரை) கல்தூண் - கருங்கல்லினால் ஆகிய தூணானது, பெரும்பாரம் தாங்கின் - மிகுந்த பாரத்தைச் சுமந்தால், பிளந்து இறுவது அல்லால்-பிளந்துமுறிந்து போகுமேயல்லாமல், தளர்ந்து தான் வளையுமோ - தளர்வுற்றுத் தான் வளைந்து கொடுக்குமோ - அதைப்போல், உற்ற இடத்தில் - தம் பெருமைக்கு அழிவு உண்டானபோது, உயிர் வழங்கும் தன்மையோர் - உயிரை விட்டுவிடக் கூடிய குணமுடையோர், பற்றலரைக் கண்டால் பணிவரோ - பகைவர்களிடத்தில் பணிந்து நடப்பார்களோ?

(க - து.) மானம் உடையவர்கள் பகைவர்களிடம் பணிந்து நடக்கமாட்டார்கள்.

## ௯௯. சிவஞான முனிவர்

சிவஞான முனிவர் என்பவர் எண்ணற்ற நூல்களைக் கற்றுக் கல்வியிற் பெரும்புலமைபெற்று விளங்கினார். அவர் பல சிவப்பதிகளையும் வணங்கி வழிபட்டுக் கொண்டு திருபாதிரிப்புலியூரை அடைந்தார்.

அந்நாளில் அந்த ஊரில் இருந்த ஒரு செல்வர் "கரையேற விட்ட முதல்வர் உனையன்றியுமோர் கதியுண்டாமோ?" என்னும் ஈற்றடியைக் கொடுத்து மற்றைய மூன்றடிகளையும் பாடிப் பாட்டை முடிப்பவர்கட்கு நூறு பொண்பொற் காசுகள் நன்கொடை வழங்குவதாக அறிக்கை செய்தார். பல புலவர்கள் முயன்றும் முடியவில்லை இறுதியில் சிவஞானமுனிவரே அப்பாட்டை முடித்து வறியவன் ஒருவனுக்குக் கொடுத்துப் பரிசை அடையுமாறு செய்தார்.

## ௧௦௦. பேராசைகொண்ட பேதை

அறிவும் நல்வினையும் அற்ற ஒரு வறியவன் பொருள் சேர்த்துப் பெருஞ்செல்வனாகவேண்டுமென்று பலநாள் முயன்றான். அவன் எண்ணங் கைகூடவில்லை. வேறு பெரியநகரம் ஒன்றிற்குச் சென்று வாணிகஞ் செய்து பொருளீட்டுவதென்று முடிவு செய்தான்.

தன் வீடு வாசல் முதலியவைகளை விற்றுப் பணத்தை எடுத்துக் கொண்டு பெரியநகரம் ஒன்றை நோக்கிப் புறப்பட்டுச் சென்றான். வழியில் கள்ளர்கள் பலர் அவனை மடக்கி அடித்து அவனிடம் இருந்த பொருள்களைப் பறித்துச் சென்றனர். அவன் முன்னினும் வறியவனானான்.

## ௧௧. அந்தணர் பந்தியில் அயலான்

ஓரிடத்தில் அந்தணர்கட்கு மட்டும் சாப்பாடு போடப்பட்டது. வயிற்றுப் பசியோடிருந்த ஒருவன் தானும் அவர்களோடு சென்று சாப்பிட எண்ணினான். பூணூல் ஒன்றைத்தேடி அணிந்துகொண்டான். சாப்பிடும் இடத்திற்குள் நுழைந்தான். இவனும் அந்தணன் என்று யாவரும் எண்ணி உள்ளே விட்டுவிட்டார்கள்.

சாப்பாடு நடந்துகொண்டிருக்கும்போது இந்தப் போலி அந்தணனுக்குத் தண்ணீர் வேண்டியதாக இருந்தது. பரிமாறிக்கொண்டிருந்தவர்களைச், "சாமி! சாமி!!" என்று கூப்பிட்டு, "சிறிது தண்ணீர் கொடுங்கள்," என்று கேட்டான். உடனே அங்கிருந்தவர்கள் அவனை நன்கு புடைத்து வெளியே விரட்டினார்கள்.

"நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகும் குணம்."

(உரை) நீர் ஆம்பல் - நீரில் வளரும் அல்லியானது, நீர் அளவே ஆகும் - நீரின் உயரம் வரையில் தான் வளரும், அது போல், நுண் அறிவு - கூரிய அறிவானது, தான் கற்ற நூல் அளவே ஆகும் - ஒருவன்படித்த நூல்களின் அளவாகவே இருக்கும், தான்பெற்ற செல்வம் - ஒருவன் அடைந்த பொருளானது, மேலைத் தவத்து அளவே ஆகும் - முன் பிறவியில் செய்த தவத்தின் அளவாகவே இருக்கும், குணம் - ஒருவனுடைய குணமானது, குலத்து அளவே ஆகும் - அவன் பிறந்த குடியின் அளவாகவே இருக்கும்.

(க - து.) ஒருவருடைய அறிவு அவருடைய கல்வியளவாகவே இருக்கும்; ஒருவருடைய செல்வம் அவருடைய முற்பிறப்பு நல்வினையளவாக இருக்கும்; ஒருவருடைய குணம் அவர் குலத்தளவாக இருக்கும்.

## கஉ. நன்மைபெற்ற நரிவெரூஉத்தலையார்

முன்னாளில் ஔவையார் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் பெயருடைய தமிழ் அரசன் ஒருவன் இருந்தான். அவன் நல்ல அழகன். குணநலமும் உடையவன். அவனைக் கண்டவர்களுக்கும் அவனோடு பழகியவர்களுக்கும் நன்மைகள் உண்டாகும்.

அந்நாளில் நரிவெரூஉத்தலையார் என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார். ஒரு காரணத்தினால் அவருடைய தலை நரியும் அஞ்சத் தக்கவாறு மிகக் கோரமாக விளங்கியது. சேரல் இரும்பொறை அரசனைக் காணும்போது அத் தலையின் கோர வடிவம் நீங்கி அழகிய வடிவம் அமையும் என்னும் நியதி உண்டாகியிருந்தது.

நரிவெரூஉத்தலையார் ஒருநாள் இரும்பொறை அரசனைக் கண்டார். அவ்வளவில் விகாரம் நீங்கி அழகிய வடிவம் உண்டாகியது. உடனே நரிவெரூஉத் தலையார் இரும்பொறை அரசனைப் புகழ்ந்துபாடி மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். பிறகு அந்த அரசனுடன் பலநாள் தங்கியிருந்தார். நரிவெரூஉத்தலையாருக்கு மேலும் பல நன்மைகள் உண்டாயின.

அக்கால் நரிவெரூஉத் தலையார் ஔவையாருடைய இந்தப் பாட்டைப் புகழ்ந்து பாராட்டியதுடன் ஔவையாரையும் போற்றினார். ஆகவே நல்லவர்களுடைய கூட்டுறவையும் காட்சியையுந் தான் நாம் விரும்ப வேண்டும்.

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றேஎ—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோ(டு)
இணங்கி யிருப்பதுவும் நன்று."

(உரை) *நல்லாரை - நல்ல குணம் உடையவர்களை, காண்பதுவும் - பார்ப்பதுவும், நன்றே - நல்லதே, நல்லார் - நல்லவர்களுடைய, நலம்மிக்க - நன்மை நிறைந்த, சொல் கேட்பதுவும் - சொல்லைக்கேட்டலும், நன்றே - நல்லதே; நல்லார் - நல்லவர்களுடைய, குணங்கள் - நற்குணங்களை, உரைப்பதுவும் - பேசுதலும், நன்றே - நல்லதே; அவரோடு - அந்த நல்லவர்களுடன், இணங்கி இருப்பதுவும் - சேர்ந்திருத்தலும், நன்று - நல்லதே.*

(க - து.) *நல்லவர்களைக் காண்பதும், அவர்கள் சொல்லைக் கேட்பதும், அவர் குணங்களைப் பாராட்டுவதும், அவரோடு சேர்ந்திருத்தலும் நன்மைக்கு ஏதுவாகும்.*

## ௬௩. கலகம் விளைவித்த கயவன்

ஓர் ஊரிலே வில்லியன் என்ற பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் மிகவும் பொல்லாதவன். அவனை யாராவது பார்த்தால் போதும். அவர்களுக்கு ஏதாவது தீமை உண்டாகாமல் போகாது. அந்த வில்லியனைக் கண்டால் எல்லோரும் புலியைக்கண்டது போல் அஞ்சிப் பதுங்கிக்கொள்வார்கள்.

வில்லியனுக்கு நல்லச்சன் என்னும் பெயருடைய நண்பன் ஒருவன் இருந்தான். அந்த நல்லச்சன் பொல்லாதவன் அல்லன். நல்லச்சன் என்னும் பெயருக்கேற்ப நல்லவன்தான். ஆயினும் அவன் வில்லியனைச் சேர்ந்திருந்தபடியால் அவனும் பொல்லாதவனாகவே இருப்பான் என்று எல்லோரும் முடிவு செய்திருந்தார்கள்.

ஒருநாள் வில்லியனும் நல்லச்சனும் நெடுந் தொலையில் இருந்த ஓர் ஊருக்குச் சென்றார்கள். வழியிலே ஓர் ஊரில் ஒரு வீட்டுத் திண்ணையில் தங்கினார்கள். அந்த வீட்டுக்காரன் பெயர் உலகப்பன். அவன் மனைவியின் பெயர் வயிரமணி. இருவரும் மிக ஒற்றுமையுடையவர்களாய் விளங்கியிருந்தனர். அவர்களுடைய ஒற்றுமைத் தன்மையையும், அன்புடைமையும் வில்லியனுக்கு வயிற்று எரிச்சலை உண்டுசெய்தது. அவர்களுக்குள் பகைமையை உண்டாக்க

எண்ணினான். நல்லவன்போல் நடித்துக்கொண்டிருந்தான்.

வயிரமணிக்குத் தெரியாமல் உலகப்பனை யழைத்து, தான் முக்கால நிகழ்ச்சிகளையும் உரைக்கக் கூடிய சோதிடன் என்றும், அவன் மனைவி முன் பிறப்பில் நாயாக இருந்தவளென்றும், இரவில் விழித்துக்கொண்டிருந்தால் அவள் காலை நக்குவாள் என்றுஞ் சொல்லிவிட்டான். அதேபோல் உலகப்பனுக்குத் தெரியாமல் வயிரமணியை அழைத்துத் தான் சோதிடன் என்றும், அவள் கணவன் முற்பிறப்பில் உப்புக்குறவனாக இருந்தவன் என்றும் நள்ளிரவில் அவனுடைய உள்ளங்காலை நக்கிப்பார்த்தால் உப்புக் கரிக்கும் என்றுஞ் சொல்லிவிட்டான்.

நள்ளிரவில் உலகப்பன் உறங்காமல் தூங்குபவன் போல் படுத்திருந்தான். வயிரமணி உண்மையை உணர்வதற்காக அவன் காலை நக்கிப்பார்த்தாள். உலகப்பன் எழுந்து, "சீசீ நாயே!" என்று சொல்லி அவளை அடித்தான். அவள் "சீசீ உப்புக்குறவா!" என்று சொல்லி வைதாள்

அன்று முதல் கணவனும் மனைவியும் நாயும் பூனையும்போல் சண்டைபோடத் தொடங்கினார்கள். இது தீயவர்களைக்கண்டு அவர்களோடு பழகியதால் ஏற்பட்ட பயன் அல்லவா?

தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதேஎ—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோ(டு)
இணங்கி இருப்பதுவுந் தீது."

(உரை) தீயாரை-கெட்டகுணம் உடையவர்களை, காண்பதுவும் - பார்ப்பதுவும், தீதே - தீயதே; தீயார் - தீயவர்களுடைய, திரு அற்ற - பயனற்ற, சொல் கேட்பதுவும் - சொல்லைக் கேட்டலும், தீதே - தீயதே; தீயார் - தீயவர்களுடைய, குணங்கள் உரைப்பதுவும் - தீக்குணங்களைப் பேசுவதும், தீதே - தீயதே; அவரோடு- அந்தத் தீயவர்களுடன், இணங்கி இருப்பதுவும் - கூடியிருத்தலும்,

(க - து.) தீயவர்களைப் பார்ப்பதுவும் அவர்களுடைய சொல்லைக் கேட்பதுவும், அவர்களுடைய குணங்களைப் பேசுவதும் அவரோடு சேர்ந்திருத்தலும் தீமைக்கு இடமாகும்.

---

## ௧௪. மழைபெய்யச் செய்த பெரியார்

பல ஆண்டுகளுக்குமுன் ஆமாத்தூர் என்னும் ஊரிலே தண்டபாணி அடிகள் என்னும் பெயருடைய பெரியார் ஒருவர் இருந்தார். அவர் முருகக் கடவுளுடைய திருவருளைப்பெற்றவர். அவர் வாக்கால் கூறும்மொழிகள் பெரும்பாலும் கூறியபடியே நிறைவேறும்.

ஒரு காலத்தில் நெடுநாள் மழைபெய்யாமல் தண்ணீருக்கு மிகுந்த தொல்லை ஏற்பட்டது. பயிர் பச்சைகள் மழை இல்லாமல் வாடி வதங்கின. சிலர் தண்டபாணி அடிகளைக் கண்டு, "அடிகாள்! மழை இன்மையால் மக்கள் வருந்துகிறார்கள். நீங்களே மழை பெய்யுமாறு செய்யக்கூடாதா? பெரியோர்கள் வாக்குப் பலிக்குமே," என்று சொன்னார்கள்.

அடிகள் இரக்கங் கொண்டார். மழைபெய்து எல்லோர்க்கும் நன்மை உண்டாகவேண்டும் என்று உள்ளத்தில் எண்ணினார். முகில்களைப் பார்த்து,

> "மேகங்காள்! உங்களுக்கு வேலா யுதனுணை
> மாகம் புரந்திருக்கும் மன்னனுணை—ஏகபர
> வத்துவின தாணையிந்த மாநிலத்தின் மேல்கருணை
> வைத்துமிகப் பெய்ம்மின் மழை."

என்று ஒரு வெண்பாப் பாடினார். சிறிதுபோதில் வானில் கருமுகில்கள் திரண்டன. பெருமழை பொழிந்தது. அந்த மழையினால் எல்லோரும் மிகுந்த நன்மை அடைந்தார்கள்.

"நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை" என்பதும் உண்மை ஆகியது.

"நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்(டு)
எல்லார்க்கும் பெய்யும் மழை."

(உரை) நெல்லுக்கு இறைத்த நீர் - நெற்பயிருக்கு இறைக்கப்பட்ட தண்ணீரானது, வாய்க்கால் வழி ஓடி - வாய்க்காலின் வழியாகச் சென்று, புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம் - வழியில் உள்ள புற்களுக்கும் கசிந்தூறும்; அதைப்போல், தொல் உலகில் - பழைமையான இவ்வுலகத்தில், நல்லார் ஒருவர் உளரேல் - நல்லவர் ஒருவர் இருப்பாராயின், அவர்பொருட்டு - அவருக்காக, எல்லார்க்கும் மழைபெய்யும் - அனைவருக்கும் மழை பெய்யா நிற்கும்.

(க - து.) நல்லவர் ஒருவரால் எல்லோர்க்கும் நன்மை உண்டாகும்.

## ௧௫. பேராற்றல் படைத்த இராமபிரான்

இராமபிரான் என்பவர் பேராற்றல் படைத்தவர். இராவணன் என்பவன் அவருடைய மனைவி சீதையைக் கவர்ந்து கொண்டுபோய் இலங்கையிற் சிறைவைத்து விட்டான். இராமபிரான் உடனே தம் தம்பியாகிய இலட்சுமணரோடு இலங்கைக்குச் சென்று இராவண ேனாடு போர்செய்து அவனைக்கொன்று சீதையை மீட்கவில்லை.

சுக்கிரீவன், அனுமான் முதலியவர்களை முதலில் துணையாகத் தேடிக்கொண்டு அவர்களால் சீதை இருக்கும் இடத்தை அறிந்து, பிறகு குரங்குப் படைகளைத் திரட்டிக்கொண்டு இலங்கைக்குச் சென்று, இராவணனைக் கொன்று சீதையைச் சிறைமீட்டார்.

தனியே சென்றால் அரசநெறிப்படி தூதுபோவது முதலிய செயல்களுக்கும் பிறவற்றிற்கும் தகுதியாக இருக்கமாட்டாது. ஆகவே, எல்லோருக்கும் மற்றவர்களுடைய உதவி வேண்டியது கட்டாயமாகும்.

“ பண்டு முளைப்ப தரிசியே யானலும்
விண்டுமி போனல் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமஞ் செயல் ”

(உரை) பண்டு முளைப்பது - உமிநீங்குவதற்கு முன்னே முளைப்பது, அரிசியே ஆனலும் - அரிசியே யாயினும், உமிவிண்டு போனல் - உமி நீங்கிப்போனல், முளையாது - அவ்வரிசி முளைக்க மாட்டாது, அதைப்போல், கொண்ட பேராற்றல் உடையார்க்கும் - பெற்ற பெரிய வல்லமையை உடையவர்களுக்கும், அளவு இன்றி - துணைவலி இல்லாமல், ஏற்ற கருமம் - எடுத்துக்கொண்ட செயலை, செயல் ஆகாது - செய்துமுடித்தல் முடியாது.

(க - து.) ஒரு காரியத்தைச் செய்து முடிப்பதற்குப் பேராற்றல் படைத்தவர்களுக்கும் துணைவலி வேண்டும்.

## ௯௭. அனுமான்

இராமபிரான் சீதையைப் பிரிந்த பிறகு இலட்சுமண ருடன் சுக்கிரீவன் தங்கியிருந்த கிட்கிந்தமலைக்குச் சென்றார். சுக்கிரீவன் முதலியோர் இராமபிரான் வருகையைப் பார்த்து அஞ்சினர். பகைவனாகிய வாலியால் ஏவப்பட்டுத் தங்களைக் கொல்ல வந்தவர்களோ என்று ஐயப்பட்டனர். அவர்களது செய்தியை அறிந்து வரும்படி அனுமானை அனுப்பினர்.

அனுமான் ஓர் அந்தணச் சிறுவன்போல் இராம இலட்சுமணர்களுக்குமுன் வந்தான். அவர்களோடு உரையாடினன். அனுமானுடைய பேச்சில் இருந்து அனுமான் ஒரு பெரிய வீரனாக இருக்கவேண்டும் என்று இராமர் உணர்ந்துகொண்டார். அவர் இலட்சுமணரைப் பார்த்து, "தம்பி இவனுடைய சிறிய உருவத்தையும், தோற்றத்தையும், பேச்சையும் பார்த்து ஏமாந்து போகாதே. ஆள் உள்ளுக்குள் இருக்கிறான் என்று நன்றாகத் தெரிகிறது," என்று கூறினர்.

சிறிது நேரத்திற்குள் இராமபிரான் இயம்பியது உண்மையாகிவிட்டது. அனுமான் தன்னுடைய பெரிய உருவத்தை இராம இலட்சுமணர்களுக்குக் காட்டினன். இறுதிவரை அவர்களுக்குப் பெருந்துணையாக அமைந்துநின்று முடியாத காரியங்களையெல்லாஞ்செய்து முடித்தான். ஆகையால் எவருடைய உருவத்தோற்றத்தையுங் கண்டு அவர்களைச் சிறியவர்கள் என்று எண்ணி விடக்கூடாது.

"மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல் சிறியர் என்றிருக்க வேண்டா—கடல்பெரிது
மண்ணீரும் ஆகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும்."

(உரை) *தாழை மடல் பெரிது-தாழைமலர் இதழ்களினாலே பெரிதாயிருக்கின்றது, மகிழ் கந்தம் இனிது - மகிழ மலர் இதழ் களினாலே சிறியதாயினும் மணத்தில் தாழம்பூவினும் இனிதா யிருக்கின்றது; கடல் பெரிது - கடல் பெரிதாயிருக்கின்றது, மண் ணீரும் ஆகாது - ஆயினும் அதன் நீர உடல் அழுக்கைக் கழுவுவ தற்குத் தகுந்த நீராகமாட்டாது, அதன் அருகு சிற்றூறல் - அதன் அண்மையில் சிறிய மணற்குழியில் சுரக்கும் ஊற்றுநீர், உண்ணீரும் ஆகும் - குடிக்கத் தகுந்த நீருமாகும்; ஆகையால், உடல் சிறியர் என்று இருக்கவேண்டா - ஒருவரை உருவத்தினாலே சிறியர் என்று இகழுதல் வேண்டா.*

(க - ரு.) *ஒருவருடைய உருவத் தோற்றத்தைக் கண்டு இகழ்தல் கூடாது.*

---

## கஎ. அவையில் அழகன்

ஓர் அரசன் ஒருநாள் தெருவிலே அழகிய ஓர் இளைஞனைக் கண்டான். அந்த இளைஞனுடைய அழகு அரசனுடைய உள்ளத்தைக் கவர்ந்தது. அவனைத் தன்னுடனே வைத்துக்கொள்ள எண்ணினன். அழகிற் சிறந்து விளங்கும் அந்த இளைஞன் கல்வி கேள்விகளினுஞ் சிறந்து விளங்குவான் என்பது அரசனுடைய எண்ணம். உண்மை என்னவென்றால் அந்த இளைஞனுக்கு ஓர் எழுத்துக்கூடப் படிக்கத்தெரியாது.

ஒருநாள் அரசனுடைய அவை கூடியிருந்தது. அமைச்சர்களும் பொதுமக்களும் அவையில் நிரம்பியிருந்தார்கள். அரசனுக்கு வேறோர் அரசனிடம் இருந்து ஒரு திருமுகம் வந்தது. அந்தத் திருமுகத்தைப் பெற்ற அரசன் தனக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்த அழகிய இளைஞனிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னன். அதனைக் கையில் பெற்ற இளைஞன் எழுந்து நின்று ஓலையைப் பிரித்துப் பார்த்தான். அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. நிலத்தைப் பார்ப்பதும் ஓலையைப் பார்ப்பதுமாகச் சிறிதுபோது நின்றான்.

அவன் ஒரு 'முழுமகன்' என்பது அப்பொழுதுதான அரசனுக்குத் தெரிந்தது. அவையில் அமர்ந்திருந்தவர்கள் அனைவரும் கைதட்டி நகைத்தனர். நெடும்பனைபோல் நின்றிருந்த அவன் மெதுவாக அவையைவிட்டு நழுவிவிட்டான். அவையில் இருந்

தவர்கள் அந்த அழகனை மரத்திலும் கேடுகெட்ட வனாக மதித்தனர்.

" கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன்நல் மரம் "

(உரை) கவை ஆகி - கிளைகளை உடையனவாகியும், கொம்பு ஆகி - கொம்புகளை உடையனவாகியும், காட்டு அகத்து நிற்கும் - காட்டினுள்ளே நிற்கின்ற, அவை - அந்த மரஙகள், நல்ல மரஙகள் அல்ல - நல்ல மரஙகள் ஆகா, சவை நடுவே - கற்றோர் அவையின் நடுவிலே, நீட்டு ஓலை - ஒருவர் நீட்டிய ஓலையை, வாசியாநின்றான் - படிக்காமல் நின்றவனும், குறிப்பு அறிய மாட்டாதவன் - பிறர் குறிப்பைத் தெரிந்துகொள்ளமுடியாதவனுமே, நல்மரம் - நல்ல மரமாகும்.

(க - து.) கலவி யறிவில்லாதவனும் பிறர் குறிப்பை உணர்ந்துகொள்ளாதவனும் மரதைப் போன்றவனும்.

## கரு. போலிப் புலவன்

பழந்தமிழ் மன்னர்களில் ஒருவன் செய்யுள் இயற்றிவரும் புலவர்களுக்கெல்லாம் பெரும்பொருள் பரிசில் வழங்கிக்கொண்டிருந்தான். அப்போது ஓர் ஊரிலே பில்லப்பன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். வேலை செய்யாமல் பெரும்பொருள் தேடுவதற்குத் தக்கவழி அரசர்களின் மேல் செய்யுள் பாடிக்கொண்டு செல்வதுதான் என்று அவன் முடிவு செய்தான்.

ஒருநாள் அவன் சிறிது கல்விகற்ற ஒருவரிடஞ் சென்று "புதிதாகப் பாட்டு இயற்றுவது எப்படி?" என்று உசாவினன். அதற்கு அந்த மனிதன், "எப்படி வேண்டுமானாலும் பாடலாம்; கன்னபின்ன என்று பாடிக்கொண்டுபோ," என்று சொன்னார். பில்லப்பன் பெருமுயற்சி செய்து, "கன்னபின்ன மன்னதென்ன உங்களப்பன் கோவிற் பெருச்சாளி," என்று பாடி முடிவு செய்தான்.

தான் பாட்டு இயற்றும் ஆற்றல் பெற்றுவிட்ட தாக உள்ளம் பூரித்து விரைந்துசென்று அரசனிடம் தான் பாடிய பாட்டைக் கூறினன். இதனைக் கேட்டு அங்கிருந்தவர்கள் யாவரும் விழுந்துவிழுந்து நகைத் தார்கள். பில்லப்பன் தன்னுடைய பாட்டு நன்றாக இருப்பதால் எல்லோரும் பெருமகிழ்ச்சி அடைந்து ஆரவாரஞ் செய்கிறார்கள் என்று எண்ணித் தானும் அவர்களோடு சேர்ந்து ஆரவாரஞ் செய்தான்.

தெரியாதவர்கள் ஒரு செயலை மேற்கொண்டால் இவ்வாறு தான் இழிவடைய நேரிடும்.

" கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித்தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி."

(உரை) கல்லாதான் - கல்வியறிவு பெறாதவன், கற்ற கவி - கற்றுக்கொண்ட பாட்டானது, கானம் மயில் ஆட-அழகிய மயிலானது ஆட, கண்டு இருந்த வான்கோழி - அதைப் பார்த்துக்கொண்டிருந்த வான்கோழியானது, தானும் அதுவாகப் பாவித்து - தன்னையும் மயிலாக எண்ணிக்கொண்டு, தானும் தன் பொல்லாச சிறகை விரித் தாடினாற்போலும் - தானும் தனது அழகில்லாத சிறகை விரிததுககொண்டு ஆடினாற்போன்றதாம்.

(க - து.) கல்வியறிவில்லாதவன் கற்றவனைப்போல் வேடம் போட்டாலும் கல்வி யறிவுடையவனாக மாட்டான்.

## கக. நன்றிகெட்ட நாகன்

பனையூர் என்னும் ஓர் ஊரிலே நாகன் என்னும் பெயருடைய அறிவிலி ஒருவன் இருந்தான். அவனுக்கு எழுதப்படிக்கத் தெரியாது. அவன் சிறுவனாக இருக்கும்போதே தாய் தந்தையரை அடித்தல், இகழ்தல் முதலிய தீச்செயல்களைச் செய்துகொண்டு திரிந்தான். நாகன் கெட்டு அழிவதைக்கண்ட ஓர் அறிஞர் நாகனைப் பெரியார் ஒருவரிடம் அனுப்பி அவனை ஆட்கொண்டு நல்வழிக்குக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

பெரியார் தமது பேராற்றலால் நாகனுக்கு அறிவுரைகள் கூறி அவனுடைய தீக்குணங்களை யெல்லாம் போக்கினார். நாகனுக்குத் திருமணமுஞ் செய்து வைத்து அவன் இந்த உலகத்திலே தொல்லைப்படாமல் வாழ்வதற்கு வேண்டியவைகளையுஞ் செய்தார். நாகன் சிறிதுகாலம் வரையில் அந்தப் பெரியவரிடம் ஒழுங்காக நடந்துகொண்டிருந்தான். மீண்டும் நாகனுக்குத் தீக்குணங்கள் வெளிப்படத் தொடங்கின.

அவன் ஒருநாள் அந்தப் பெரியாரை வாய்க்கு வந்தபடி இகழ்ந்து அவர் வருந்துமாறு பேசிவிட்டு அவருடைய பொருள்கள் சிலவற்றையுந் தூக்கிக்கொண்டு ஓடிப்போனான். நாகன் இப்படி நன்றிகெட்டவனாக இருக்கிறானே என்று பெரியார் உள்ளம் வருந்தினார். நாகன் நன்றிமறந்த தீவினையால் சின்னாளில் பொருள்கள் எல்லாவற்றையும் இழந்து ஒன்றுக்கும் உதவாமல் அழிந்துபோனான்.

உலகத்தார் நாகனைப்போல் "இவ்வுலகில் நன்றி கெட்ட உயிரும் பிறக்குமோ," என்று மிகுந்த வியப்படைந்தார்கள்.

**"வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி**
**ஆங்கதனுக் காகாரம் ஆனாற்போல்—பாங்கறியாப்**
**புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்**
**கல்லின்மேல் இட்ட கலம்."**

(**உரை**) வேங்கை வரிப்புலி நோய் - வரிகளையுடைய வேங்கைப் புலியின் நஞ்சு நோயை, தீர்த்தவிடகாரி - போக்கிய நச்சு மருத்துவன், ஆங்கு - அப்பொழுதே, அதனுக்கு ஆகாரம் ஆனாற்போல் - அப்புலிக்கு இரையானாற்போல, பாங்கு அறியா - நன்றியறிவில்லாத, புல் அறிவாளர்கு - அற்ப அறிவினர்கு. செய்த உபகாரம் - செய்த உதவியானது, கல்லின்மேல் இட்ட கலம் - கல்லின்மேல் போடப்பட்ட மட்கலம்போலப் பயனற்றதாக முடியும்.

(**க - து.**) தீயோர்க்கு உதவி செய்யின் பிறகு செய்தவர்களுக்கே தீமையை விளைவிக்கும்.

---

## ௨0. அறிஞனும் அரசனும்

ஓர் அரசனுடைய அவைக்கு ஒரு புலவர் சென்ரூர். அப் புலவர் மிகக் குள்ளமாகவும் கருமை நிறம் வாய்ந்தவராகவும் இருந்தார். அவருடைய தோற்றம் பார்வைக்கு அழகாக இராது. பார்ப்பவர்கள் அவர் ஒரு புலவர் என்றே எண்ணமாட்டார்கள். அப்புலவர் உருவத்தில் இப்படி இருந்தாலும் அறிவிற் சிறந்தவர்.

எவரும் அவருக்கு முன்னுல் வாய்திறந்து பேசவே முடியாது. அப்படிப் பேசினுல் ஏதாவது கிண்டல் செய்துவிடுவார். அந்தப் புலவரின் பெயர் சம்பந்த சரணுலயர் என்பர். அப் புலவர் அந்த அரசன் அவைக்குப் புதிதாக வந்திருந்தபடியால் அரசன் அவரை அறிந்துகொள்ளவில்லை. அவருடைய தோற்றச் சிறுமையை மட்டும் பார்த்த அரசன், மிக ஏளனத்துடன் அங்கிருந்தவர்களைப் பார்த்து, " இவர் அண்டங் காக்கைக்குப் பிறந்தவர் போலும்," என்று கூறினுன்.

உடனே அந்தப் புலவர் எழுந்தார். அரசனைப் பார்த்தார். " அரசே! அண்டங் காக்கைக்குப் பிறந்தது தாங்களே, நான் அன்று," என்று கூறிவிட்டு அமர்ந்தார். புலவர் புகன்ற மாற்றம் புரவலனுக்குப் பொறுக்கொணுச் சினத்தை அளித்தது. அவன் பற்களை "நறநற" என்று கடித்தான். கண்களை உருட்டி உருட்டி விழித்தான். அங்கிருந்தவர்கள் எல்லோரும் நகைத்தார்கள்.

அரசனுடைய சினத்தைக் கண்ட புலவர் மீண்டும் எழுந்தார். "அரசே! நான் கூறியதைத் தவறாக நினைத்துக் கொள்ள வேண்டாம். "அண்டம் - உலகம். காக்கைக்கு - பாதுகாத்தலுக்கு" என்று பொருள் விளக்கஞ் செய்யத் தொடங்கினார். அங்கிருந்தவர்கள் வியப்புக் கடலுள் மூழ்கினார்கள். அரசனோ, "இவர் பெரும்புலவர். நாம் வகைதெரியாது மாட்டிக் கொண்டோம்" என்று எண்ணி நாணினான்.

"அடக்கம் உடையார் அறிவிலர்என் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டாம்—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி இருக்குமாங் கொக்கு."

(உரை) கொக்கு - கொக்கானது, மடைத்தலையில் - நீர்மடையின் இடத்திலே, ஓடும் மீன் ஓட - ஓடுகிற சிறுமீன்கள் எல்லாம் ஓடிக்கொண்டிருக்க, உறுமீன வரும் அளவும் - இரையாதற்கேற்ற பெரிய மீன் வருகிறவரையில், வாடி இருக்கும் - அடங்கியிருக்கும், அதைப்போல்; அடக்கம் உடையார் - அடக்கம் உடையவர்களை, அறிவு இலர் என்று எண்ணி - அறிவற்றவர்கள் என்று நினைத்து, கடக்கக் கருதவும் வேண்டாம - அவர்களை வெல்லுதற்கு நினைக்கவும் வேண்டாம்.

(க - து) அடக்கம உடையவர்களை மதிக்காதவர்களுக்குத் துன்பம் உண்டாகும்.

---

## உக. தருமரைச் சூழ்ந்துசென்ற தக்கோர்

தருமர் துரியோதனனுடன் சூதாடியபடியால் நாடு நகரம் வீடுவாசல் பொருள் முதலியவற்றையும் ஒரு நொடியில் இழந்து ஒன்றுமில்லாதவராய்க் காட்டை நோக்கிப் புறப்பட்டார். அதுவரையில் பாண்டவர்களுடன் இருந்து நன்றாக உண்டு சுற்றித் திரிந்த பலரும் இனிமேல் இவர்களால் எத்தகைய பலனும் ஏற்படாது என்று எண்ணியவர்களாய் ஒவ்வொருவராய் நீங்கிப் போனார்கள்.

சில அறிவாளிகள் பாண்டவர்களை விட்டுவிட்டு ஓடிப்போகவில்லை. பாண்டவர்களைப் பின்தொடர்ந்து காட்டிற்குஞ் சென்றனர். பாண்டவர்கட்கு ஏற்பட்ட நன்மை தீமைகளிலும் பங்குகொண்டனர். பிரிந்து போனவர்களுடைய சிறுமையையும், பிரியாமல் சுற்றிக்கொண்டு காடுகளிலும் உடன் வந்தவர்களுடைய பெருமையையும் பாண்டவர்கள் நன்கு அறிந்து கொண்டார்கள்.

நல்லுறவினர்களையும் போலியுறவினர்களையும் பாண்டவர்கள் நன்கறிந்து கொள்வதற்கு 'வனவாசம்' சிறந்த துணையாக விளங்கியது.

" அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி உறுவார் உறவு."

(உரை) அற்ற குளத்தின் - நீர் வற்றிய குளத்தினின்றும், அறுநீர்ப் பறவைபோல் - நீங்கிப்போகின்ற நீர்வாழ் பறவைகளைப் போல, உற்றுழி - வறுமைவந்த காலத்தில், தீர்வார் உறவு அல்லர்- நீங்கிப் போவோர் உறவினர்களாக மாட்டார்கள், அக்குளத்தில் - அந்தக் குளத்தில், கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போல - கொட்டியையும் ஆம்பலையும் நெய்தலையும் போல், ஒட்டி உறுவார் - நீங்காது சேர்ந்திருப்பவர்கள், உறவு - நல்ல உறவினர்களாவார்.

(க - து.) துன்பம் வந்தபொழுதும் நீங்காமல் சேர்ந்திருப்ப வர்கள்தாம் நல்ல உறவினர்களாவா.



## ௨௨. வறுமையை அடைந்த கம்பர்

"கல்வியிற் பெரியவன் கம்பன்" என்று புகழ் படைத்த கம்பரைச் சோழமன்னன் ஆதரித்துக் கொண்டிருந்தான். சில காரணங்களால் கம்பருக்குஞ் சோழனுக்கும் சொற்போர் மூண்டது. கம்பர் சோழ மன்னனுடன் பிணங்கிக்கொண்டு வேற்று நாட்டை நோக்கிப் புறப்பட்டுவிட்டார். சோழமன்னன் கொடுத்திருந்த பொருள்களையும் கம்பர் எடுத்துக் கொள்ளவில்லை. ஒரு காசும் இல்லாமலே புறப்பட்டார்.

ஊர் ஊராகத் திரிந்த கம்பர் பல இடங்களிலும் தமது அறிவாற்றலைக் காட்டிப் பொருள் பெற்றுத் தம்மைக் காப்பாற்றிக்கொண்டு வேறொரு நாட்டிற்குச் சென்றார். அந்த நாட்டு அரசன் கம்பருடைய அருமை பெருமைகளையெல்லாம் முன்னமே நன்கு அறிந்திருந்தான். அவன் கம்பரைத் தெய்வம்போல் பாராட்டிப் பலவகைச் சிறப்புக்களுஞ் செய்தான்.

சிறிது காலம் அங்குத் தங்கியிருந்த கம்பர் பல்வகையான சிறப்புக்களோடும் பல்லக்கில் சோழ நாட்டை நோக்கிப் புறப்பட்டார். கம்பர் பெருஞ் சிறப்புடன் வருதலைச் சோழமன்னன் கண்டான். "அறிஞர்கட்கு எல்லா இடங்களினும் சிறப்பு கிடைக்கும். நம்மைப் போன்றவர்கள் வேற்றிடஞ் சென்றால் தான் தொல்லைப்பட நேரிடும். இச்செய்தி நமக்கு முன்னமே தெரியாமற் போயிற்றே," என்று உள்ளம் வருந்தினான்.

"சீரியர் கெட்டாலுஞ் சீரியரே சீரியர்மற்
றல்லாதார் கெட்டாலங் கென்னாகும்—சீரிய
பொன்னின் குடமுடைந்தால் பொன்னாகும் என்னாகும்
மண்ணின் குடமுடைந்தக் கால்."

(உரை) சீரியர் கெட்டாலும் - மேன்மக்கள் வறுமையடைந்தாலும், சீரியரே - மேன்மைக் குணம் உடையவரேயாவர், சீரியர் அல்லாதார் கெட்டால் - கீழ்மக்கள் வறுமையடைந்தால், அங்கு என் ஆகும் - அப்போது அவரது குணம் யாதாகும்? சீரிய பொன்னின் குடம் உடைந்தால் - சிறப்புப் பொருந்திய பொன்குடம் உடைந்தாலும், பொன் ஆகும்-மீண்டும் பொன்னேயாகிப் பயனைக் கொடுக்கும்; மண்ணின் குடம் உடைந்தக்கால் - மண்ணாலாகிய குடம் உடைந்தால், என் ஆகும்-அது யாது பயனைக் கொடுக்கும்?

(க - து.) மேலோர்கள் வறுமையுற்றாலும் மேலோர்களே யாவர்; கீழோர் வறுமையுற்றாலோ அடியோடு கெட்டொழிவர்.

## ௨௩. தலைவனைப் பிரிந்த தமயந்தி

தமயந்தி என்பவள் நிடத நாட்டு மன்னனாகிய நளன் என்பவனுக்குத் திருமணஞ் செய்யப்பட்டாள். நளன் எல்லாச் செல்வங்களையும் சிறப்பாகப் பெற்றிருந்தான். பேராற்றலினும் பெரும்பொருளினும் அவனைப் போன்றவர்கள் வேறு எவரும் இலர். நளனுடைய நாடும் பெருஞ்சிறப்புடையதாக விளங்கியது.

எல்லாச் சிறப்புக்களையும் பெற்ற தமயந்திக்கு அவைகளையெல்லாம் நுகர்தற்குரிய நல்லூழ் குன்றியது. தீவினையினால் ஆகிய போகூழ் தன் பயனை ஊட்டத்தொடங்கியது. நளன் புட்கரன் என்பவனோடு சூதாடி நாடு நகரம் வீடு வாசல்கள் பொருள்கள் எல்லாவற்றையும் இழந்துவிட்டான். மனைவியையும் மக்களையும் அழைத்துக்கொண்டு காட்டிற்குச் சென்றான். அங்கு மனைவி மக்களையும் பிரிந்துபோனான். தமயந்தி நள்ளிரவிலே நடுக்காட்டிலே தனியாக விடப்பட்டாள்.

அதன் பிறகும் அவளுக்குப் பல தொல்லைகள் உண்டாயின. "எல்லாம் ஊழ்வினைப் பயன்," என்று தமயந்தி தன்னுடைய தந்தையின் நாட்டை அடைந்து தான் பிறந்த வீட்டில் தங்கியிருந்தாள். "நிதியும் கணவனும் நேர்படினும் தம்தம் விதியின் பயனே பயன்," என்பது தமயந்தியின் ஊழில் நன்கு விளங்கியது.

" ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
நாழி முகவாது நால்நாழி—தோழி
நிதியும் கணவனும் நேர்படினும் தம்தம்
விதியின் பயனே பயன்."

(உரை) ஆழ் கடல்நீர் - ஆழமாகிய கடலின் நீரை, ஆழ அமுக்கி முகக்கினும்-அழுந்தும்படியாக அமிழ்த்தி மொண்டாலும், நாழி - ஒரு படியானது, நால்நாழி முகவாது - நான்குபடி நீரை மொள்ளாது; அதைப்போல், தோழி - தோழியே! நிதியும் கணவனும் நேர்படினும் - பெண்களுக்குப் பொருளும் தகுந்த தலைவனும் கிடைத்தாலும், தம் தம் - அவரவர்களுடைய, விதியின் பயனே பயன் - ஊழின் அளவாகிய பயனே பயனாகமுடியும்.

(க - து.) வேண்டும் பொருள்களெல்லாம் பெற்றிருந்தாலும், ஊழ்வினையின் அளவுக்குமேல் எதனையும் நுகரமுடியாது.

## ௨௪. அண்ணன் தம்பிகள்

ஓர் ஊரில் உடன்பிறந்தார் இருவர் இருந்தனர். அவர்களுடைய தந்தை மாண்டுபோனான். தந்தை தேடிய நிலபுலம் முதலியவைகளைப் பங்கு போடுவதில் இருவருக்கும் சண்டை மூண்டுவிட்டது. ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டனர். ஒருவரை மற்றொருவர் கொன்று தொலைப்பதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

“அண்ணன் தம்பி தான் சென்மப் பகையாளி” என்னும் பழமொழி அவர்களிடத்தில் பலித்துவிட்டது. பக்கத்தில் இருந்தவர்கள் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்களே தவிர, அவர்களுடைய சச்சரவைத் தீர்த்து வைப்பதற்கு யாரும் முயற்சி செய்யவில்லை. “அண்டைவீட்டுச் சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி” என்று பேசாமல் இருந்தார்கள்.

வேற்றூர் மனிதர் ஒருவர் ஒருநாள் அவ்வூருக்கு வந்தார். அவர் நல்ல மனிதர்; அறிவாளி. உடன்பிறந்தார்கள் போரிடுவதைப் பார்த்து மனம் வருந்தினார். போருக்குக் காரணமாக இருந்த பொருள்களைத் தகுந்தவாறு இருவருக்கும் பிரித்துக்கொடுத்து விட்டு அவர்களை ஒற்றுமைப்படுத்தி விட்டார்.

“உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
மாமலையில் உள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரும் உண்டு.”

(**உரை**) வியாதி - நோயானது, உடன்பிறந்தே கொல்லும் - உடம்புடன் பிறந்தே அதனைக் கொல்லுகின்றது, ஆகையால், உடன்பிறந்தார் - உடன்பிறந்தவர்கள் எல்லோரும், சுற்றத்தார் என்று இருக்கவேண்டா - நன்மையைச் செய்யும் உறவினர்கள் என்று எண்ணிக்கொண்டிருக்கவேண்டியதில்லை; உடன்பிறவா - கூடப் பிறவாத, மாமலையில் உள்ள மருந்தே - பெரியமலையில் இருக்கிற மருந்தே, பிணிதீர்க்கும் - நோயைப் போக்கும், அம் மருந்து போல்வாரும் உண்டு - அம் மருந்தைப் போன்றவர்களும் சிலர் இருப்பார்கள்.

(க - து.) உடன்பிறந்தார் தீமை செய்தலும் அயலார் நன்மை செய்தலும் உண்டு.

## உரு. திரௌபதி

திரௌபதி என்பவள் பாண்டவர்களுடைய மனைவி. கற்பிற் சிறந்தவள். பாண்டவர்கள் காட்டிலே திரிந்துகொண்டிருக்கும்போது துரியோதனனுடைய ஏவலால் ஒரு முனிவர் பாண்டவர்களிடம் விருந்து சாப்பிடுவதற்கு வந்தார். பாண்டவர்கள் சாப்பிட்டு முடிந்தபின் அந்த முனிவர் வந்தபடியால் யாது செய்வதென்று பாண்டவர்களுக்குத் தெரியவில்லை.

அவர்கள் கண்ணபிரானை எண்ணினார்கள். அப் பண்ணவன் விரைந்துவந்தார். செய்தியை அறிந்தார். "உங்கள் உணவு ஏனத்தில் சோறு ஏதாவது ஒட்டிக்கொண்டிருக்கிறதா பாருங்கள்," என்றார். திரௌபதி அட்சய பாத்திரம் என்னும் தங்களுடைய ஏனத்தைப் பார்த்தாள். அதில் ஒரு சோறு ஒட்டிக் கொண்டிருந்தது. "நான் கற்புடையவளாயின் இந்த ஒரு சோற்றுப் பருக்கையினால் எல்லா விருந்தாளி களுடைய பசியும் மாறவேண்டும்," என்று கூறி அதனைக் கண்ணபிரானுக்குக் கொடுத்தாள். அவர் அதனை அன்புடன் உண்டார்.

இதனால் அவர்பசி நீங்கியதுடன் உணவு புசிப்ப தற்கு வந்த முனிவருடைய பசியும் தீர்ந்துபோய்விட் டது. முனிவர் பாண்டவர்களை வாழ்த்திச் சென்றார். "இல்லாள் அகத்திருக்க இல்லாததொன்றில்லை," என்பது அன்று திரௌபதியிடம் நன்கு பெறப் பட்டது.

" இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை
இல்லாளும் இல்லாளே யாமாயின்—இல்லாள்
வலிகிடந்த மாற்றம் உரைக்குமேல் அவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும்."

(உரை) *இல்லாள் அகத்து இருக்க* - கற்புடைய மனைவியானவள் வீட்டிலே இருந்தால், *இல்லாதது ஒன்று இல்லை* - அவ் வீட்டில் இல்லாத பொருள் ஒன்றும் இல்லை, *இல்லாளும் இல்லாளே ஆமாயின்* - மனையாள் இல்லாமற் போயினும், அல்லது இருந்துகொண்டு; *இல்லாள்* - மனைவியானவள், *வலி கிடந்த மாற்றம் உரைக்குமேல்* - கடுமை பொருந்திய சொற்களைச் சொன்னாலும், *அவ இல் புலி கிடந்த தூறு ஆய்விடும்* - அவ்வீடானது புலி தங்கிய புதர்போல ஆய்விடும்.

(க - து.) கற்புடைய மனையாள் இருப்பதே வீடாகும்.

## உ௯. பேரவாக்கொண்ட பித்தன்

பல ஆண்டுகளுக்கு முன்பு தங்கப்பன் என்னும் பெயர் உடையவன் ஒருவன் இருந்தான். அவனுக்குச் செல்வம் ஒன்றும் இல்லை. அவன் தந்தை இறந்த பிறகு அவன் கொடுக்கல் வாங்கல் கணக்குகளைப் பார்த்தபோது தங்கப்பனுக்கு ஐம்பது வெண் பொற்காசுகளே மிஞ்சின. தங்கப்பன், "என்னுடைய பெயர் தான் தங்கமாக இருக்கிறதே தவிர செல்வம் ஒன்றும் இல்லையே. வியாபாரத்தால் பொருள் தேடலாம்," என்று எண்ணமிட்டான்.

ஐம்பது வெண்பொற்காசுகளையும் முதற்பொருளாகக் கொண்டு ஒரு சிறு கடை வைத்தான். பிறகு கடையில் உட்கார்ந்துகொண்டு இந்த ஐம்பதையும் நூறாக்கவேண்டும்; பிறகு நூற்றை இருநூறாக்கவேண்டும். இப்படியே பெருக்கிக் கொண்டேபோனால் விரைவில் ஒரு கோடீசுவரனாக வேண்டும். அப்பொழுது தங்கப்பன் என்னும் பெயர் மிகத் தகுந்ததாகப் பொருந்தும் என்று எண்ணமிட்டவாறே உறங்கி விட்டான்.

அவன் எண்ணமிட்டுக்கொண்டு உறங்கத் தொடங்கியபோது மாலை நேரம். மறுநாள் காலையில் தான் தங்கப்பன் கண்விழித்துப் பார்த்தான். கடையில் இருந்த பொருள்களை இரவில் யாரோ எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள். கடை வெறுமையாக

இருப்பதைப் பார்த்துத் தங்கப்பன் வருந்தினன். முன் இரவு தான் எண்ணமிட்ட செய்தியை எல்லோருக்கும் தெரியப்படுத்தினன். அதனைக் கேட்டோர், "ஆசை இருக்கிறது தாசில்பண்ண அதிருட்டம் இருக்கிறது கழுதை மேய்க்க," என்றுகூறி எள்ளி நகையாடினர்கள்.

"எழுதியவா றேகாண் இரங்குமட நெஞ்சே
கருதியவா றமோ கருமம்—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்காய்
முற்பவத்திற் செய்த வினை" [ஈந்ததேல்

(உரை) இரங்கும் மட நெஞ்சே - வருந்துகின்ற அறியாமை பொருந்திய மனமே! கருதிப்போய்க் கற்பகத்தைச சேர்ந்தோர்க்கு - நன்மைபெறலாம் என்று நினைத்துப் போய்க் கற்பகத் தருவை அடைந்தவர்களுக்கு, காஞ்சிரங்காய் ஈந்ததேல் - அஃது எட்டிக்காயைக் கொடுத்ததாயின், முற்பவத்திற் செய்தவினை - அஃது அவ்வாறு கொடுத்ததற்குக் காரணம் முன் பிறப்பிற் செய்த தீவினையேயாகும், கருமம் கருதியவாறு ஆமோ - செய்தொழில்கள் நாம் நினைத்தபடியே நடக்குமோ?, எழுதியவாறே காண் - ஊழ் வினைப்படியே நடக்கும் என்று அறிந்துகொள்வாயாக!

(க - து.) செய்தொழில்கள் பழவினைப்படியே நடக்குமே அல்லாமல் எண்ணியவாறு நடைபெற மாட்டா.

## ௨௭. கழகத்தில் மூன்று உறுப்பினர்கள்

ஓர் ஊரிலே ஓர் அறிஞர் இருந்தார். அவர், 'திருவள்ளுவர் செந்தமிழ்க் கழகம்' என்னும் பெயருடன் ஒரு கழகம் ஏற்படுத்தினார். திருக்குறளின் அருமை பெருமைகளை எடுத்துக்கூறி அடிக்கடிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். ஊரில் உள்ள மக்கள் தக்க அறிவு அமையப் பெறாதவர்களாதலின் அறிஞர் அக்கழகத்தை நடத்துவது தொல்லையாகவே இருந்தது. கழக உறுப்பினர்களுக்குள் அடிக்கடி கலாம் நேரிட்டு அவர்கள் கழகத்தைவிட்டுப் பிரிந்து போய் விடுவது வழக்கம்.

ஒருமுறை கழக உறுப்பினர்கள் ஒரு காரியத்தை முன்னிட்டுப் பெரும்போர் தொடங்கினார்கள். வாய்ச் சண்டை முற்றிக் கைச்சண்டைக்கும் வந்துவிட்டது. அந்நிலையில் மூன்று உறுப்பினர்கள் கழகத்தை விட்டு வெளியேறினார்கள். அவர்களில் ஒருவர் பெயர் முத்தழகு; ஒருவர் பெயர் வல்லாயப்பர்; மற்றொருவர் பெயர் மருதநம்பி.

இவர்களில் மருதநம்பி நல்ல அறிவாளி. கழகத்தை மேலும் தொடர்ந்து நடத்துவதற்குத் தாம் துணையாக இருக்கவேண்டும் என்னும் எண்ணத்துடன் சண்டையிட்டுக்கொண்டு வெளியேறிய சிறிது போதுக்கெல்லாம் தாமாகவே திரும்பிவந்து கழகத்தில் அமர்ந்துவிட்டார். முத்தழகு என்பவர் சிறிது அறிவுடையவர். சிலர் அவரை வற்புறுத்தி அமைதிப்படுத்தி அழைத்துவந்து கழகத்தில் சேர்த்தார்கள்.

மற்றொருவராகிய வல்வாயப்பரோ முரடர். அறிவும் இல்லாதவர். தாம் மேற்கொண்டு கழகத்தை எட்டிக்கூடப் பார்ப்பதில்லை என்று உறுதிமொழி உரைத்துவிட்டு ஒருசேரப் போய்விட்டார். "கற்பிளவோடு ஒப்பர் கயவர்" என்னும் மொழி இவரிடத்தில் உண்மையாகிவிட்டது.

"கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே— [விற்பிடித்து
நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்."

(உரை) கயவா - கீழோர், கடுஞ்சினத்து - கடுஞ்சினங் கொண்டு வேறுபட்டால், கல்பிளவோடு ஒப்பர் - கல்லின் பிளவு போல் திரும்பக்கூட மாட்டார்கள், பொன் பிளவோடு ஒப்பாரும் போல்வார - பொன்னின் பிளவைப்போல் ஒருவா கூட்டக் கூடு வாரும் உளர், சீர் ஒழுகு சான்றோர் சினம் - சிறப்புமிக்க பெரியோருடைய சினமோ எனின், வில்பிடித்து நீர்கிழிய எய்தவடுப் போல மாறும் - வில்லைப்பிடித்து அம்பினாலே நீர பிளக்க எய்த பிளவைப்போல அப்பொழுதே நீங்கும்.

(க - ரு.) சினத்தால் வேறுபடின் கீழோர் ஒருகாலும் கூடார, இடைப்பட்டோர் ஒருவர் கூட்டக் கூடுவர்; பெரியோர்களோ அப்பொழுதே கூடுவர்.

# உ௮. குமணனும் அமணனும்

குமணன் என்பவன் வள்ளல்களில் ஒருவன். செய்யுள் இயற்றிக் கொண்டுவந்து தன்னைக் காண்பவர்கள் எல்லோருக்கும் பெரும் பொருள் வழங்கிக் கொண்டிருந்தான். அதனால் அவனுடைய புகழ் எட்டுத் திக்குகளிலும் எட்டி நின்றது. குமணன் நல்ல கல்வி அறிவு பெற்றவன். ஆகையால்தான் புலவர்களுடைய பாட்டின் சிறப்பை நன்கு உணரமுடிந்தது. அக் காலத்தில் இருந்த நல்ல அறிவாளிகளும் குணவான்களும் குமணனைச் சூழ்ந்திருந்தார்கள். அதனால் குமணனுடைய அவை மிகுந்த சிறப்புடன் விளங்கியது.

அந்தக் குமணனுக்குத் தம்பி ஒருவன் இருந்தான். அவனுடைய பெயர் அமணன். அவன் சிறிதும் கல்வி அறிவு இல்லாதவன். அவனுடைய குணமும் தீக்குணம். தீக்குணமுடைய நண்பர்கள் பலர் எப்பொழுதும் அமணனைச் சூழ்ந்துகொண்டே இருப்பார்கள். அவர்கள் கொலை களவு முதலிய கொடுந் தொழில்களுக்கும் அஞ்சமாட்டார்கள். அவர்களுடைய கூட்டுறவினால் நாளடைவில் அமணன் அடியோடு கெட்டுப்போனான்.

முடிவில் தன் தமையனாகிய குமணனைக் கொலை செய்வதற்கும் முடிவு செய்தான். நல்லவர்களிடத்தில் நல்லவர்களும், பொல்லாதவர்களிடத்தில் பொல்லாதவர்களும் சேர்ந்து உறவு கொள்வார்கள் என்

பதற்கு இந்தக் குமணனும், அமணனும் அந்தக் காலத்தில் நல்ல எடுத்துக்காட்டாக விளங்கினார்கள்.

" நற்றா மரைக்கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம்."

(உரை) நல் தாமரைக் கயத்தில் - நல்ல தாமரைமலர் பொருந்திய குளத்தில், நல் அன்னம் சேர்ந்தால்போல் - நல்ல அன்னப் பறவை சேர்ந்தாற்போல, கற்றாரைக் கற்றாரே காமுறுவர் - கல்வியறிவுடையோரைக் கல்வியறிவுடையவர்களே விரும்பிச் சேர்வார்கள், முதுகாட்டில் - சுடுகாட்டில் உள்ள, பிணம் - பிணத்தை, காக்கை உகக்கும் - காக்கையானது விரும்பிச் சேரும், அதைப் போல, கற்பு இலா மூர்க்கரை - கல்வி அறிவு இல்லாத அறிவிலிகளை, மூர்க்கர் முகப்பர் - மூடர்களே விரும்புவார்கள்.

(க - து.) கற்றவரைக் கற்றவர் விரும்புவர்; மூடரை மூடர் விரும்புவர்.

---

## உ௯. ஒளித்துக்கொண்ட சூதாடிகள்

ஒரு நகரத்திலே ஒரு தெருவில் சிலர் சூது விளை யாடுகிறார்கள் என்றும், அவ்வழியே செல்வோர் தங் கள் கையில் உள்ள பணங்களை அந்தச் சூதாடிகளிடம் தோற்றுவிட்டுத் தொல்லைக்கு உள்ளாகிறார்கள் என் றும், ஊர்க்காவல் அதிகாரிகளுக்குச் செய்தி எட்டி யது. அவர்கள் சூதாடிகளைப் பிடித்துத் தண்டிக்க எண்ணினார்கள்.

சூதாட்டம் நடைபெறுவதாகக் கேள்விப்பட்ட இடத்திற்குச் சில ஊர்க்காவல் வீரர்களை (போலீஸ் காரர்கள்) அனுப்பினார்கள்; ஊர்க்காவல் வீரர்கள் வருதலைக் கண்ட சூதாடிகள் அண்மையில் இருந்த மறைவிடங்களில் பதுங்கி ஒளித்துக் கொண்டார்கள். ஊர்க்காவல் வீரர்கள் குறிப்பிட்ட இடத்திற்கு வந்த போது அங்குக் குற்றமற்ற சிலர் நின்றுகொண்டிருந் தார்கள். ஊர்க்காவல் வீரர்கள், அவர்களே சூதாடி களாக இருக்கவேண்டும் என்று எண்ணி அவர்களைப் பிடித்துக் கொண்டுபோய் அதிகாரிகள் முன் நிறுத்தி னார்கள்.

குற்றஉசாவலில் அவர்கள் குற்றமற்றவர்கள் என்று பெறப்பட்டது. பின் ஊர்க்காவல் வீரர்கள் பல இடங்களினும் தேடி உண்மையான குற்றவாளி களைப் பிடித்துக்கொண்டு போய்த் தண்டனைக்கு உள் ளாக்கினார்கள். குற்றவாளிகள் எப்பொழுதும் மறைந்துதான் திரிவார்கள் என்பதும், குற்றமற்றவர் கள் தாம் அச்சமில்லாமல் திரிவார்கள் என்பதும்

அதன்பிறகுதான் அந்த ஊர்ககாவல் வீரர்களுக்கு விளங்கியது.

> " நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்
> அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்
> கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
> கரவிலா நெஞ்சத் தவர்."

(உரை) *நாகம்-நல்லபாம்பு, தான் நஞ்சு உடைமை அறிந்து - தான் நஞ்சுடையதாயிருத்தலைத் தெரிந்து, கரந்து உறையும் - மறைந்து வசிக்கும், நீர்ப்பாம்பு - நஞ்சற்ற தண்ணீர்ப் பாம்பானது, அஞ்சாப் புறம் கிடக்கும்-அஞ்சாமல் வெளியே கிடககும், அவவாறு, நெஞ்சில் கரவு உடையார் - உள்ளத்தில் வஞ்சனையை உடையவர்கள்; தம்மைக்கரப்பர் - தம்மைத்தாமே மறைத்துக்கொள்வர்; கரவு இலா நெஞ்சத்தவர் - வஞ்சனை இலலாத உள்ளத்தை உடையவர்கள், கரவார் - தம்மை மறைத்துக் கொள்ளமாட்டார்கள்.*

(கு - து.) *வஞ்சகம் உடையோர் மறைந்தொழுகுவர்; வஞ்சகமில்லாதோர் மறைந்தொழுகமாட்டார்கள்.*

---

## ௩௦. கம்பரும் சோழனும்

கம்பர் சோழ மன்னனால் ஒரு சமயம் வெறுத்து விரட்டப்பட்டபோது சென்ற விடங்களிலெல்லாம் சீருஞ் சிறப்பும்பெற்று நல்ல புகழுடன் மீண்டுஞ் சோழன் இடத்திற்கு வந்தார். மற்றொரு சமயம் சோழ மன்னன் சோமசுந்தரக் கடவுளை வணங்குவதற்காகத் தன் அரசச் சிறப்புடன் மதுரைக்குச் சென்றான். மதுரையின் தெருக்களையெல்லாஞ் சுற்றிப் பார்த்துக்கொண்டு சென்றான்.

சோழ மன்னனைக்கண்ட எவரும் வணங்கவோ போற்றவோ இல்லை. "இவன் யார்? சோழநாட்டு மன்னனா? சுற்றிப் பார்த்துக்கொண்டு போகட்டும். இவனால் நமக்கு ஆகவேண்டிய காரியம் என்ன இருக்கிறது. நம் அரசனாகிய பாண்டியனைவிடச் செல்வத்தில் குறைந்தவனாகக் காணப்படுகிறான்," என்று சோழமன்னனுடைய காதுகளில் விழும்படி பேசிக்கொண்டு சென்றார்கள்.

அதனைச் சோழமன்னன் அறிந்தான். ஆயினும் அவர்களை என்ன செய்யமுடியும்? "மன்னற்குத் தன் தேசம் அல்லாற் சிறப்பில்லை," என்று எண்ணிக்கொண்டே பேசாமல் போய்விட்டான்.

"மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனில் கற்றோன் சிறப்புடையோன்—மன்னற்குத்
தன்தேசம் அல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்
சென்ற இடம் எல்லாம் சிறப்பு."

(உரை) மன்னனும் - அரசனையும், மாசு அறக்கற்றோனும் - குற்றமறக் கல்விகற்ற புலவனையும், சீர்தூக்கின் - ஆராய்ந்து பார்க்குமிடத்தில், மன்னனில் கற்றோன் சிறப்பு உடையன் - அரசனைப் பார்க்கிலும் புலவனே சிறப்பு உடையவனாவான் ; மன்னற்கு - அரசனுக்கு, தன் தேசம் அல்லால் - தன் நாட்டிலே அல்லாமல், பிறநாடுகளில், சிறப்பு இல்லை - பெருமை ஏற்படாது, கற்றோற்கு - புலவனுக்கோ எனின், சென்ற இடம் எல்லாம் சிறப்பு - அவன் சென்ற எல்லா நாடுகளினுஞ் சிறப்பு உண்டாகும்.

(க - து) அரசனினும் அறிஞனே சிறப்புடையவன்.

---

## ௩௧. கவியரசரும் காவலாளனும்

துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள் என்னும் பெரியார் கல்வி கேள்விகளிற் பெரியவர். கடவுளுடைய அருளையும் பெற்றவர். அவர் ஒருமுறை விருத்தாசலம் எனப்பெறும் பழமலைக்குச் சென்றிருந்தார். அங்குள்ள மணிமுத்தா நதி என்னும் ஆற்றில் நீராடிவிட்டு ஒரு மாஞ்சோலை வழியே தாம் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றார்.

ஒரு மாமரத்தின் அடியில் நல்ல மாங்கனி ஒன்று விழுந்துகிடந்தது. அது சிவபூசைக்குப் பயன்படும் என்று எண்ணிக் கீழே குனிந்து அதனை எடுத்தார். அந்த மாஞ்சோலையைக் காவல் காத்திருந்த காவலாளன் விரைந்தோடிவந்து அடிகளின் மடியைப் பிடித்துக் கொண்டு, "நீ ஏன் மாம்பழத்தைக் களவு செய்தாய்," என்று சொல்லி வம்பு செய்தான்.

அடிகள் மனம் வருந்தி,

"அடுத்துவருந் தொண்டனுக்கா அந்தகனைத் தாளால்
அடர்த்ததுவுஞ் சத்தியமே ஆனால்—எடுத்தஒரு
மாங்கனிக்கா என்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான்"

என்று ஒரு செய்யுளைப் பாடிச் சென்றார்.

அடிகளின் வாக்குப்படி அந்தக் காவல்காரன் கன்னி ராசியில் கதிரவன் வந்தபோது இறந்து போனான். "கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொல் கூற்றம்" என்பது அந்த அறிவில்லாத் தோட்டக்காரனிடத்தில் நன்கு பலித்துவிட்டது.

" கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொல்கூற்றம்
அல்லாத மாந்தர்க்(கு) அறங்கூற்றம்—மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம் கூற்றமே
இல்லிற்(கு) இசைந்தொழுகாப் பெண்."

(உரை.) *கல்லாத மாந்தர்க்கு-கல்வியறிவில்லாத மக்களுக்கு, கற்று உணர்ந்தார் சொல் கூற்றம் - கற்றறிந்த புலவர்களுடைய உறுதிமொழி இயமனாகும், அல்லாத மாந்தர்க்கு - அறநெறியின ரல்லாத மக்களுக்கு, அறம் கூற்றம் - தருமதேவதையே நமனாகும், மெல்லிய வாழைககு - மென்மையை உடைய வாழைமரத்திற்கு, தான் ஈன்ற காய் கூற்றம் அது வெளிப்படுத்திய காயே நமனாகும், இல்லிற்கு இசைந்து ஒழுகாப் பெண் - இல்லற வாழ்க்கைக்குத் தககவாறு நடவாத பெண, கூற்றம் - தன்னைக கொண்டவனுககு இயமனவள்*

(க - து.) *கற்றறிந்த புலவர்களின் மொழியால் மூடருக்கும், தருமதேவதையால் தீவினையாளர்களுககும், பொருத்தம் இல்லாத மனையாளால் கணவனுக்கும் துன்பம் அல்லது அழிவு உண்டாகும்.*

## ௩௨. அரிச்சந்திரன்

அரிச்சந்திரன் உண்மை பேசுவதில் பேர் பெற்றவன். அவனைப் பொய்யனாக்க வேண்டுமென்று விசுவாமித்திர முனிவர் மிகவும் முயன்றார். அரிச்சந்திரனுடைய நாடு நகரம் எல்லாவற்றையுஞ் சூழ்ச்சியாகக் கவர்ந்து கொண்டதுடன், அவனுடைய மனைவியையும் விற்கச்செய்தார். இதனால் அரிச்சந்திரன் பறையனுக்கு அடிமையாகவும் நேரிட்டது. ஆயினும் அரிச்சந்திரன் தனது உறுதியான மெய்ந்நிலையில் இருந்து அணுவும் தவறவில்லை.

அரிச்சந்திரனைப் பொய்யனாக்க முயன்ற முனிவர் தாமே இறுதியில் பொய்யராக ஆயினர். இதனால் அரிச்சந்திரனுடைய புகழ் எல்லா உலகங்களிலும் பரவியதுடன் அவனுடைய புகழ் இன்றும் நிலை பெற்று விளங்குகிறது. அரசர்கள் வறுமை நிலையை அடைந்தாலும் அவர்களுடைய மனநிலை சிறிதும் மாறுபடாது என்பதற்கு இந்த அரிச்சந்திரன் தகுதியான எடுத்துக்காட்டாக அமைந்தான்.

"சந்தன மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தங் குறைபடா தாதலால்—தந்தம்
தனஞ்சிறியர் ஆயினும் தார்வேந்தர் கேட்டால்
மனஞ்சிறியர் ஆவரோ மற்று."

(உரை.) மெல் சந்தனக் குறடு - மெல்லிய சந்தனக் கட்டையானது, தான் தேய்ந்த காலத்தும் - தான் தேய்ந்துபோன பொழுதும், கந்தம் குறைபடாது - மணம் குறையாது, ஆதலால் - ஆகையால், தார்வேந்தர் - மாலையை அணிந்த அரசர்கள், தம்தம் தனம் சிறியர் ஆயினும் - தங்கள் தங்கள் செல்வத்தில் குறைவுபட்டாலும், கேட்டால்-அவ்வறுமையினால், மனம் சிறியர் ஆவரோ - மனஞ் சுருங்கினவர்களாக மாட்டார்கள்.

(க - து.) அரசர்கள் வறுமையடைந்தாலும் அவர்களுடைய உள்ளம் பெருமை உடையதாகவே விளங்கும்.

## ௯௯. நளன்

செல்வம் போவதும் வருவதுமாக இருக்கும். அஃது ஒருவரிடத்திலும் நிலைபெறமாட்டாது. பொருளின் இத்தன்மையைப் பார்த்தே பெரியோர்கள் அதற்குச் செல்வம் என்று பெயரிட்டிருக்கிறார்கள். செல்வம் என்னுஞ் சொல்லுக்குப் போவோம் என்பது பொருள்.

நளனுக்கு நல்வினை மிகுந்திருந்தபோது எல்லாச் செல்வங்களும் நன்கு அமைந்திருந்ததுடன் அழகிய தமயந்தியும் மனைவியாக வாய்த்தாள். நல்வினை தீர்ந்து சனி பிடித்தபோதோ நாடு நகரங்களையெல்லாம் இழந்து காடுதேடி ஓடும்படியாக நேர்ந்ததுடன் மனைவியையும் காட்டில் விட்டுவிட்டுப் போய்விட்டான். தீவினை தீர்ந்து நல்வினை மீண்டும் வந்தபோதுதான் இழந்த பொருள்களும் திரும்பின.

செல்வம் ஒருவரிடத்தில் நிலைத்திருப்பதன்று என்பதை இந்த நளன் இடத்தில் மட்டும் அல்லாமல் தருமர் முதலிய பிற அரசர்களின் வாழ்க்கை நிலையிலும் காணலாம்.

"மருவினிய சுற்றமும் வான்பொருளும் நல்ல
உருவும் உயர்குலமும் எல்லாம்—திருமடந்தை
ஆம்போ தவளோடும் ஆகும் அவள்பிரிந்து
போம்போ தவளோடும் போம்."

(உரை.) மருவு இனிய சுற்றமும் - பொருந்திய நல்ல உறவும், வான்பொருளும் - சிறந்த பொருளும், நல்ல உருவும் - நல்ல அழகும், உயர் குலமும் எல்லாம் - மேலாகிய நல்ல குலமும் என்னும் இவைகளெல்லாம், திருமடந்தை ஆம்போது - திருமகளானவள் வந்து கூடும்பொழுது, அவளோடும் ஆகும் - அவளுடனே வந்து சேரும், அவள் பிரிந்து போம்போது - அவள் நீங்கிப் போகும் பொழுது, அவளோடும் போம் - அவளுடனே நீங்கிப் போகும்.

(க - து.) உறவு பொருள் அழகு நற்குலம் ஆகியவைகள் நிலையுடையன அல்ல.

## ௯௪. துரியோதனனும் தருமரும்

துரியோதனன் தீக்குணங்களுக்கெல்லாம் இருப்பிட மானவன். அறிவும் அவனுக்குக் குறைவு. வீட்டை நிரப்புமாறு பெரியோர்கள் கூறியதற்கு வரகு வைக் கோல் விலை மலிவு என்று வாங்கி வீட்டில் திணித் தவன்.

தருமர் நற்குணங்களுக்கெல்லாம் பிறப்பிடமான வர்; அவருக்கு அறிவும் மிகுதி. வீட்டை நிரப்புவதற்கு விளக்கேற்றி வைத்தவர். பொறாமைத்தீயால் எரிக் கப்பட்ட துரியோதனன் தான் இறந்தொழியும் வரை யிலும் பாண்டவர்களுக்குத் தீமையையே செய்து கொண்டிருந்தான். தருமரோ அவன் தீமைசெய்யும் பொழுதெல்லாம் அவனுக்கு நன்மையையே செய்து கொண்டிருந்தார். ஆனால், குற்றத்தையே குறிவைத் துப் பார்த்துக்கொண்டிருந்த துரியோதனனுக்குத் தருமர் செய்த நன்மைகள் ஒன்றுவது ஏற்கவில்லை.

" சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாம் அவரை, ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்," என் னும் பெரியார் திருவாக்கிற்குத் துரியோதனனும் தருமரும் தகுதிவாய்ந்த எடுத்துக்காட்டாவார்கள்.

" சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாமவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந் தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம்."

(உரை.) மரம்-மரங்களானவை, மாந்தர் குறைக்குந்தனையும்-மனிதர்கள் தம்மை வெட்டும் அளவும், குளிர் நிழலைத்தந்து மறைக்கும் - வெட்டுபவர்களுக்கும் குளிர்ந்த நிழலைக்கொடுத்து வெயிலை மறைக்கும்; அதுபோல், அறிவு உடையோர் - நல்லறிவுடையவர்கள், சாந்தனையும் - தாம் இறந்துபோம் அளவும், தீயனவே செய்திடினும் - மற்றவர்கள் தங்களுக்குத் தீங்குகளையே செய்தார்களாயினும், தாம் அவரை ஆந்தனையும் காப்பர் - தாம் அவரையும் தம்மாலே ஆகுமளவும் காப்பாற்றுவார்கள்.

(க - து.) அறிவுடையோர் தமக்குத் தீங்கு செய்பவர்களுக்கும் நன்மை செய்வார்கள்.



கழக வெளியீடு: ௮௯௩

# நல்வழி விளக்கக் கதைகள்



ஆசிரியர் :

திரு. க. இனியன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. சென்னை-1.

# பதிப்புரை

செந்தமிழ் மொழிக்கண் திருக்குறள் பொதுநூல். இது நம் நாட்டகத்தும், வீட்டகத்தும் களிநடம் புரிதல் வேண்டும். அன்றே நம் தமிழகம் நன்றே மிளிரும் நாளாகும்.

இதன் சாயல்களே பிற்காலத்துத் தோன்றிய அறநூல்கள். அவற்றுள் ஒன்றே நல்வழி என்னும் அறநூல். இது எளிய இனிய நன்னடையில் இயன்றது. ஔவைப் பிராட்டியாரால் இயற்றியருளிச் செய்யப்பெற்றது.

'இளமையிற் கல்வி சிலையி லெழுத்து' என்ப ஆகலான், நம் இளஞ்சிறார்க்கு, விளையாடும் பருவ முளைப்பருவத்தினர்க்கு, இவைகளைக் கதைகள் வாயிலாக விளக்குதல் சிறந்தது, நலந்தருவது எனக்கருதி ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, வெற்றிவேற்கை, நல்வழி, நன்னெறி போன்ற ஏனைய அறநூல்களுக்கும் திரு. க. இனியன் அவர்களைக்கொண்டு எழுதுவித்து நூலுருவாக்கி வெளியிட்டுள்ளோம்.

இது அவற்றுள் நல்வழி விளக்கக் கதைகளாகும். இதனையும் ஏனைய விளக்கக் கதைநூல்களையும் பங்கெதறிந்தாடுஞ் சிறார் கைகளில் முந்திருப்பச் செய்து கற்கச் செய்வது, நம் தமிழகப் பெருமக்கள் கடன். இதனை வாங்கிக் கற்குமாறு செய்து எம்மையும் ஊக்குவிப்பார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

## நல்வழி விளக்கக் கதைகள்

# நல்வழி விளக்கக் கதைகள்



## க. ஔவையார்

ஔவைப் பிராட்டியார் என்பவர் ஆத்திசூடி கொன்றைவேந்தன், நல்வழி, மூதுரை முதலிய அற நூல்களை இயற்றியருளிய தவமூதாட்டியாவர். இவை களைத் தவிர வேறு பல பாக்களும் இவர் இயற்றி யுள்ளார். இவர் ஆனைமுகக் கடவுளிடத்திலே மிகுந்த அன்புடையவர்.

இளமைதொட்டே விநாயகக் கடவுளைப் பூசனை புரிந்து வழிபட்டுக்கொண்டிருந்தார். பூசையின்போது பால் தேன் பாகு பருப்பு இவைகளை ஒன்றுபடுத்திச் செய்த ஒருவகைச் சிற்றுண்டியைத்தான் பெரும் பாலும் நைவேத்தியமாக வைப்பார். இதனையே இவர் பாடலிலும் அமைத்துப்பாடினர். ஔவையாரின் வேண்டுகோள் வீண்போகவில்லை. நாளடைவில் ஔவையாருக்குச் செந்தமிழறிவு மிகுதியாகப் பெருகி வந்தது. ஔவையாருடைய தமிழறிவு மற்றைப் புலவர்களின் அறிவுக்கும் மேலோங்கி நின்றது. ஆகவே கடவுளை வழிபடுதல் எத்தகையோருக்கும் மிகுந்த நன்மையை உண்டாக்கும்.

" பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான்தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ்மூன்றுந் தா."

(உரை.) *கோலம் செய் - அழகினைச் செய்கின்ற, துங்கக் கரிமுகத்து தூமணியே - உயர்வாகிய யானை முகத்தையுடைய தூய்மை மிக்க மணியைப் போன்ற விநாயகக் கடவுளே! பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் - பசும்பாலும் தெளிவுடைய தேனும் வெல்லப் பாகும் பருப்பும், இவை - ஆகிய இவை, நாலுங் கலந்து - நான்கையும் ஒன்றுபடுத்தி, நான் உனக்குத் தருவேன் - அடியேன் நினக்குக் கொடுப்பேன், நீ எனக்குச் சஙகத தமிழ் மூன்றும் தா - தேவரீர் அடியேனுக்குத் தமிழ்ச சங்கத்தில் வளர்க்கப்பட்ட முத் தமிழ் அறிவையும் நன்கு கொடுத்தருள்வீராக.*

(கருத்து.) *விநாயகக் கடவுளே! நான் உனக்குப் பால் முதலியவைகளைத் தருவேன்; தேவரீர் எனக்கு முத்தமிழ் அறிவையுந் தந்தருள்வீராக.*

---

## உ. வாணிகஞ் செய்த வல்லாளன்

பூண்டி என்னும் ஓர் ஊரிலே வல்லாளன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் பொருளை மிகுதியாகத் தேடவேண்டும், அதற்கு வழி யாது என்று எண்ணமிட்டான். வாணிகஞ் செய்வது தான் பொருள் தேடுவதற்கு வழி என்று முடிவு செய்தான். தன்னுடைய நிலங்கள் சிலவற்றை விற்று ஆயிரம்ரூபா பணத்தைத் தேடினன். அப் பணத்தை முதற்பொருளாக வைத்துக்கொண்டு வாணிகஞ் செய்யத் தொடங்கினன். அவன் கடைக்குப் பக்கத்துக் கடைககாரர்களுக்கெல்லாம் நல்ல ஊதியங் கிடைத்துப் பெரும் பணககாரர்களாகிக்கொண்டிருந் தார்கள். ஆனல் வல்லாளனுக்கு ஊதியஞ் சிறிதுங் கிடைககவில்லை. அடிக்கடி மிகுந்த பொருளிழப்பு ஏற்பட்டது. நாளடைவில் முதற்பொருளே தேருமல் ஆயிர ரூபாயும் அழிந்துபோய்விட்டது.

வல்லாளனுக்கு மிகுந்த மன வருத்தம் உண்டாயிற்று. அந்தோ நாம் நமக்கு இருந்த நிலத்தைக் கூட விற்றுவிட்டோமே. நாம் மற்றவர்களைவிட அறிவிலோ ஆற்றலிலோ குறைந்திருக்கவில்லையே. அவ்வாருகப் பொருள் தேடி ஏன் முன்னுக்கு வர முடியவில்லை. இதற்குக் காரணம் யாது என்று எண்ணமிட்டான். அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஊரில் இருந்த ஒரு பெரியவரிடம் தனது கருத்தைக கூறினன். அவர் நல்ல அறிவாளி. அவர் வல்லாளனைப் பார்த்து, “அன்பனே! அறிவும் ஆற்ற

னும் இருந்தால் போதாது. முன் பிறப்பில் நல்வினை செய்திருக்கவேண்டும். அவ்வாறு நல்வினை செய்யாமல் தீவினை செய்திருந்தால் இப் பிறப்பில் முன்னுக்கு வரமுடியாது. அழிவுதான் நேரிடும். இதற்குச் சிறிதும் ஐயமே இல்லை. நீ முன் பிறப்பில் நல்வினை செய்யாமல் தீவினை செய்திருக்கிறாய் போலும்," என்று கூறி மேலுஞ் சில அறிவுரைகளைக் கூறியனுப்பினார்.

"புண்ணியம்ஆம் பாவம்போம் போனநாள் செய்தஅவை
மண்ணில் பிறந்தார்க்கு வைத்தபொருள்—எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத் தோர்சொல்லும்
தீதொழிய நன்மை செயல்."

(உரை.) புண்ணியம்ஆம் - நல்வினையானது வளர்ச்சியைச் செய்யும், பாவம்போம் - தீவினையானது அழிவினைச் செய்யும், போனநாள் செய்த அவை - முற்பிறப்பில் செய்த அந்த நல்வினை தீவினைகளே, மண்ணில் பிறந்தார்க்கு - உலகத்தில் பிறந்தவர்கட்கு, வைத்த பொருள் - தேடிவைத்த பொருளாகும், எண்ணுங்கால் - எண்ணிப் பார்க்கும்போது, எச்சமயத்தோர் சொல்லும் - எந்த மதத்தினர் கூறுவதும், ஈது ஒழிய வேறு இல்லை - இதைத் தவிர வேறொன்றும் இல்லை. (ஆகையால்) தீது ஒழிய நன்மை செயல் - தீமைகளைச் செய்யாமல் நன்மைகளைச் செய்தல் வேண்டும். (க)

(கருத்து.) தீமைகளை அகற்றி நன்மைகளையே நாம் செய்தல் வேண்டும்.

## ௩. ஔவையாரும் ஆராய்ச்சியாளர்களும்

ஒருநாள் ஔவையார் ஓர் ஊர் வழியே சென்று கொண்டிருந்தார். ஓரிடத்தில் பல பேர் உரையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பேசிகொள்வது எதைக் குறித்து என்று ஔவையார் சற்று நின்று உற்றுகேட்டார். அவர்கள் பேசிக்கொண்ட செய்தி சாதியைப்பற்றியது என்று தெரிந்தது. ஒருவர், "இவ்வுலகத்தில் நூற்றுக் கணக்கான சாதிகள் இருக்கின்றன," என்றார். வேறொருவர். "ஆயிரக் கணக்கில் இருக்கின்றன," என்றார். வேறொருவர், "தாழ்ந்த சாதியில் நூற்றைம்பதும் உயர்ந்த சாதியில் நூற்றைம்பதுமாக எல்லா சாதிகளையும் முந்நூறில் அடக்கி விடலாம்," என்றார்.

ஔவையாருக்கு இதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. அவர் அவர்களை நெருங்கி, "ஓ அன்பர்களே! நீங்கள் பேசிக்கொள்வது முழுத் தவறு. இவ்வுலகத்தில் இரண்டே இரண்டு சாதிகள்தாம் இருக்கின்றன. ஏற்போர்க்கு அறஞ் செய்பவர்கள் உயர்ந்த சாதி. செய்யாதவர்கள் தாழ்ந்த சாதி. இந்த இரண்டு சாதிகளைத் தவிர மற்றைச் சாதிகளெல்லாம் பொய்யானவை. அற நூல்களும் இவ்வாறுதான் உரைக்கின்றன. இதனை நீங்கள் இனிமேலாயினும் உணர்ந்து கொள்ளுங்கள்," என்று கூறிச் சாதியிரண்டொழிய என்னும் இப் பாட்டையும் பாடிவிட்டுச் சென்றார்.

இதனைக் கேட்டவர்கள் யாதும் மறுமொழி கூற முடியாமல் பேசாதிருந்தனர். அவர்கட்கு அவர்க

ளுடைய சொற்போர் மிகுந்த நாணத்தைக் கொடுத்தது. அது முதல் அவர்கள் தங்களுடைய மனப்போக்கை மாற்றிக் கொண்டனர்.

"சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ள படி."

(உரை.) *சாற்றுங்கால் - சொல்லுமிடத்தில், மேதினியில் - இந்த உலகத்தில், சாதி இரண்டு ஒழிய வேறு இல்லை - இரண்டு சாதிகளைத் தவிர வேறு சாதிகள் இல்லை. (அந்த இரண்டு சாதிகள் எவை யென்றால்) நீதி வழுவா நெறி முறையில் - நீதி தவறாத நல்ல வழியிலே முறைமையோடு, இட்டார் பெரியோர - இரந்தவர்களுக்குப் பொருள் முதலியவைகளைக் கொடுப்பவர்கள் உயர்ந்தவர்கள், இடாதார் இழிகுலத்தோர் - இரந்தவர்கட்கு யாதுங் கொடாதவர்கள் தாழ்ந்த குலத்தினர், பட்டாங்கில் உள்ளபடி - அறநூலின் முடிபு இதுவேயாம்.*

(கருத்து.) *இரந்தவர்களுக்குப் பொருள் முதலியன கொடுப்பவர் உயர்ந்தவர்கள்; கொடாதவர்கள் தாழ்ந்தவர்கள். ஆக உலகில் இவ இரு சாதிகளைத் தவிர வேறு இல்லை.*

## ௬. துரையப்பனும் துறவியும்

ஓர் ஊரிலே துரையப்பன் என்னும் பெயருடைய செல்வன் ஒருவன் இருந்தான். அவனுக்குப் பொருள் மிகுதியாக இருந்தது. அவன் தன்னைப் பொறுத்தவரையில் நன்றாக உண்டு உடுத்துக் களித்துச் செருக்கித் திரிந்தானேயன்றித் தருமஞ் செய்வதில் சிறிதுங் கருத்துச் செலுத்தவே இல்லை. இந்தச் செல்வன் மேலும்மேலும் பொருளைப் பல வழிகளிலும் தேடிக்கொண்டே யிருந்தான். ஒருநாள் துறவியொருவர் துரையப்பனுடைய ஊருக்கு வந்தார். துரையப்பனுடைய செல்வப் பெருக்கையும் அவன் பிறருக்குச் சிறிதும் பயன்படாமல் வாழ்தலையும் உணர்ந்தார். அவனுக்கு அறிவுரை கூறி நல்வழிப் படுத்த வேண்டும் என்று எண்ணினார். உடனே துரையப்பன் வீட்டிற்குச் சென்றார்.

துரையப்பன் துறவியை வரவேற்றுப் போற்றினான். துறவியார் துரையப்பனைப் பார்த்து, "அப்பனே! நம்முடைய இந்த உடம்பு ஒரு துன்பப் பையாகும். எல்லாவகையான துன்பங்களும் இந்த உடலுக்குள் அடைத்துவைக்கப் பட்டுள்ளன. நீ பெரும் பொருள் படைத்தவனாக இருந்திருக்கிறாயே; என்றைக்காவது மகிழ்ச்சியுடன் இருக்கிறாயா? உண்பதையும் உடுப்பதையும் உண்மையாக நினையாதே. நல்ல அறங்களை மிகுதியாகச் செய். அதுதான் உனக்கு நற்பயனை அளிக்கும். அறப்பயனைத் தேடாமற் காலங் கழிப்பாயானால் உன்னை எமதூதர்கள் பிடித்

துக் கொண்டுபோய்க் கொடுமையாகத் துன்புறுத்து வர்,” என்று அறிவுரை கூறி அச்சுறுத்தினர். துறவி யாரிடம் வியக்கத்தக்க ஆற்றல் அமைந்திருந்த படி யால் துரையப்பன் அன்றுமுதல் திருந்தி அறஞ் செய்யத் தொடங்கினன்.

“இடும்பைக்கு இடும்பை இயலுடம்பி தன்றே
இடும்பொய்யை மெய்யென் றிராதே—இடுங்கடுக
உண்டாயி னுண்டாகும் ஊழிற் பெருவலிநோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு.”

(உரை.) இயல் உடம்பு இது - பொருந்திய இவ் வுடம் பானது, இடும்பைக்கு - துன்பமாகிய சரக்குகட்கு, இடும்பை அன்றே - இட்டுவைக்கும் பையல்லவா?, இடும் பொய்யை - உண வினையிடுகின்ற நிலையில்லாத இவ் வுடம்பை, மெய் என்று இராது - நிலையுடையது என்று எண்ணியிராமல், கடுக - விரைவாக, இடும் - வறியார்ககு அறஞ் செய்யுங்கள், உண்டாயின் - அறம் உங்களிடத் தில் உண்டாகுமானால், பெரு வலிநோய் - மிக்க வலிமையுடைய பாசமாகிய பிணியினின்றும், விண்டாரை - நீங்கியவரை, கொண் டாடும் வீடு - அறிஞர்களால் போற்றப்படுகிற வீடுபேறானது, ஊழின் உண்டாகும் - முறைமையாக உங்கட்குக் கிடைக்கும். (௩)

(கருத்து.) நீங்கள் அறஞ் செய்வீர்களானால் உங்கட்கு வீடு பேறு எளிதில் உண்டாகும்.

## ரு. கேணிவெட்டிய தோணியப்பன்

சங்கபுரம் என்னும் ஊரிலே தோணியப்பன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுடைய வீட்டிற்குப் பின்புறமாகத் தோட்டம் ஒன்று இருந்தது. தோணியப்பன் தன்னுடைய தோட்டத்திலே கேணி ஒன்று வெட்ட விரும்பினன். கல் முதலானவற்றைக் கொண்டுவந்து வைத்துக் கொண்டு நிலத்தில் இருபதடி ஆழம் வரையில் வெட்டி மண்ணை வெளிப்படுத்திவிட்டுக் கிணற்று வேலையைச் செய்யத் தொடங்கினன். ஒருநாள் இரவில் அந்தப் பள்ளம் இடிந்து விழுந்து மூடிப் போய் விட்டது. தோணியப்பன் மீண்டும் மண்ணை வெட்டி அப்புறப்படுத்த மறுமுறையும் இடிந்து விட்டது. இவ்வாறு பலதடவை வெட்டியும் இடிந்து கொண்டே வந்தது.

தோணியப்பன் அவ்வாறு கிணறு இடிவதற்குக் காரணம் என்ன என்று நண்பர்களைக் கலந்து ஆராய்ந்தான். சிலர், "காலம் வந்தால் எல்லாம் தானகவே நடக்கும்," என்றனர்கள். சிலர், "கிணறு வெட்டுமிடத்தில் பூதம் ஒன்று இருக்கிறது. அதற்குப் பலி கொடுத்தால் கேணிப்பள்ளம் இடிந்து விழாமல் இருக்கும்," என்றனர்கள். தோணியப்பன் பூசை முதலியவைகள் நடத்திப் பலி கொடுத்து மேலும் கேணி வேலையைத் தொடங்கினன். அப்பொழுதும் இடிந்து விழுந்தது. சிலர், "எல்லாவற்றிற்கும் காலம் வரவேண்டும்; சிறிது நாளைக்குப் பொறுத்திரு,"

என்றார்கள். தோணியப்பன் அவ்வாறே சிலகாலம் பொறுத்திருந்தான். பிறகு சில நல்ல குறிகளைப் பார்த்து மீண்டும் வேலையைத் தொடங்கினான். இப்பொழுது தோணியப்பனுக்கு நல்லகாலம் வந்து விட்டபடியால், கேணி இடிந்து விழவில்லை. மிகு விரைவாகக் கேணியைக் கட்டி முடித்தான்.

"எண்ணி ஒருகருமம் யார்க்குஞ்செய் யொண்ணாது
புண்ணியம் வந்தெய்து போதல்லால்—கண்ணில்லான்
மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோல் ஒக்குமே
ஆங்காலம் ஆகும் அவர்க்கு"

(உரை.) யார்க்கும் - எத்தன்மையோர்க்கும், புண்ணியம் வந்து எய்து போது அல்லால் - முன்செய்த நல்வினை வந்து கூடும் பொழுதல்லாமல், ஒரு கருமம் - ஒரு காரியத்தை, எண்ணி - ஆராய்ந்து, செய்யொண்ணாது - செய்துமுடிக்க முடியாது, (செய்து முடிக்கத் தொடங்கினால்) கண் இல்லான் - குருடன், மாங்காய் விழ - மாங்காயை அடித்து வீழ்த்துதற்கு, எறிந்த மாத்திரைக் கோல் ஒக்கும் - எறிந்த மாத்திரைக் கோலைப்போலும், ஆம் காலம் - நல்வினை வந்து சேரும்பொழுது, அவர்க்கு ஆகும் - அவர்க்கு அக் காரியம் எளிதாக முடிவுபெறும். (௬)

(கருத்து.) எடுத்துக்கொண்ட காரியங்கள் இனிது முடிவதற்கு நல்லகாலம் வருதல் வேண்டும்; இன்றேல் கைப்பொருளையும் இழந்து துன்புற நேரிடும்.

## சா. கலையால்மாண்ட காராளன்

பூதூர் என்னும் மூதூர் ஒன்றிலே ஏறக்குறைய நாற்பத்தெட்டு யாண்டுகளுக்கு முன் காராளன் என்னும் பேராளன் ஒருவன் இருந்தான். இவன் முன் பிறப்பில் செய்த வினைப்பயனால் வறிய குடும்பத்தில் தோன்றினான். அன்றாடம் உழைத்துத்தான் அவன் வாழ்க்கையை நடத்தவேண்டும். செல்வத்தைக் காராளனுக்கு மிகுதியாகக் கொடுக்காத கடவுள், மக்கட்பேற்றை விரிந்த மனப்பான்மையோடு நன்றாக வழங்கினார். ஆணும் பெண்ணுமாகப் பன்னிரண்டு பிள்ளைகள் தோன்றினர்.

பெருங் குடும்பியாகப்போன காராளன் பெருஞ் செல்வனாக வேண்டும் என்று பெரிதும் முயன்றான். பொருள் தேடுவதற்காகப் பலவகைத் தொழில்களில் ஈடுபட்டான். பொருள் இவனிடம் குவியவில்லை. செல்வஞ் செல்வத்தோடு சேரும் என்பதற்கேற்ப அது செல்வர்களிடமே பெருகிக் கொண்டிருந்தது. காராளன் குடும்பத்தைப் பாதுகாக்க மிகுந்த தொல்லைப்பட்டான்.

குடும்பச் சுமையைக் குறைத்துக்கொண்டால் பாதுகாப்பது எளிதாக இருக்கும் என்று எண்ணினான். மக்களிற் சிலரை உறவினர்கட்கு வளர்ப்பாகக் கொடுத்தான். ஆனால், வளர்ப்பாகச் சென்ற மக்கள் வளர்ப்புத் தாய் தந்தையர்களைத் தங்களுக்குப் பிடிக்கவில்லையென்று கூறி ஈன்ற தாய் தந்தையர்களிடமே வந்துவிட்டனர். இதனால் காராளனுக்கு

*நாளுங் கவலை மிகுதிப்பட்டுக் கொண்டே யிருந்தது. காராளன் கவலையால் நாள்தோறும் இளைத்துக் கொண்டே இருந்தான். எல்லாம் வினைப்பயன் என்று அவன் சிறிதும் உணர்ந்து கொள்ளவில்லை. இறுதியில் மாண்டுபோனான். காராளனுடைய இரங் கத்தக்க நிலையைக்கண்ட பலரும் வருந்தினர்.*

"வருந்தி அழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றால் போகா—இருந்தேங்கி
நெஞ்சம்புண் ணாக நெடுந்தூரம் தாம்நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்."

(**உரை.**) *வாராத - வரக்கூடாதவைகள், வருந்தி அழைத் தாலும் - பரிந்து அழைப்பினும், வாரா - வாராவாம், பொருந்து வன - வருபவைகளை, போமின் என்றால் - என்னை விட்டுப் போங் கள் என்று கூறினால், போகா - போகமாட்டாவாம், இருந்து ஏங்கி - இருந்து ஏக்கமுற்று, நெஞ்சம் புண் ஆக - மனம் புண்ணாகு மாறு, நெடுந்தூரம் தாம் நினைந்து - அவைகளைக் குறித்துத் தாம் மிகுதியாக எண்ணி, துஞ்சுவதே - இறந்து போவதே, மாந்தர் தொழில் - மனிதர்களுடைய வேலையாக இருக்கிறது.*

(**கருத்து.**) *எல்லாம் ஊழ்வினைப்படியே நடைபெறுமே யன்றி மனிதர்களுடைய முயற்சியினால் எச்செயலும் நிறைவேற மாட்டா.*

---

## எ. இன்பந்தேடிய இளங்கீரன்

அளகை என்னும் பெயருடைய ஊரிலே இளங் கீரன் என்னும் பெயருடைய மனிதன் ஒருவன் இருந்தான். அந்த அளகையிலே இருந்தவர்கள் ஊர்ப் பெயருககு ஏற்ப நல்ல செல்வச் சிறப்புடன் வாழ்ந்திருந்தார்கள். அளகாபுரியிலும் பிச்சைக் காரர்கள் உண்டு என்பதற்கேற்ப இளங்கீரன் மட் டும் மிகுந்த வறுமையால் வருந்திக் கொண்டிருந் தான். பொருள் தேடி மற்றவர்களைப்போல் இன்ப நலங்களை இனிதடைந்து வாழவேண்டுமென்பது அவனுடைய பேரவா. ஆனல் அதற்கேற்ப நல்வினை இல்லையே! என்ன செய்வது? எல்லாவற்றிற்கும் நல்வினையன்றோ மூலகாரணம்? " ஆசை இருக்கிறது தாசில் பண்ண; அதிருட்டம் இருக்கிறது கழுதை மேய்க்க," என்பர் பெரியோர்.

இளங்கீரன் பொருள் தேடிக் குவிப்பதற்காக எத்தனையோ துறைகளில் முயற்சி செய்தான். வாணிகஞ் செய்தான். மரக்கலமேறி வெளிநாடு கட்குச் சென்று அவ்விடங்களினும் மிக முயன்று பொருள் தேடினன். பொருள் குவிந்தபின் ஊரை யடைந்தான். நல்ல பெரிய மாளிகை ஒன்று கட்டிக் கொண்டு இன்பநலங்களை யெல்லாம் இனிது துய்க்க வேண்டுமென்று எண்ணினன். நோய்கள் பல இளங்கீரனைப் பற்றிக்கொண்டன. கஞ்சியைத் தவிர வேறு எதனையுஞ் சாப்பிட முடியவில்லை. வெகு நாள் நோயால் வருந்தி இறுதியில் மாண்டுபோனன்.

இளங்கீரன் வருந்திப் பொருள் தேடியும் நுகர முடியாமல் மாண்டானே என்று பலரும் இரங்கினர். இளங்கீரனுக்குத் திருமணங்கூட நடவாமல் இருந்த படியால், அவன் தேடிய பெரும்பொருளை அவனுடைய உறவினர் பங்கிட்டுக் கொண்டு நுகரலாயினர்.

"உள்ள தொழிய ஒருவர்க் கொருவர்சுகம்
கொள்ளக் கிடையா குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறி னாலென்
உடலோடு வாழும் உயிர்க்கு."

(உரை.) ஒருவர்க்கு - ஒருவருக்கு, உள்ளது ஒழிய - ஊழ் வினையினால் உள்ள அளவேயல்லாமல், ஒருவர் சுகம் - மற்றொருவருடைய இன்பங்களை, கொள்ள - நுகர விரும்பினால், கிடையா - முடியாது. ஆகையால், குவலயத்தில் - பூமியில், உடலோடு வாழும் உயிர்க்கு - மக்களுடலோடு கூடிவாழும் உயிர்களுக்கு, வெள்ளக் கடல்ஓடி - மிகுந்த நீரையுடைய கடல் கடந்து சென்று (பொருள்தேடிக் கொண்டு), மீண்டு கரையேறினால் - திரும்பிவந்து கரையேறினாலும், என் - அதனால் பயன் என்ன ?

(கருத்து.) நல்வினைக்குத் தகுந்த அளவுதான் இன்பம் உண்டாகுமே தவிர அதற்குமேல் சிறிதும் உண்டாகமாட்டாது.

## அ. மெய்யறிவுபெற்ற சித்தர்

வெகுகாலத்திற்கு முன்னே மாயூரத்தில் சித்தர் ஒருவர் இருந்தார். அவருடைய பெயர் சிற்றம்பல நாடிகள். அவர் மெய்யறிவு கைவரப்பெற்றவர். நன்மை தீமை, இன்பதுன்பம், இகழ்ச்சி புகழ்ச்சி முதலிய எல்லாவற்றையும் ஒரே தன்மையாகப் பார்க்கக் கூடிய பண்பு அவரிடம் நன்றாக அமைந்திருந்தது. இவருக்கு மாணவர்கள் பலர் இருந்தனர். மாணவர்களிலும் மெய்யறிவு அமையப் பெற்றவர்கள் சிலர் இருந்தனர். இவ்வுடலின் நிலையாமையையும் பொய்த் தன்மையையும் நன்குணர்ந்த சித்தர் தமது உடலுக்கு ஏற்படும் எத்தகைய இன்பதுன்பங்களையும் ஒருபொருட் படுத்தவே மாட்டார்.

ஒருநாள் ஓர் அன்பர், சித்தரையும் அவருடைய மாணவர்களையும் தமது இல்லத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் உணவளித்தார். இலையில் உணவைப் படைத்த பிறகு நெய்வார்த்தற் பொருட்டு நெய் வைக்கப்பெற்றிருந்த கலயத்தை எடுக்கச் சென்றவர் நெய்க் கலயத்திற்குப் பதிலாக வேப்பெண்ணெய் இருந்த கலயத்தைத் தவறுதலாக எடுத்துக் கொண்டுவந்து எல்லோருடைய இலையிலும் வேப்பெண்ணெயை ஊற்றிவிட்டார். சித்தரும் அவருடைய மாணவர்களும் உண்ணத் தொடங்கினர்.

அனைவரும் யாதுஞ் சொல்லாமல், "உடல் அழியக் கூடியதுதானே! எதனையுண்டால் என்ன? எவ்வாறு போனால் என்ன?" என்று பேசாது உண்டனர். அக்

கூட்டத்தில் இருந்தவர் ஓக்காளமிட்டு வாந்திபண்ணத் தொடங்ினர். அவ்வளவில் சிற்றம்பல நாடிகள், "நாக்கு ருசிகொள்ள உண்ண விரும்புகிற அஞ்ஞானிகட்கும் நம் திருக்கூட்டத்திற்கும் ஒத்துக் கொள்ளாது," என்று உரைத்தனர். வாந்தியெடுக்கத் தொடங்கியவர் அவர்களை விட்டு நீங்கிப்போய் விட்டார். மெய்யறிவு கைவரப் பெற்றவர்கள் எதிலும் பற்றற்றிருப்பார்கள் என்பது இவரிடத்தில் நன்கு விளங்கியது.

"எல்லாப் படியாலும் எண்ணினல் இவ்வுடம்பு
போல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை—நல்லார்
அறிந்திருப்பார் ஆதலினல் ஆங்கமல நீர்போல்
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு."

(உரை.) எல்லாப் படியாலும் - எல்லாவகையாலும், எண்ணினல் - ஆராய்ந்தால், இவவுடம்பு - இந்த உடம்பானது, பொல்லாப்புழு - பொல்லாத புழுக்களுக்கும், மலிநோய் - நிறைந்த பிணிகட்கும், புல்குரம்பை - புல்லிய குடிசையாக இருக்கின்றது, நல்லார் - நல்லறிவுடையோர், அறிந்திருப்பார் - இவவுடம் பிணிழிவை அறிந்திருப்பார்கள்; ஆதலினல் - ஆகையால், அவர்கள், கமலநீர் போல் - தாமரையிலைத் தணணீரைப் போல, பிறிந்து இருப்பார் - (உடம்போடு கூடியிருந்தும்) கூடாதவர்களாகவே யிருப்பார்கள். பிறர்க்குப் பேசார் - அதைக் குறித்துப் பிறரிடத்தில் பேச மாட்டார்கள்.

(கருத்து.) மெய்யறிவாளர்கள் இவ்வுடலுக்கு ஏற்படும் இன்ப துன்பஙகளை ஒரு பொருட்படுத்தமாட்டார்கள்.

## ௯. சீத்தலைச சாத்தனா

முன்னாளில் மதுரைமா நகரில் சீத்தலைச் சாத்தனார் என்னும் பெயருடையவர் ஒருவர் இருந்தார். அவர், நெல், பயறு, உளுந்து, துவரை முதலிய கூலங்களை வாங்கி விற்று வாணிகஞ் செய்து கொண்டிருந்தார். அதனால் அவர் பெயர் "கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்" என்று நீண்டு வழங்கியது. கூலவாணிகத்தினாலே அவருக்குப் பெரும் பொருள் குவியவில்லை. வாழ்க்கைக்குப் போதிய அளவுக்கே வருவாய் வந்துகொண்டிருந்தது.

சாத்தனார் நாம் செல்வத்தால் பெருமபுகழ் பெற்று விளங்குவது அருமை. கல்வியையாயினும் நன்கு கற்றுச் சிறப்படைவோம் என்று எண்ணினார். நாளும் நூல்கள் பலவற்றைக கற்று ஆராய்ச்சி செய்தார். பிறகு மணிமேகலை என்னும் நூலைத் தாமே இயற்றினார். அந் நூல் மிக்ச் சிறந்ததாக விளங்குகிறது. அதனாலே அவருடைய சிறப்பு என்றும் நின்று விளங்குவதாயிற்று. ஒருவர் தேடத் தக்கது புகழே என்பதை உலகம் இவர்பால் அறிந்துணர்ந்தது.

"ஈட்டும் பொருள்முயற்சி எண்ணிறந்த ஆயினும்ஊழ்
கூட்டும் படியன்றிக் கூடாவாம்—தேட்டம்
மரியாதை காணும் மகிதலத்தீர் கேண்மின்
தரியாது காணுந் தனம்."

(உரை.) மகிதலத்தீர் - நிலஉலகில் உள்ள மனிதர்களே!, கேண்மின் - கேளுங்கள், ஈட்டும் - தேடுதற்குரிய, பொருள் -

பொருளைப்பற்றிய, முயற்சி - முயற்சிகளானவை, எண் இறந்த ஆயினும் - அளவில்லாதனவானாலும், ஊழ்கூட்டும்படி அன்றிக் கூடாவாம் - ஊழ்வினை கூட்டுமளவுக்கே யல்லாமல் அதற்குமேல் சேராவாம், தனம் தரியாது - ஊழால்வந்து சேருகின்ற பொருள் நிலைத்திருக்க மாட்டாது, தேட்டம் மரியாதை - ஆகவே நீங்கள் தேடத்தக்கது சிறப்புத் தங்கிய புகழேயாம்.

(கருத்து.) மிகுந்த முயற்சியினால் அடையக் கூடிய பொருள் ஊழ்வினை உள்ள அளவுக்குத்தான் உண்டாகும்; ஒருவர் முயற்சி செய்து தேடக் கூடியது புகழ்தான்.

## ௧0. காளத்தி முதலியார்

பல ஆண்டுகட்கு முன்பு தொண்டைமண்டலத்திலே காளத்தி முதலியார் என்னும் பெயருடைய வள்ளல் ஒருவர் இருந்தார். அவர் மிகுந்த அருள் உடையவர். புலவர்கள் தம்மீது செய்யுள் பாடிக் கொண்டோ அல்லது வீணைகவோ பொருளுதவியை நாடி வந்தால் தகுந்தவாறு பொருள்கொடுத்து உதவி செய்வார். தம்மிடம் ஏற்று வந்தவர்களுக்கு இல்லையென்று இயம்பமாட்டார். இதனால் இவருடைய பெருமை நாடெங்கும் சிறந்தோங்கியது. இவருடைய புகழைக் கண்டு பொறாமைகொண்ட அரசன் இவரால் தன்னுடைய புகழ மங்கிப் போகிறது என்று எண்ணினான். இவருடைய பொருள் முழுவதையும் பறிமுதல் செய்துவிட்டான். அதனால் இவர் மிகுந்த துன்பப்பட்டார்.

அந் நாளில் மதுரகவிராயர் என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார். அவர் மிகுந்த வறுமையால் பெருந் தொல்லைப்பட்டார். காளத்தி முதலியாரிடம் நல்ல உதவிபெறலாம் என்று எண்ணினார். புறப்பட்டு வந்து காளத்தி முதலியாரைக் கண்டார். தமது வறுமைத் துன்பத்தைக் கூறினார். புலவருக்குக் கொடுப்பதற்குக் காளத்தி முதலியாரிடம் பொருள் யாதும் இல்லை. "என்னிடம் பொருள் இல்லை," என்று சொல்வதற்கு நாணினார். இல்லை என்பதைவிட இறந்து போகலாம் என்று எண்ணினார். முதலியாருடைய வீட்டிற்குப் பின்புறத்திலே

பாம்புப்புற்று ஒன்று இருந்தது. முதலியார் அந்தப் புற்றிடத்திற்குச் சென்றார். தன்னைப் பாம்பு கடித்துக் கொல்ல வேண்டும் என்று எண்ணியவராய்ப் புற்றுக்குள் கையைவிட்டார். பாம்பு அந்த வள்ளலைக் கடிக்கவில்லை. தன் முடிமணியை அவர் கையில் கக்கியது. முதலியார் அதனைப் புலவருக்குக் கொடுத்து அனுப்பினார்.

"ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து."

(உரை.) *ஆற்றுப்பெருக்கு அற்று - ஆற்றிலே தண்ணீர் வற்றிப்போய், அடிசுடும் அந்நாளும் - மணலானது வெயிலினாலே காய்ந்து நடப்பவருடைய அடியைச் சுடுகிற அக்காலத்திலும், அவ் ஆறு - அந்த ஆறானது, ஊற்றுப் பெருக்கால் - ஊற்றுநீர்ப்பெருக்கினாலே, உலகு ஊட்டும் - உலகத்தார்க்கு நீரைக் கொடுக்கும். (அதைப்போல்) நல்ல குடிப் பிறந்தார் - நல்ல குடியிற் பிறந்தவர்கள், நல்கூர்ந்தார் ஆனாலும் - வறுமையை அடைந்தார்களாயினும், ஏற்றவர்க்கு - இரந்தவர்களுக்கு, இசைந்து - மனம் பொருந்தி, இல்லையெனமாட்டார் - எம்மிடத்திலே யாதும் பொருளில்லையென்று சொல்லமாட்டார்கள்.*

(கருத்து.) *நற்குடியிற் பிறந்தவர்கள் தாங்கள் வறுமையை அடைந்தாலும் இரப்பவாகட்குத் தம்மிடம் ஒன்றும் இல்லை யென்று சொல்லமாட்டார்கள்.*

## ௧௧. ஔவையார் ஆறுதல் உரை

ஔவையார் ஒரு நாள் ஓர் ஊர் வழியே மற்றோர் ஊருக்குச் சென்றுகொண்டிருந்தார். ஒரு வீட்டிலே பல பெண்கள் கூடிப் பேரொலி செய்து அழுது புலம்பிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் அழுது கொண்டிருப்பதற்குக் காரணத்தை உணராத ஔவையார் அவ் வீட்டிற்குச் சென்றார். அங்கு வெளியிலே சிலபேர் உட்கார்ந்து உரையாடிக்கொண் டிருந்தார்கள். அவர்களைப் பார்த்துப், "பெண் மக்கள் ஏன் அழுதுகொண்டிருக்கின்றனர். காரணம் என்ன ?" என்று உசாவினர். இருந்தவர்களில் ஒரு வர் ஔவையாரைப் பார்த்து, "இவ் வீட்டிலே ஓர் ஆண் குழந்தை நான்காண்டு நிரம்பியதாக இருந்தது. அது சென்ற ஆண்டிலே மாண்டுபோய் விட்டது. அஃது இறந்து ஓராண்டு நிறைவாகிறது. முதலாவ தாண்டுத் துக்கங் கொண்டாடுகிறோம்," என்று மறு மொழி கூறினர்.

அதனைக் கேட்டபொழுது ஒவையாருக்கு மிகு நகைப்புண்டாயிற்று. ஆயினும், அவர் நகைக்காமல் அந்த மனிதர்களைப் பார்த்து, "அன்பர்களே! உல கத்தில் பிறக்கின்ற உயிர்களெல்லாம் வினைப்பயனை நுகர்ந்து இறந்துபோகின்றன. ஒருவர் இறப்பதைக் குறித்து நாம் வருந்த வேண்டியதே இல்லை. ஆனல், நீங்கள் மறு ஆண்டில்கூட அழுவது என்ன மடமை? நீங்கள் இந்த ஆண்டில்மட்டுமன்றி இனிமேல் வரும் ஒவ்வோராண்டிலும் இவ்வாறே அழுதுகொண்டிருந்

தாலும் ஏற்படப் போகிற பயன் யாதும் இல்லை. ஆகவே, நீங்கள் நாமும் மாளப்போகிறவர்கள்தாம். அழுவதால் யாதும் பயனில்லை என்பதைத் தெளிவாக உணர்ந்து, அறஞ்செய்து நன்றாக வாழ்ந்திருப்பீர்களாக!" என்று அறிவுரை கூறிவிட்டுச் சென்றார்.

"ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்—வேண்டாம்
நமக்கும் அதுவழியே நாம்போம் அளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும்."

(உரை.) *மாநிலத்தீர் - பெரிய நில உலகத்தில் உள்ள மனிதர்களே! ஆண்டு ஆண்டுதோறும் அழுது புரண்டாலும் - ஒவ்வோராண்டினும் வருந்திப் புரண்டாலும், மாண்டார் வருவரோ - இறந்து போனவர்கள் திரும்பி வருவார்களோ, (வரமாட்டார்கள்) வேண்டா - (ஆகையால்) அழவேண்டியதில்லை. நமக்கும் அது வழியே - நமக்கும் சாக்காடே வழியாகும், நாம்போம் அளவும் - நாம் இறந்து போகுமளவும், எமக்கு என் என்று - எமக்கு யாது தொடர்பு இருக்கிறதென்று, இட்டு உண்டு இரும் - பிச்சையிட்டு நீங்களும் கவலையற்று இருங்கள்.*

(கருத்து.) *இறந்தவர்களைக் குறித்து ஒவ்வோராண்டினும் அழுது வருந்தினாலும், அவர்கள் பிழைத்து வரமாட்டார்கள்; ஆகவே, இறந்தவர்களைக் குறித்து அழுவதால் பயனில்லை.*

## கஉ. வயிற்றுப் பசி

ஒரு நாள் ஔவையார் ஓர் ஊரிலே இருந்து வெகு தொலைவில் உள்ள மற்றோர் ஊருக்கு வழி நடந்துகொண்டிருந்தார். இக் காலத்தைப்போல் அக்காலத்திலே விரைந்து செல்லத்தக்க மோட்டார் முதலிய ஊர்திகள் இல்லை. செல்வநலம் படைத்தவர்கள் வண்டி, குதிரை, பல்லக்கு முதலியவைகளில் செல்வார்கள். மற்றையோர் வழிச் சாப்பாட்டிற்குக் கட்டுச்சோறு கட்டித் தூக்கிக்கொண்டு நடந்துதான் செல்லவேண்டும்.

ஔவையாருக்கோ வீடு வாசல்கள் இல்லை. ஊர் ஊராகச் சுற்றிக்கொண்டிருப்பவர். வழியிற் சாப்பிடுவதற்குக் கட்டுச்சோறு கட்டிக்கொண்டு போகும் வழக்கம் அவரிடம் இல்லை. வழி நடந்துகொண்டிருந்த ஔவையாருக்கு வயிற்றுப் பசி உண்டாகியது. வழி நடப்பவர்களுக்கு வயிற்றுப் பசி உண்டானால் அது மிகக் கடுமையாக இருக்கும். வயிற்றுப் பசிகது உள்ளாகிய ஔவையார் பக்கத்தில் ஊர் ஏதேனும் இருக்கிறதா என்று பார்த்தார். ஊர்கள் இல்லை; மனிதப் போக்குவரத்தே இல்லை. வயிற்றுப் பசியால் வாடிய ஔவையார் தமது வயிற்றையே பழித்துரைக்கத் தொடங்கினர்.

"என்னுடைய வயிறே ஒரு நாள் சாப்பாட்டை விட்டுவிடு என்றால் விட்டுவிடமாட்டாய். உணவு கிடைக்கிறபோது இரண்டு நாளைக்குச் சேர்த்துச் சாப்பிட்டுவிடு என்றால் அதையுங் கேட்கமாட்டேன் என்

கிறாய். என்னுடைய வருத்தம் உனக்குச் சிறிதும் தெரிவதில்லை. உன்னோடு சேர்ந்து யான் வாழ்வது மிக அருமையான காரியம்,” என்று கூறினாள். ஔவையார் இவ்வாறு தமது வயிற்றையே குறை சொல்லிக் கொண்டு போவதைக் கண்ட சில வழிப் போக்கர்கள் தமது கட்டுச் சோற்றிற் சிறிது ஔவை யாருக்குக் கொடுத்து உண்ணச் செய்தனர்.

“ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்
இருநாளுக் கேலென்றால் ஏலாய்—ஒருநாளும்
என்னோ அறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்தல் அரிது ”

(உரை.) இடும்பைகூர் என் வயிறே - துன்பத்தைச் செய்கின்ற என்னுடைய வயிறே! ஒரு நாள் உணவை ஒழியென்றால் ஒழியாய் - அகப்படாதபோது ஒரு நாள் சாப்பாட்டை விட்டு விடுவாயாக என்று கூறினால் நான் கூறுவதைக் கேட்டு விட்டுவிட மாட்டாய்; இரு நாளுக்கு ஏல் என்றால் ஏலாய் - உணவு கிடைத்த போது இரண்டு நாட்கட்கு உரிய சாப்பாட்டைச் சாப்பிட்டுவிடு என்றால் அதனையுங் கேட்டுச சாப்பிடமாட்டாய்; என்னோ ஒரு நாளும் அறியாய் - எனக்கு ஏற்படுகின்ற வருத்தத்தை நீ ஒரு நாளும் தெரிந்து கொள்ளமாட்டாய், உன்னோடு வாழ்தல் அரிது - ஆகவே உன்னோடு கூடி வாழ்க்கை நடத்துவது எனக்கு மிக அருமையாக இருக்கிறது.

(கருத்து.) வயிறானது ஒரு நாள் உணவை விட்டிருக்கமாட்டாது. இரண்டு நாளைக்கு ஒன்றாக உணவை ஏற்றுக்கொள்ளவும் மாட்டாது. ஆகவே மிகக் கொடியதாகும்.

---

## கஅ. பழுதிலாப்பணி

ஒருநாள் சிலர் ஔவையாரைப் பார்த்துப், "பெரியீர்! இவ்வுலகில் குற்றமற்ற தொழில் யாது? அரசாங்க அலுவலில் அமர்ந்து அதிகாரஞ் செலுத்துவதா? அல்லது வாணிகம் முதலியவைகளில் ஈடுபட்டுப் பெரும் பொருள் தேடிக்கொண்டு சிறப்பாக வாழ்க்கை நடத்துவதா? எங்கட்கு எற்பட்டுள்ள ஐயத்தைப் போக்கியருளுங்கள்," என்று வேண்டிக் கொண்டனர்.

ஔவையார் அவர்களைப் பார்த்துப், "பெருஞ் செல்வராகி வாழ்தலும் அரசனிடம் அலுவல் பார்ப்பதும் மிகச் சிறந்த வாழ்க்கை என்று எண்ணுதீர்கள். நீர்வளம் பொருந்திய ஆற்றின் கரையில் சிறந்து வளர்ந்தோங்குகிற மரம் ஆற்றுநீரால் கரை சேதமுற்று வீழ்ந்து அழிந்து போதலை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம் அல்லேமோ? அதைப்போல் அரசன் அறியும்படியாக வாழ்கிற சிறந்த வாழ்க்கையும் நிலை பெற்றிருப்பது பெரும்பாலும் ஐயந்தான். இவ்வுலகில் சிறந்த தொழிலாக நான் பயிர்த்தொழிலையே எண்ணுகிறேன். 'உயிர்த் தொழில் எல்லாம் பயிர்த் தொழில் தன்னுல்' என்று பெரியோர்கள் கூறியிருப்பதால் எல்லோருடைய வாழ்க்கைச் சிறப்பும் உழுதுண்டு வாழ்கிற வாழ்க்கைக்குள்ளே அடங்கியிருக்கிறது. இதற்குச் சிறிதும் ஐயமில்லை," என்று கூறினர்.

"ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கோப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு."

(உரை.) *ஆற்றங் கரையின் மரமும் - ஆற்றின் கரையில் உள்ள மரமும், அரசு அறிய வீற்றிருந்த வாழ்வும் - அரசன் அறியப் பெருமையாக வாழ்கின்ற வாழ்க்கையும், விழும் அன்றே - அழிந்துவிடும் அல்லவா? ஆகவே, ஏற்றம் உழுதுண்டு வாழ்வு - உயர்வைத் தரக்கூடியது உழுது பயிர்செய்து வாழ்கின்ற உழு தொழில் வாழ்க்கையே ஆகும். அதற்கு ஒப்பு இல்லை - அதற்கு நிகரான வாழ்க்கை வேறில்லை, வேறு ஓர்பணிக்கு - மற்றைய தொழில்கட்கு, பழுது உண்டு - ஏதாவது குற்றங்கள் இருக்கும் என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.*

(கருத்து.) *எத்தகைய சிறந்த வாழ்க்கையும் அழிந்து போகும். பயிர்த்தொழில் செய்து வாழும் வாழ்க்கையோ ஒப்பற்ற சிறப்பினையுடையதாகும்.*

---

## கசு. மெய்கண்டாரும் வெள்ளையப்பனும்

ஓர் ஊரிலே மெய்கண்டார் என்னும் பெய ருடைய முனிவர் ஒருவர் இருந்தார். அவர் தவத் தால் சிறந்து விளங்கினார். அவர் தமது வாக்கால் என்ன சொன்னாலும் அவ்வாறே நடக்கும். அவ் வூரிலே வெள்ளையப்பன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். வெள்ளையப்பனுக்குப் பகைவ னாக இருந்த ஒருவன் நாள்தோறும் செல்வம் வளரப் பெற்றுச் சிறந்தோங்கிக் கொண்டிருந்தான். வெள் ளையப்பனுடைய வீட்டில் அவனுடைய உறவினர்கள் அடிககடி இறந்து கொண்டிருந்தனர்.

ஒருநாள் வெள்ளையப்பன் மெய்யறிவுச் செல்வ ராகிய மெய்கண்டாரிடம் சென்றான். "பெரியீர்! இவ்வூரிலே என் பகைவனாக உள்ள இன்ன பெய ருடையவன் நாள்தோறும் பொருள் வளரப்பெற்றுச் சிறந்த செல்வனாகிக் கொண்டு வருகிறான். அவன் வறியவனாகும்படி நீங்கள் செய்து விடுங்கள். என் னுடைய வீட்டிலே அடிக்கடி சாவு நேராமலும் இருக் கச் செய்யுங்கள்; இவ்வாறு செய்வீர்களானால் என் வீட்டிலேயே தங்கட்கு எப்பொழுதும் சாப்பாட் டுக்கு ஏற்பாடு செய்கிறேன். நீங்கள் வீடுவீடாகப் பிச்சைக்குப் போகவேண்டிய தொல்லை இல்லை," என்று தன்னுடைய தீய எண்ணத்தை ஒருவாறு வெளியிட்டான்.

மெய்கண்டார் வெள்ளையப்பனுடைய நோக் கத்தை அறிந்து கொண்டு, "அப்பா, இந்த எண்

*ணத்தை விட்டுவிடு. நம்முடைய செயலால் யாதும் நடைபெறுவதில்லை. எல்லாம் இறைவன் திருவுளப் படியும், ஊழ்வினைப்படியுமே நடைபெறுகின்றன,'' என்று பலவாறு அறிவுரைகள் கூறினார். வெள்ளை யப்பன் தனது மடமைக்கு நாணினான்.*

"ஆவாரை யாரே அழிப்பார் அதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர்—ஓவாமல்
ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல்.''

(உரை.) *அம்புவியதன்மேல் - அழகிய நிலவுலகத்திலே, மெய் - உண்மையாக, ஆவாரை அழிப்பார் யார் - வாழ்வதற்கு உரியவர்களை அழிகக வல்லவர்கள் யாவர்; அதுவன்றி - அது வல்லாமல், சாவாரைத் தவிர்ப்பவர் யார் - இறத்தற்கு உரியவரை இறவாமல் நிறுத்தவல்லவர் யார்? ஓவாமல் - ஒழியாமல், ஐயம் புகுவாரை - பிச்சைக்குச செல்வோரை, விலக்குவார் யார் - தடுக்க வல்லவர் எவர்?*

(கருத்து) *உலகில் நிகழுகிற காரியங்களெல்லாம் ஊழ் வினைப்படி நடைபெறுகின்றன. மனிதர்களின் முயற்சியால் யாதும் நடைபெறுவதில்லை.*

---

## ௧௫. மானங்காத்த மன்னன்

ஓர் அரசன் பகைவர்களிடம் அகப்பட்டுக் கொண்டான். அகப்பட்டுக் கொண்ட அரசன் பெருஞ் சிறப்போடு வாழ்ந்திருந்தவன். பகைவர்கள் அவனைச் சிறையில் அடைத்து விட்டனர். சிறையில் அவனை நன்றாகக் கவனிக்கவில்லை. ஒருநாள் அரசனுக்கு நீர்வேட்கை மிகுதியாயிற்று. சிறைக்காவலனை அழைத்துச், "சிறிது தண்ணீர் கொண்டு வருவாயாக," என்று கூறினான். அச் சிறைக காவலன் உடனடியாகக் கொண்டுவந்து கொடுககவில்லை. பல முறை வற்புறுத்திக் கேட்டபின் இறுதியில் முணுமுணுத்துக் கொண்டு தண்ணீர் கொண்டு வந்தான். அதனை இடது கையால், "இந்தா பிடி," என்று சொல்லிக் கொண்டே நீட்டினான்.

சிறைக்காவலனின் மனப்பான்மை அரசனுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. இவ்வளவு கண்ணியக் குறைவாக நடந்து கொண்டானே என்று எண்ணி எண்ணி உள்ளம் புழுங்கினான். "நாம் இத் தண்ணீரைக் குடித்து உயிரோடிருந்து ஆகப்போகிறது என்ன? மானம் இழந்த பின் வாழாமை யன்றோ இனிது," என்று எண்ணமிட்டான். அத் தண்ணீரைக் குடிப்பதற்கு அவனுக்குச் சிறிதும் விருப்பமில்லை. அதனை அப்பால் வீசி விட்டான். தான் இறக்கும் வரை உண்ணா நோன்பை மேற்கொண்டிருந்து இறந்துபோனான்.

"பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியா(து)
உயிர்விடுகை சால உறும்."

(உரை.) *பேசுங்கால் - சொல்லுமிடத்து, பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை—பிச்சையெடுத்து உண்டலினும் இழிவிற் பெரிய குடி வாழ்க்கையாவது, பல இச்சை சொல்லி இடித்து உண்கை - பலவாகிய இசைகளைப் பேசி ஒருவரை நெருக்கி வாங்கி உண்ணுதலாம், சிச்சீ - சீசீ இஃது என்ன செய்கை! வயிறு வளர்க்கைக்கு - இப்படி வயிறு வளர்ப்பதைப் பார்க்கினும், மானம் அழியாது - மானங்கெடாமல், உயிர்விடுகை - உயிர் விடுதல், சால உறும் - மிகவுஞ் சிறந்ததாம்.*

(கருத்து.) *மிக இழிவான நிலையில் ஒருவர் வயிற்றை வளர்த்து உயிர் வாழ்வதினும், இறந்து போவதே மிகச் சிறப்புடையதாம்.*

## ௧௬௯. சிவாயநம அடிகள்

ஓர் ஊரிலே துறவியொருவர் இருந்தார். எப்பொழுது பார்த்தாலும் அவர், "சிவாயநம; சிவாயநம," என்று சொல்லிக்கொண்டே இருப்பார். இதனால் அவருடைய பெயர் சிவாயநம அடிகள் என்று வழங்கியது. பெரும்பாலோர் சிவாயநம அடிகளைப் போற்றிப் பாராட்டி அவர் மிகப் பெரியவர் என்று சொல்லிக் கொண்டாடினர். சிலரோ "அவ்வாறு சொல்லுவதால் யாது பயன்? இது வீண் பகட்டே தவிர வேறு இல்லை. இவர் உலகத்தை ஏய்க்கிறார்," என்று சொல்லித் தூற்றினர்.

ஒருமுறை ஊரிலே கொடிய நச்சுநோய் ஒன்று தோன்றி மக்களைப் பெரிதும் வருத்தியது. பலர் மாண்டு தொலைந்தனர். பலர் நோய்க்கு ஆளாகி மாளாமலும் மீளாமலும் வாளா வருந்தித் தொலைப்பட்டனர். ஊரில் ஒருவரைக்கூட எஞ்சவிடாமல் வாட்டி வருத்திய அந்நோய் சிவாயநம அடிகளை ஒன்றுமே செய்யவில்லை. அவர் இருந்த பக்கத்தைக் கூட இந் நோய் எட்டிப் பார்க்கவில்லை. இப் புதுமையைக் கண்டு பலரும் வியப்படைந்தனர்.

"சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்கு
அபாயம் ஒருநாளும் இல்லை—உபாயம்
இதுவே மதியாகும் அல்லாத எல்லாம்
விதியே மதியாய் விடும்."

(உரை.) சிவாயநமவென்று சிந்தித்திருப்போர்க்கு - சிவாய நம என்று எண்ணிக் கொண்டிருப்பவர்கட்கு, ஒருநாளும் அபாயம் இல்லை - ஒரு பொழுதும் துன்பம் உண்டாகாது, இதுவே - இஃதொன்றுமே, உபாயம் மதி - ஊழை வெல்லுதற்கேற்ற சூழ்ச்சியறிவாகும், அல்லாத எல்லாம் - இஃதொழிந்த மற்றவைகள், விதியே மதியாய் விடும் - ஊழ்வினையே அறிவாக முடிந்துவிடும்.

(கருத்து.) இறைவனை எண்ணியிருப்பவர்கட்கு எத்தகைய துன்பமும் உண்டாகமாட்டா. மற்றவர்கட்கு எச்செயலும் ஊழ்வினைப்படி நடக்கும்.

---

## கஎ. ஔவையாரும் குணநலங்களும்

ஔவையார் ஒருநாள் ஓர் ஊரில் உள்ள குளத்தில் தண்ணீர் குடித்தார். தண்ணீர் மிக இனிமையாக இருந்தது. மற்றொருநாள் வேறோர் ஊர்க் குளத்தில் தண்ணீர் குடிக்கச் சென்றார். தண்ணீரில் உப்புச்சத்து இருந்தது. அதனால் குடிக்க முடியவில்லை.

ஓர் ஊருக்குச் சென்றால் அவ்வூரில் உள்ள நல்லவர்களை அவர்களது கொடையினால் ஔவையார் எளிதாக உணர்ந்து கொள்வார். ஒருவருடைய கண்களைப் பார்த்தவுடனே அவர்கள் அருள் உள்ளவர்கள் இல்லாதவர்கள் என்பதையும் இவர் கண்டு பிடித்து விடுவார். மற்றவர்களைப் பற்றியும் அவர்களுடைய சில தன்மைகளைக் கொண்டே முழு இயற்கையையும் விளக்கமாகத் தெரிந்து கொள்வார். இச் செய்திகளையெல்லாம் தொகுத்துத்தான் பிறகு அடியில் வரும் செய்யுளை இயற்றினார்.

"தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணங்கொடையால்
கண்ணீர்மை மாறாக் கருணையால்—பெண்ணீர்மை
கற்பழியா ஆற்றால் கடல்சூழ்ந்த வையகத்துள்
அற்புதமாம் என்றே அறி."

(உரை) தண்ணீர் நிலநலத்தால் - தண்ணீரானது நிலத்தினது நன்மையினாலும், தக்கோர் குணம் கொடையால் - நல்லோருடைய குணமானது ஈகையினாலும், கண் நீர்மை மாறாக் கருணையால் - கண்களுடைய குணமானது நீங்காத அருளினாலும், பெண்

நீர்மை கற்பு அழியா ஆற்றல் - பெண்களுடைய குணமானது கற்பு நிலைகெடாத வழியினாலும், கடல் சூழ்ந்த வையகத்துள் - கடல் சூழ்ந்த நிலவுலகினிடத்து, அற்புதம் ஆம் - வியக்கத்தக்க மேன்மையுடையனவாகும், என்று அறி - என்று நீ அறிவாயாக.

(கருத்து.) தண்ணீர் நிலத்தால் சிறப்படைகிறது; நல்லவர்கள் கொடையினால் சிறப்படைகிறார்கள்; கண்கள் அருளுடைமையால் சிறப்படைகின்றன; பெண்கள் கற்பினால் சிறப்புறுகிறார்கள்.

## க௮. கடவுளைவெறுத்த காத்த பெருமாள்

பூங்குடி என்னும் ஊரிலே காத்த பெருமாள் என்னும் பெயருடையான் ஒருவன் இருந்தான். அவன் பழவினைப் பயனாய் வறுமைக்கும் பலவகைத் தொல்லைகட்கும் உள்ளாகிப் பெரிதும் வருந்தினான். ஊரிற் பலர் செல்வச் சிறப்போடு நல்வாழ்வு வாழ்ந்து கொண்டிருத்தலைக் கண்டு உள்ளம் புழுங்கினான். கடவுள் தனக்குமட்டும் நல்வாழ்வு கொடுககாமல் வஞ்சித்து வருத்துவதாக எண்ணி, "ஓ கண்ணற்ற கடவுளே! அறிவற்ற தெய்வமே! உனககு ஏன் இந்த வஞ்சகம்? நான் உனக்கு என்ன தீமை செய்தேன்? எல்லோருக்கும் நல்வாழ்வைக கொடுக்கிற நீ என்னை மட்டும் ஏன் வறுமைக்கும் பிணிகட்கும உட்படுத்தி வருத்துகிறாய்? இனிமேலாவது இவ்வாறு வஞ்சகம் செய்யாமல் எல்லோருக்கும் நன்றாக அருள்புரி," என்று கூறினான்.

காத்தபெருமாள் கழறியதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு பெரியவர், "அப்பா! வீணாகக் கடவுளை இகழாதே. கடவுள் எல்லோருக்கும் பொதுவானவர். அவர் ஒருவரை வாழவைப்பதும், ஒருவரைத் தாழவைப்பதும் இல்லை. வாழ்வும் தாழ்வும் அவரவர் ஊழினால் உண்டாகின்றன. அறஞ் செய்வதனால் எல்லா நன்மைகளும் உண்டாகும் என்பதை உணர்ந்து முற்பிறப்பில் நல்லறஞ் செய்யாதவர்கட்கு இப்பிறப்பில் செல்வமும் சிறப்பும் எவ்வாறு உண்டாகும்?" என்று கூறிப் பலவாறு அறிவுறுத்தினார்.

" செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்—வையத்து
அறம்பாவம் என்னவறிந்துஅன் றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்."

(உரை.) *வையத்துப் பாவம் அறும் என்ன அறிந்து - நிலவுலகிலே அறஞ்செய்தலினாலே தீவினை நீங்கும் என்று உணர்ந்து, அன்று இடார்க்கு - அக்காலத்திலே ஈயாதவருக்கு, செய்தீவினை இருக்க - செய்த பலவகைத் தீவினைகள் துன்பத்திற்கு விதையாக இருக்க, இன்று தெய்வத்தை நொந்தக்கால் - இப்பொழுது கடவுளை வெறுத்தால், இருநிதியம் எய்தவருமோ - பெரும்பொருள் வந்து சேருமோ? வெறும் பானைமேல் பொங்குமோ - வெறும் பானையை அடுப்பிலே வைத்து எரித்தால் மேலே பொங்கி வருமோ? பொங்கிவராது*

(கருத்து.) *முற்பிறப்பில் அறஞ் செய்யாதவர்கட்கு இப்பிறப்பில் நன்மை உண்டாகமாட்டா.*

---

## ௧௪௯. காளிமுத்தும் கள்ளர்களும்

பனங்குடி என்னும் ஊரிலே வெகுகாலத்திற்கு முன் காளிமுத்து என்னும் பெயருடைய பணக்காரன் ஒருவன் இருந்தான். அவன் அதற்கு முந்திய பிறப்புக்களிலே செய்த நல்வினையினால் அவனுக்கு மிகுந்த செல்வம் உண்டாகியிருந்தது. காளிமுத்து மேலும் பல வாணிகங்கள் செய்து பொருளைப் பெருக்கினான். பொருளைப் பெருக்கினானே தவிர அருளைப் பெருக்கி அற வழிகளில் செலவிடவில்லை.

உறவினர்களைக்கூட அவன் நன்றாக ஆதரிக்கவில்லை. தன்னுடைய பெற்றோர்களை நன்கு காப்பாற்றாமல் விட்டுவிட்டான். பிள்ளைகள் சிலர் அவனுக்குத் தோன்றினர். அவர்களுடைய கல்விக்குத் தக்கவாறு செலவு செய்து படிக்கவைப்போம் என்றும் அவன் எண்ணவில்லை. மக்களையும் பெற்றோர்களையுமே அவன் கருத்துடன் காப்பாற்றவில்லையென்றால் ஊரார்கட்கும் நண்பர்கட்கும் எவ்வாறு உதவிசெய்வான்? அவன் பொருள் காக்கும் பூதமாகப் போனானே என்று பலரும் இரங்கினார்கள்.

இரவலர்கள் புலவர்கள் முதலியோர் காளிமுத்திடஞ் சென்று எவ்வளவோ பணிவாகவும் அடக்க ஒடுக்கமாகவும் "ஏதேனும் உதவிசெய்தருளுங்கள்; வறுமையினால் துன்பப்படுகிறோம்," என்று கெஞ்சிக் கூத்தாடிப் பார்த்தனர். எதுவும் பலிக்கவில்லை.

காளிமுத்திடம் பெரும்பொருள் குவிந்திருப்பது எல்லோருக்கும் நன்கு தெரியும். கள்ளர்கள் காளி

முத்துவைப்பற்றிக் கருத்துச் செலுத்தினார். ஒருநாள் நள்ளிரவில் பன்னிரண்டு பேர் நல்ல தடிகளுடன் காளிமுத்துவின் வீட்டிற்குள் நுழைந்தனர். காளிமுத்துவுக்குப் பலமான அடி கிடைத்தது. அவன் உடலில் அடிவிழாத இடமே பாக்கியில்லை. காளிமுத்துவின் பொருள் ஒரு நொடிக்குள் கள்ளர் கைக்கு மாறிவிட்டது. காளிமுத்து யாதும் பேச்சு மூச்சு விடவில்லை.

"பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்
உற்றார் உகந்தார் எனவேண்டார்—மற்றோர்
இரணங் கொடுத்தால் இடுவர் இடாரே
சரணங் கொடுத்தாலுந் தாம்."

(உரை.) பேர் உலகில் - பெரிய நிலவுலகத்திலே, பெற்றார் - தாய் தந்தையர், பிறந்தார - பிள்ளைகள், பெரு நாட்டார் - தம்முடைய ஊரினர், உற்றா - சுற்றத்தவர், உகந்தார் - நண்பர், என வேண்டார் - என்று விரும்பாதவராகிய பிசினர்கள், மற்றோர் - யாதுந் தொடர்பில்லாத பிறர், இரணம் கொடுத்தால் - தம்முடம்பிலே காயத்தை உண்டு செய்தால், இடுவர் - தம்பொருளை அவருக்குக் கொடுப்பர், சரணம் கொடுததாலும் இடார் - முன் கூறப்பெற்றவாகள் அடைக்கலம் புகுந்தார்களாயினும் அவருக்கு யாதுங் கொடுக்கமாட்டார்கள்.

(கருத்து.) அறிவற்றவர்கள் தம்மை வருத்துகிறவர்கட்குத் தான் பொருள் உதவி செய்வார்களே தவிர உறவினர் முதலியவர் கட்கு எத்தகைய உதவியுஞ் செய்யமாட்டார்கள்.

---

## ௨௦. எல்லாம் வயிற்றுப் பெருமான் பொருட்டு

நிரம்பவழகியார் என்னும் பெயரையுடைய ஒரு முனிவர் ஒரு பெரிய மலையிலே பதினாறு ஆண்டுகள் அருந்தவம் புரிந்துகொண்டிருந்தார். பிறகு அவருக்கு இறைவன் திருவருளும் மெய்யறிவும் உண்டாயின. அதன்பின் தவத்தைவிட்டு உலகத்தைச் சுற்றிப் பார்ககத் தொடங்கினார்.

ஓரிடத்தில் ஓர் எளியவன் ஒரு செல்வனைப் போற்றிப் பாராட்டிக்கொண்டிருந்தான். முனிவர் அந்த மனிதனைப் பார்த்து, "நீ அவனைப் போற்றி வழிபட்டுக்கொண்டிருக்கிறாயே! எதன் பொருட்டு?" என்று உசாவினார். "அவன் நல்ல பணக்காரன. சாப் பாட்டுககேதாவது தருவான். அதன்பொருட்டே அவனைப் போற்றுகிறேன்," என்று கூறினான். பின்னர் ஒரு பிச்சைக்காரனைக் கண்டு, "நீயேன் பிச்சை யெடுக்கிறாய்?" என்று உசாவினார். அவனும், "சாப்பாட்டுககாகத்தான்," என்று கூறினான்.

பிறகு வெளிநாட்டுக்குச் சென்று பொருள் தேடிக்கொண்டு திரும்பிய ஒரு மனிதனைக் கண்டு, "எதற்குக் கடல் கடந்து சென்றாய்?" என்று உசாவி னார். அவனுஞ், "சாப்பாட்டிற்காகத்தான்," என்றான். பிறகு ஓர் அரசனைக் கண்டு, "நீர் எதற்காக அரசாட்சி செய்கிறீர்?" என்று உசாவினார். அவ்வரசன், "சாப்பாட்டிற்காகத்தான் அரசாட்சியை மேற்கொண் டிருக்கிறேன்," என்றான். பிறகு செல்வர்கள்மீது புகழ்ச்சியாகப் பாடல்கள் இயற்றிக்கொண்டு அவர்

களின் வீடுதோறுந்திரிந்த ஒரு புலவரைக் கண்டு, "எதற்காக நீங்கள் இவ்வாறு பாடல்கள் இயற்று கிறீர்?" என்று உசாவினர். புலவர், "நல்லாஞ் சாப் பாட்டிற்காகத்தான்," என்றார். இதனைக் கேட்ட முனிவர் "அந்தோ! இந்த உலகம் முழுவதும் உள்ள எல்லோரும் வயிற்றுப் பெருமான்பொருட்டு முயற்சி செய்கிறார்களே தவிர மறுமைக்கு நன்மை தரத்தக்க வீடுபேற்றின் பொருட்டு முயற்சி செய்வார் ஒருவரை யும் காணேமே," என்று சொல்லி வருந்திக்கொண்டே சென்றார்.

"சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி அரிசிக்கே நாம்."

(உரை.) வயிற்றின் கொடுமையால் - வயிற்றினுடைய பசிக் கொடுமையாலே, சேவித்தும் - பிறரைப் போற்றியும், சென்று இரந்தும் - பலரிடத்துச் சென்று ஐயமேற்றும், தெள்நீர்க் கடல் கடந்தும் - தெளிவாகிய நீரையுடைய பெரிய கடலைக் கடந்து வேறு நாடு சென்றும், பாவித்தும் - ஒருவரைப் பெரியவராகப் பாவித்தும், பார் ஆண்டும் - நில உலகத்தை அரசாட்சி செய்தும், பாட்டு இசைத்தும் - பிறரைப் புகழ்ந்து பாட்டுப் பாடியும், நாம் உடம்பை - நாம் நம்முடைய உடம்பை, நாழி அரிசிக்கே - நாழி அரிசியின் பொருட்டே, பாழின் - வீணாக, போவிப்பம் - செலுத்து கின்றோம்.

(கருத்து) இவ்வுலகத்தில் நடைபெறுந் தொழில்கள்யாவும் வயிற்றை நிரப்பும் பொருட்டே நடைபெறுகின்றன.

---

## உக. நெற்குன்றவாணன்

தொண்டைமண்டலத்திலே சில நூற்றாண்டுகட்கு முன்னே நெற்குன்றவாணன் என்னும் பெயருடைய முதலியார் ஒருவர் இருந்தார். அவர் கள்ளங் கபடு வஞ்சகம் முதலிய தீய குணங்கள் சிறிதும் இல்லாதவர். ஏழை எளியவர்களிடத்திலே தண்ணருள் மிகுந்தவர். பிற உயிர்களை யெல்லாம் தன்னுயிரைப் போலவே எண்ணும் இனிய தன்மையுடையவர்.

அவர் மிக நல்லவராக இருந்தபடியால் அவருக்குச் செல்வம் மிகுதியாகக் குவிந்தது. அழகிய வீடு வாசல்களைக் கட்டினர். விளைநிலங்கள் மிகுதியாகச் சேர்ந்தன. அதனுல் ஆண்டுதோறும் விளையும் நெல் மலைமலையாகக் குவிந்தது. அவ்வாறு நெல்லை மிகுதியாகப் பெற்றபடியினுலேதான் அவருடைய பெயர் நெற்குன்றவாணர் என்று காரணப் பெயராக அமைந்தது. அவர் நீண்டநாள் உலகில் வாழ்ந்து ஏழை எளியவர்கட்குப் பேருதவியாக இருந்தார். வஞ்சமற்ற நெஞ்சையுடையவர் இனிய நலங்களைப் பெறுவார்கள் என்பதற்கு இம் முதலியாரே தகக எடுத்துக்காட்டாக அமைந்தார்.

"நீரும் நிழலும் நிலம்பொதியும் நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க் கென்றும்
தருஞ்சிவந்த தாமரையாள் தான்."

(உரை.) சிவந்த தாமரையாள் - செந்தாமரையில் எழுந்தருளிய திருமகள், வஞ்சம் இலார்க்கு - வஞ்சமற்ற நெஞ்சினர்க்கு, நீரும் - நீர்வளத்தையும், நிழலும் - நிழல் வளத்தையும், நிலம்பொதியும் நெற்கட்டும் - நிலத்திலே நிறையும் நெற்போரையும், பேரும் - நல்ல பேரையும், புகழும் - சீர்த்தியையும், பெருவாழ்வும் - பெரிய வாழ்க்கையையும், ஊரும் - சிற்றூரையும், வருந்திருவும் - வளருகின்ற செல்வத்தையும், வாழ்நாளும் - நிறைந்த வாணாளையும், என்றும் தரும் - எந்நாளும் கொடுத்தருளுவாள்.

(கருத்து) வஞ்சமற்ற நெஞ்சம் உள்ளவர்கள் இவ்வுலகத்திலே எல்லா நலங்களையும் இனிது பெற்று வாழுவார்கள்.

## உஉ. பணத்தைப் புதைத்த பாவையர்

இங்குக் கூறப்பெறுகிற நிகழ்ச்சி சில ஆண்டுக ளுக்கு முன்புதான் நடந்தது. ஓர் ஊரிலே தாயும் மகளும் ஆன இரண்டு பெண்கள் பொருள் தேடிப் பாதுகாக்க வேண்டும் என்று முடிவு செய்தார்கள். நிலத்தில் விளைந்த விளைபொருள்கள் ஆடு மாடுகள் வீட்டில் இருந்த தட்டுமுட்டுப் பொருள்கள் முதலிய கையில் கிடைத்தவைகளை யெல்லாம் விற்றுப் பண நோட்டாகச் செய்தார்கள். பத்துரூபா நோட்டுக்க ளாக மூவாயிரம் ரூபா சேர்த்தார்கள்.

இப்பொருளை யாரிடத்திலும் கொடுத்து வைப்ப தற்கோ அல்லது பொருட்காப்பு நிலையத்தில் (பாங்கி) கொடுத்து வைப்பதற்கோ அவர்களுடைய உள்ளந் துணியவில்லை. வாங்குபவர்கள் எடுத்துக்கொண்டு ஏய்த்துவிட்டால் என்ன செய்வது என்று எண்ணி ஞர்கள். நோட்டுககளை ஒரு கள்ளிப் பெட்டியில் வைத்து வீட்டுக்குள் ஓரிடத்தில் புதைத்து வைத்து விட்டனர்.

ஐந்தாறு திங்கள்கள் சென்றன. புதைத்துள்ள நோட்டுக்களை எடுத்து வெய்யிலில் காய வைத்துப் பிறகு புதைக்கலாம் என்று எண்ணினர். நிலத்தைத் தோண்டிப் பெட்டியைப் பார்த்தார்கள், பெட்டி நோட்டு முதலிய எல்லாவற்றையுங் கரையான் தின்று ஏப்பமிட்டு விட்டது.

தங்கள் பொருளுககு நேர்ந்த கதியைப் பார்த் துத் தாயும் மகளும் கோவென்று கதறிப் புலம்பினர்.

அழுதாற் பயனென்ன? எவ்வளவோ தொல்லைப் பட்டுப் பட்டினியும் பசியுமாகக் கிடந்து தொகுத்த அப்பொருள் போனது போனதுதான்.

"பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போயின பின்புயாரே அநுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்."

(உரை.) பணத்தைப் பாடுபட்டுத் தேடி - பொருளை வருந்தி யுழைத்துச சேர்த்து, புதைத்துவைத்து - உண்ணாமலும் அறஞ் செய்யாமலும் நிலத்திலே புதைத்து வைத்து, கேடுகெட்ட மானிடரே - நன்மை யெல்லாவற்றையும் இழந்த மனிதர்களே, கேளுங்கள் - நான் கூறுவதைக் கேட்பீர்களாக, கூடுவிட்டு - உடம்பினை விட்டு, ஆவிதான் போயின பின்பு - உயிர் நீங்கிய பிறகு, பாவிகாள் - தீவினையாளர்களே, அந்தப் பணம் - அந்தப் பொருளை, இங்கு ஆர் அநுபவிப்பார் - இவ்வுலகில் யார் அதனை நுகர்வார்கள்?

(கருத்து) பொருளைத் தாமும் நுகர்ந்து அறவழிகளிலுஞ் செலவிடவேண்டும். புதைத்துவைக்கும் பொருள் வீணாகப் போகும்.

## ௨௩. கைக்கூலி பெற்ற நடுவன்

ஓர் ஊரிலே நீதிமன்றம் ஒன்று இருந்தது. அதற்கு நடுவனாக (வழக்குத் தீர்ப்பவனாக) அமைந்தவனுடைய பெயர் அறத்திருவன். பெயர்தான் அறத்திருவனே தவிரச் செயலில் மறத்திருவனாக விளங்கினான். அவன் தன்னிடம் வருகிற வழக்குகளை நன்றாக உசாவி நேர்மையான முறையில் முடிவு சொல்வதே இல்லை. யாராவது கைக்கூலி (இலஞ்சம்) கொடுப்பார்களாயின் அவர்கள் பக்கமாக முடிவு செய்துவிடுவான். இதனால் ஏழை எளியவர் அறமுறை கிடைக்காமல் பெருந் தொல்லைக்கு உள்ளானார்கள்.

அறத்திருவனுக்குச் செல்வம் நன்கு பெருகிற்று. அவன் அதனைக் கண்டு மனம் மகிழ்ந்தான். "நமது செயல் தெய்வத்திற்குக்கூடப் பிடித்திருக்கிறது; அதனால்தான் நமக்குச் செல்வம்பெருகுகிறது," என்று உள்ளங்களித்தான். மறநெறியில் நடப்பவன் எவ்வாறு நன்றாக வாழமுடியும்? நாளடைவில் அறத்திருவனுக்கு அல்லல்கள் பல நேர்ந்தன. அவன் கைக்கூலி பெற்றுக்கொண்டு மறநெறியில் நடக்கிறான் என்னும் செய்தி அரசனுக்குத் தெரிந்தது. அரசன் உடனே மிகுந்த சினங்கொண்டான். அவனை வேலையிலிருந்து நீக்கிவிட்டு நடுநிலை பிறழாத வேறொருவனை முறைமன்றத் தலைவனாக ஏற்படுத்தினான்.

அறத்திருவன் பதவியிழந்ததும் செல்வம் கரையத் தொடங்கியது. அவன் எளிய நிலையை அடைந்தான். அவனால் முன்பு வழக்கிழந்த பலர் அவனுக்கு

அல்லல்கள் பல செய்தார்கள். அறத்திருவன் நாளடைவில் ஊரைவிட்டு ஓடிப்போனான். அவனுடைய மனைவி மக்களும் சிதறிப்போனார்கள். அவன் குடியிருந்த வீட்டைக்கூட யாருந்திரும்பிப் பார்க்கவில்லை. அது பாழடைந்து பேய் பூதங்களுக்கும் பாம்பு முதலியவைகட்கும் இருப்பிடமாகிவிட்டது. இடிந்துபோன பகுதியில் பாதாள மூலி வெள்ளெருக்கு முதலியவைகளும் முளைத்தன.

" வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை."

(உரை.) மன்று ஓரஞ்சொன்னார்மனை - தரும சபையிலே ஓரஞ் சொன்னவருடைய வீட்டில், வேதாளம் சேரும் - பேய்கள் வந்து சேரும், வெள்ளெருக்குப் பூக்கும் - வெள்ளெருக்கு முளைத்து மலரும், பாதாள மூலி படரும் - பாதாள மூலி என்னுங் கொடியானது படரும், மூதேவி சென்று இருந்து வாழ்வள் - மூதேவியானவள் போய் நிலைபெற்று வாழ்வாள், சேடன் குடிபுகும் - பாம்புகள் குடியிருக்கும்.

(**கருத்து.**) அறநெறியில் தவறி நடந்தவர்கள் வாழ்ந்திருந்த இருப்பிடங்கூட நன்னிலையில் விளங்கமாட்டாது.

---

## உ௪. ஐந்து புலவர்கள்

ஒரு நாள் ஓரிடத்தில் ஐந்து புலவர்கள் அமர்ந்து உரையாடிக்கொண்டிருந்தார்கள். ஐந்துபேரும் ஐந்து வகையான தங்கள் எண்ணங்களைப் பின்வருமாறு வெளியிட்டார்கள் :

அவர்களுள் ஒரு புலவர் சைவப் பழம். அவர் எப்பொழுதுந் திருநீறு அணிதல் வேண்டும் என்னுங் கொள்கையுடையவர். அவர் தமது கொள்கையை வற்புறுத்திப் பேசினுர். மற்ருெரு புலவருடைய கொள்கை நெய் இல்லாமற் சாப்பிடக்கூடாது. அவ்வாறு சாப்பிட்டால் அந்த உணவு பயனளிக்காது என்பது. அவர் தமது எண்ணத்தை வற்புறுத்திப் பேசினுர். மற்ருெரு புலவருடைய நோக்கம் ஆற்றில் நீராடுதல் வேண்டும். ஆற்றுநீர்தான் அருமையானது ஆறில்லாத ஊர் வீண் என்பது. இவர் தமது எண்ணத்தை வலியுறுத்திப் பேசினுர்.

வேருெரு புலவர் கொள்கை 'ஒவ்வொருவருக்கும் உடன்பிறந்தார்கள் இருத்தல் வேண்டும்; உடன் பிறப்பற்றவர்கள் எதற்கும் உதவார்' என்பது. இவர் தமது கருத்தைப் புலப்படுத்திப் பேசினுர். ஐந்தாவது புலவர் நோக்கம் 'ஒவ்வோர் இல்லத்திலும் பெண்கள் இருத்தல்வேண்டும். பெண்கள் இருந்தால்தான் வீட்டுக் காரியங்கள் நன்ருக நடைபெறும். பெண்கள் இல்லாத வீடு பாழடைந்த வீடே' என்பது. இவர் இதனை அழுத்திக் கூறினுர்.

இப் புலவர்களுடைய உரையாடல்களைக் கேட்டுக் கொண்டே அங்குச் சென்றார் ஔவையார். அந்தச் சமயத்தில்தான் பின்வரும் பாட்டு ஔவையார் உள்ளத்தில் தோன்றியது.

"நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா உண்டிபாழ்
ஆறில்லா ஊருக் கழகுபாழ்—மாறில்
உடன் பிறப்பில்லா உடம்புபாழ் பாழே
மடக்கொடி இல்லா மனை."

(உரை.) *நீறு இல்லா நெற்றி பாழ் - திருநீறு இல்லாத நெற்றி பாழாகும், நெய் இல்லா உண்டி பாழ் - நெய்யில்லாத சாப்பாடு பாழேயாகும், ஆறு இல்லாத ஊருக்கு அழகு பாழ் - ஆற்றைப் பெறாத ஊரினுடைய அழகும் பாழேயாகும், மாறுஇல் உடன்பிறப்பு இல்லா உடம்பு பாழ் - மாறுபடாத உடன்பிறந்தார் இல்லாத உடம்பு பாழாகும், மடக்கொடி இல்லா மனை பாழே - இல்லத்திற்குத் தக்க பெண்கள் இல்லாத வீடும் பாழேயாகும்.*

(கருத்து.) *திருநீறிடவேண்டும். உணவில் நெய் சேர்த்துக் கொள்ளவேண்டும். ஊரையடுத்து ஆறு இருக்க வேண்டும். ஒவ்வொருவரும் உடன்பிறந்தவர்களைப் பெற்றிருத்தல் வேண்டும். இல்லத்தில் பெண்கள் இருக்கவேண்டும்.*

## உரு. பெருஞ் செலவு செய்த பெரியண்ணன்

வரகூர் என்னும் ஊரிலே பெரியண்ணன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். பெரியண்ணன் வீண்செலவு செய்வதில் வல்லவன். ஒரு ரூபா கிடைத்தால் இரண்டு ரூபா செலவு செய்வான். இரண்டு ரூபா கிடைத்தால் நான்கு ரூபா செலவு செய்வான். இவ்வாறே அவனுடைய செலவு வரவுக்கு மேல் ஒரு பங்கு மிகுதியாக இருக்கும்.

"வரவுக்குமேல் செலவு செய்தல் கூடாது. அவ்வாறு செய்தால் பலவகையான தொல்லைகள் உண்டாகும்," என்று பலர் பெரியண்ணனுக்கு அறிவுரை கூறினார்கள் அவன் அவ்வுரைகளை யெல்லாம் காதிற் போட்டுககொள்ளவில்லை. யாரேனும் கடன் கொடுப்பவர்கள் இருந்தால் அவர்களிடமெல்லாம் கடன் வாங்கிச் செலவு செய்வான். பிறகு கடன் கொடுத்தவர்கள் கடனைத்தரச் சொல்லி நெருக்கி வருத்துவார்கள். கொடுத்தவர்கட்குத் திருப்பிககொடுக்க வகையில்லாமல் விழிப்பான். அவர்கள் இவனுடைய பெருமைக்குச் சிறுமை வருமாறு நடந்துகொள்வார்கள். பெரியண்ணன் எல்லாவற்றையும் பட்டுக்கொள்வான்.

நாளடைவில் வரகூர் சரிப்பட்டு வரவில்லை. வேறு ஊர்கட்குச் சென்றான். அவ்விடத்திலும் ஒத்துக் கொள்ளாமல் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தான். அவனுடைய மனைவி மக்களும் அவனை மிகவும் வெறுத்தார்கள். பெரியண்ணன் பலவகையான தொல்லைகளை அடைந்து வருந்தியபின் மாண்டு

தொலைந்தான். அவன் இவ்வாறு வீண்செலவு செய்து அழிந்தொழிந்தானே என்று பலரும் வருந்தினார்கள்.

“ஆன முதலில் அதிகம் செலவானான்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.”

(உரை.) ஆன முதலில் செலவு அதிகம் ஆனான் - தனக்குக் கிடைத்த முதற் பொருளுக்குச் செலவு அதிகமானவன், மானம் அழிந்து - மானங்கெட்டு, மதிகெட்டு - அறிவு இழந்து, போன திசை எல்லார்க்கும் கள்ளன் ஆய் - தான் ஓடிப்போன திக்கினும் எல்லோருக்குங் கள்ளனைப்போல்ஆகி, ஏழ்பிறப்பும் தீயன் ஆய் - எழுவகைப் பிறப்புக்களினும் கொடியவனாகி, நல்லார்க்கும் பொல்லனாம் - தன்னிடத்திலே அன்புவைத்த பெண்கட்கும் பொல்லாதவனாவான். நாடு - இதனைத் தெரிந்துகொள்.

(கருத்து.) ஒவ்வொருவரும் தமது வருவாய்க்குத் தக்கவாறு செலவு செய்தல் வேண்டும். பெருஞ் செலவு செய்தால் பிறகு வருந்தி யழிய நேரிடும்.

## உசு. தவமுனிவர்

ஒரு காட்டிலே ஒரு முனிவர் தவஞ் செய்து கொண்டிருந்தார். அவர் மிகுந்த மனவுறுதி படைத்தவர். அளவற்ற பெருமையுடையவர். சீரிய நூல்களைக் கற்று மெய்யறிவு கைவரப் பெற்றவர். அவர் ஆண்டுக் கணக்காகத் தவஞ்செய்துகொணடிருப்பார். பல ஆண்டுகட்கு ஒருமுறை எப்பொழுதாவது தவத்தில் இருந்து எழுவார். அப்பொழுது அவருக்குப் பசியெழும். எங்காவது சென்று ஒருவேளை சாப்பிட்டுவிட்டு மீண்டும் வந்து தவத்தில் அமர்ந்துவிடுவார்.

ஓராண்டில் முனிவர் தவத்தைவிட்டு எழுந்தார். வயிற்றுப் பசி மிகுதியாக இருந்தது. உணவுக்காக வெளியே புறப்பட்டார். அப்பொழுது மழையில்லாமல் எங்கும் கொடிய பஞ்சம் ஏற்பட்டிருந்தது. அதனால் முனிவருக்குச் சாப்பாடு எங்கும் அகப்படவில்லை. பலவிடங்களிலுஞ் சுற்றிப்பார்த்தார்; ஓர் இடத்தில் ஒரு நாய் செத்துக்கிடந்தது. பசிக் கொடுமையால் கலங்கிய முனிவர் அந்த நாயின் ஊனை உண்ணத் துணிந்தார்.

முனிவருடைய தவப் பெருமை, குலப்பெருமை, ஞானப் பெருமை முதலிய எல்லாப் பெருமைகளும் வயிற்றுப் பசிக்குமுன் பறந்துபோய்விட்டன. முனிவருடைய செய்கையைப் பார்த்து இந்திரன் மழை பொழியச் செய்தான். பிறகு மழை பொழிந்து நாடு செழித்தது. வயிற்றுப் பசியின் கொடுமை இத்தகையதெனபதை உலகம் இம் முனிவரிடம் இருந்து நன்கு உணர்ந்து கொண்டது.

"மானங் குலங்கல்வி வண்மை அறிவுடைமை
தானந் தவம் உயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம்."

(உரை.) *பசிவந்திட - பசிநோய் வந்தால், மானம் - மானமும், குலம் - குடிப்பிறப்பும், கல்வி - கல்வியறிவும், வண்மை - ஈகையும், அறிவுடைமை அறிவுடைமையும், தானம் - தானமும், தவம் - தவமும், உயர்ச்சி - உயர்வும், தாளாண்மை - தொழின்முயற்சியும், தேனின்கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் - தேன்போலும் இனிமை பொருந்திய சொல்லையுடைய மங்கையர்மேல் காதல் கொள்ளுதலும் ஆகிய, பத்தும் பறந்துபோம் - பத்தும் விரைவாக நீங்கிப்போகும்.*

(கருத்து.) *வயிற்றுப் பசிக்குமுன் எல்லாப் பெருமைகளும் அழிந்து ஒழியும்.*

## உஎ. தெய்வச்செயல்

ஒரு வேடன் வேட்டையாடக் காட்டிற்குச் சென்ருன். ஓரிடத்தில் ஒரு மானைக கண்டான். அதனைப் பிடித்து விட்டால் இரண்டொரு நாளைக்கு உணவுக் கவலை இல்லாமல் இருக்கலாம் என்று முடிவு செய்தான். அம் மானைத் துரத்திக்கொண்டு மிகு விரைவாக ஓடினன். மானை எப்படியாவது பிடித்துவிட வேண்டுமென்னும் பரபரப்பினல் எதனையும் பாராமல் விழுந்தடித்து ஓடினன். அந்த மானே இன்றைக்கு நாம் இறநதொழிந்தோம் என்னும் அச்சத்தினல் பறந்தோடியது.

வழியில் ஓரிடத்தில் கிணறு ஒன்று புதர்களால் மூடப்பட்டிருநதது. விரைநதோடிய வேடன் அக் கிணற்றில் விழுந்தான். அக் கிணறு மிக ஆழமாக இருந்ததன்றி மிகுந்த சேருகவும் இருந்தது. வேடன் விழுந்த விரைவினல் அப்படியே சேற்றுககுள் அழுந்திவிட்டான். அவனல் தலையைக்கூட மேலே தூகக முடியவில்லை. சிறிது நேரத்தில் திக்கு முககாடி மாண்டுபோனன்.

மான் உயிர் பிழைத்து ஓடிப்போய்விட்டது. ஆகவே நாம் நினைககிற எல்லாம் நமது எண்ணப்படியே முடிவதில்லை. எல்லாம் கடவுளின் திருவுளப்படிதான் இவ்வுலகத்திலே நடைபெறுகிறது. இதனை உணர்ந்துகொள்ளாமல் ஒவ்வொருவரும் எவ்வளவோ மனககோட்டைகளைக் கட்டி இறுதியில் அவைகள் நிறைவேறப்பெருமல் மிகுந்த மன வருத்தத்திற்கும் துன்பத்திற்கும் உள்ளாகிருர்கள்.

“ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்.”

(உரை.) *ஒன்றை நினைக்கின் - ஒரு பொருளைப் பெற நினைத்தால், அது ஒழிந்திட்டு ஒன்றாகும் - அப் பொருள் கிடையாமல் வேறொரு பொருள் கிடைத்தாலும் கிடைக்கும், அன்றி அது வரினும் வந்து எய்தும் - அப்படி யல்லாமல் அப் பொருளே வந்து கிடைத்தாலும் கிடைக்கும், ஒன்றை நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும் - மேலும் ஒரு பொருளை நினையாதிருக்கு முன்னே அது தானே வந்து நின்றாலும் நிற்கும், எனையாளும் ஈசன் செயல் - இவைகளெல்லாம் என்னையாண்டருளும் கடவுளுடைய செய்கைகளாகும்.*

(கருத்து.) *இவ்வுலகத்தில் நிகழும் எல்லாச் செயல்களும் தெய்வத் திருவருளின்படியே நடைபெறுகின்றன.*

---

## உ அ. வீண் அவா

ஓர் ஊரிலே தம்பியப்பன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுக்கு பொருட் செல்வ மிகுதியாக இல்லை. தந்தை தேடிய பொருளாக ஐந்நூறு ரூபாக்கள்தாம் கிடைத்தன. அப்பொருளை முதற் பொருளாக வைத்துக்கொண்டு கண்ணாடிப் பொருள்கள் வாங்கி வாணிகஞ் செய்து முன்னுக்கு வருகிறது என்று முடிவு செய்தான். ஐந்நூறு ரூபாய்க்கும் கண்ணாடிப் பொருள்களை வாங்கி ஒரு பெரிய கூடையில் வைத்துக் கடைவைத்தான்.

கடையில் உட்கார்ந்த தம்பியப்பனுடைய மனம் வீணான அவாவிலும் எண்ணத்திலும் ஓடியது. "நான் இந்தப் பொருள்களை இரட்டிப்பான விலைக்கு விற்றால் ஆயிரம் ரூபா கிடைக்கும். பிறகு ஆயிரம் இரண்டாயிரமாகும். இப்படியே செல்வம் பெருகிக்கொண்டிருக்கும். நான் பெரிய வீடு வாசல்களைக் கட்டிக்கொண்டு மிகுந்த சிறப்புடன் வாழ்ந்துகொண்டிருப்பேன். எனது செல்வத்தைக் களவு செய்வதற்குக் கள்ளர்கள் இரவிலே வருவார்கள். அவர்களைத் தடியை எடுத்து நன்கு புடைப்பதோடு, 'ஓடுங்கள் ஓடுங்கள்' என்று சொல்லி இவ்வாறு காலாலும் பலமாக உதைப்பேன்," என்று எண்ணமிட்டுக்கொண்டே எதிரில் இருந்த கூடையை ஓங்கி உதைத்தான். கண்ணாடிப் பொருள்களெல்லாம் உடைந்து நாசமாயின.

தம்பியப்பன் வீண் எண்ணத்தில் இருந்து திடீரென்று விழித்துக்கொண்டான். தம்பியப்பனுடைய கதையைக் கேட்டவர்கள் விழுந்து விழுந்து நகைத்தார்கள். கைப்பொருளையும் இழந்துவிட்ட தம்பியப்பன் பிறகு பலவகையான தொல்லைகளை யடைந்து வருந்தித் திரிந்தான்.

"உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையுஞ் சஞ்சலமே தான்."

(உரை.) உண்பதுநாழி - சாப்பிடுவது ஒரு நாழி அரிசிச் சோறேயாகும், உடுப்பது நான்கு முழம் - அரையிலே கட்டுவது நான்குமுழ வேட்டியேயாகும், இவ்வாறாகவும், நினைந்து எண்ணுவன எண்பதுகோடி - நினைத்து எண்ணும் காரியங்களோ எண்பது கோடியாக இருக்கின்றன, ஆகையினால், கண்புதைந்த - மனக்கண் குருடாக இருக்கிற, மாந்தர் குடிவாழ்க்கை - மக்களின் குடிவாழ்க்கையானது, மண்ணின் கலம்போல - மட்கலம்போல, சாந்துணையும் - இறக்குமளவும், சஞ்சலமே - துன்பந்தருவதாகவே இருக்கிறது.

(கருத்து.) மக்கள் எண்ணும் வீண் எண்ணமானது அவர்கள் சாகும் வரையிலும் அவர்களுக்கு மிகுந்த துன்பத்தை அளிப்பதாக இருக்கிறது.

---

## உகூ. சடையப்ப முதலியார்

முன்னாளில் சடையப்ப முதலியார் என்னும் பெயருடைய செல்வர் ஒருவர் திருவெண்ணெய் நல்லூரிலே வாழ்ந்திருந்தார். அவருக்குச் செல்வம் மிகுதியாக இருந்தது.

செல்வத்தைப் பெற்றவர்கள் செய்யவேண்டியது நல்லறம். இதனை நன்குணர்ந்த சடையப்ப முதலியார் தாமும் அறஞ்செய்தலை மேற்கொண்டார். ஏழை எளியவர்கள் வந்தால் அவர்கட்கு எந்த வேளையிலும் உணவிட்டார். பொருளை விரும்பியவர்கட்குப் பொருளுங் கொடுத்தார். அதனால் அவருடைய புகழ் எங்கும் பரவியது. எப்பொழுதும் பலபேர் முதலியார் வீட்டில் கூட்டமாக இருந்து கொண்டே இருந்தனர். பழையவர்கள் பத்துப்பேர் புறப்பட்டுச் சென்றால் புதியவர்கள் இருபதுபேர் வந்து கூடுவார்கள். எவ்வளவுபேர் வந்தாலும் முதலியார் சிறிதும் தயங்காமல் அவர்கள் விரும்பியவைகளைக் கொடுத்துப் பெரும் புகழ் பெற்றார்.

கம்பராமாயணத்தைப் பாடிய கம்பநாட்டாழ்வாரைப் போற்றி ஆதரித்தவரும் இவர்தாம். உலகத்தார் அனைவரும் இவருக்கு உறவினராகவே அமைந்திருந்தார்கள். சடையப்ப முதலியார் இத்தகைய பரந்த மனப்பான்மையுடையவராக அமைந்திருந்தபடியினால்தான் கம்பராமாயணம் என்னும் அரிய நூல் தோன்றுவதற்கு ஏதுவாயிற்று. ஆகவே ஒவ்வொருவரும் மற்றவர்கட்குத் தக்கவாறு உதவிசெய்து அவர்களை உறவினராகக் கொள்ளுதல் வேண்டும்.

" மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதம்
கற்று தரல்போல் கரவா தளிப்பரேல்
உற்றார் உலகத்தவர்."

(உரை.) மரம் பழுத்தால் - மரம் பழுத்திருந்தால், வாஎன்று - பழத்தைத தின்பதற்கு வருவாயாக என்று, வௌவாலைக்கூவி இரந்து அழைப்பார் - வௌவாலைக்கூவி வேண்டி அழைப்பவர், அங்கு யாவரும் இல்லை - அம் மரத்தினிடம் ஒருவரும் இல்லை, கன்று ஆ அமுதம் சுரந்து தரல்போல் - கன்றையுடைய ஆவானது பாலைச் சுரந்து கொடுத்தலைப்போல, கரவாது அளிப்பரேல் - ஒளிக்காமற் கொடுப்பாராயின், உலகத்தவர் உற்றார் - உலகத்தார் அவ் வௌவாலைப் போலத் தாமே வந்து உறவினராவர்.

(கருத்து.) பிறருக்கு உதவி செய்பவர்களைக் கண்டால் பிறர் தாமே வநது அவர்களைச் சூழ்ந்திருப்பர்.

## ௯0. அரசனுக்கு அறிவுரை

ஓர் அரசனை அவனுடைய பகையரசன் எதிர்த்துப் போராடினான். இருவருக்கும் போர் கடுமையாக நடைபெற்றது. முதலரசனுடைய பெயர் பூங்குன்றன். அவனுக்கு எதிரியாக வந்து எதிர்த்துப் போராடிய பகையரசனுடைய பெயர் நெடுந்தத்தன். நெடுந்தத்தனுடைய படை பெரிதாகவும் போர்த்திறம் உடையதாகவும் இருந்தது. ஆகவே பூங்குன்றன் எளிதில் தோல்வியை அடைந்தான். நெடுந்தத்தன் பூங்குன்றனை நெடுந்தொலை விரட்டியடித்துவிட்டு அவனுடைய நாட்டையும் கைப்பற்றிக்கொண்டான்.

பூங்குன்றனுக்கு யாது செய்வதென்று தெரியவில்லை. பல காடுகளிலும் மலைகளிலும் சுற்றித் திரிந்தான். ஒருநாள் ஒரு முனிவரைக் கண்டான். அம்முனிவரிடம் தனது குறைகளை யெல்லாஞ் சொல்லி வருந்தினான். அம்முனிவர் மெய்யறிவு கைவரப் பெற்றவர். ஒருவரையும் ஒரு பொருட்படுத்தமாட்டார். ஒருவரைப் பகையாகவும் ஒருவரை நட்பாகவும் எண்ண மாட்டார்.

அம்முனிவர் பூங்குன்றனைப் பார்த்து, "அன்பனே! ஒவ்வொருவருந் தாந்தாஞ் செய்த வினையைத் தாமே நுகர்ந்துதான் தீரவேண்டும். நான்முகனுடைய எழுத்துத் தவறாது. நெடுந்தத்தன் உன்னை வருத்தி நாட்டைக் கைப்பற்றிக்கொண்டான் என்று அவனிடம் பகை பாராட்டாதே நாம நம்முடைய ஊழ்வினையை வெறுக்க வேண்டுமே தவிர.

ஊழ்வினையின் பலனை ஊட்டுவித்தவர்களை வெறுத்தல் கூடாது. உலகத்தார் எல்லாரும் ஒன்ருகச் சேர்ந்து ஒருவனுடைய ஊழ்வினையை விரட்டினுலும் அது தன் பலனைக் கொடுக்காமல் போகமாட்டாது," என்று அறிவுரைகள் கூறினர்.

"தாந்தாமுன் செய்தவினை தாமே அநுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒறுத்தாரை என்செயலாம் ஊரெல்லாம் ஒன்ரு
வெறுத்தாலும் போமோ விதி."

(உரை.) வேந்தே - அரசனே!, தாம்தாம் முன் செய்தவினை - தாம்தாம் முற்பிறப்பிலே செய்த நல்வினை தீவினைகளை, பூந்தாமரையோன் பொறி வழியே - தாமரை மலரில் இருக்கின்ற நான்முகன் விதித்தபடியே, தாமே அநுபவிப்பார் - தாமே நுகர்வார்கள், ஒறுத்தாரை என் செயலாம் - தீவினையினுலே தூண்டப்பட்டுத் தீங்கு செய்தவரை நாம் யாது செய்யலாம், ஊர் எல்லாம் ஒன்ரு வெறுத்தாலும் விதி போமோ - ஊரிலுள்ளார் எல்லாருந் திரண்டு வெறுத்தாலும் ஊழ்வினை போகுமா?

(கருத்து.) முற்பிறவிகளில் செய்த நல்வினை தீவினைகளின் பலனை ஒவ்வொருவரும் நுகர்ந்துதான் தீரவேண்டும்.

---

## ௩௧. போலிப்புலவனும் வள்ளலும்

ஓர் ஊரிலே போலிப் புலவன் ஒருவன் இருந்தான். அவனுடைய பெயர் திருமேனியழகன். திருமேனியழகன் தன்னுடைய பெயருக்கேற்பப் பார்வைக்கு அழகாய் வெளிப்பகட்டாய் இருந்தானேயொழியக் கல்வியறிவு அவனுக்குப் போதிய அளவு இல்லை. ஏதோ சில நூல்களை மேலெழுந்தபடி தானுகப் படித்ததுதான் இந்த அளவிலேயே அவன் தன்னைப் பெரும்புலவனுக எண்ணித் தருக்கித் திரிந்தான். மனம்போனபடி செய்யுட்களை இயற்றவுந் தொடங்கினுன். கல்வியறிவற்ற செல்வர்கள்மீது கன்னுப்பின்னு என்று பாட்டுக்கள் எழுதிப் பொருள் பெற்று வாழ்வதே அவனுடைய வாழ்க்கையாக முடிந்தது. இவனுடைய பாட்டைக் கேட்டவர்களெல்லோரும் அறிவற்றவர்களாதலினுல் ஏதேனும் சிறிது பொருள் கொடுத்து அனுப்புவார்கள்.

திருமேனியழகன் ஒருநாள் ஒரு பெருஞ் செல்வன்மீது சில செய்யுட்கள் இயற்றிக்கொண்டு போனுன். அச்செல்வன் மற்றைச் செல்வர்களைப் போல் பணமூட்டையாகமட்டும் இருக்கவில்லை. அறிவு மூட்டையாகவும் இருந்தான் பல நூல்களைப் படித்து உணர்ந்திருந்தான். பாடல்கட்குத் தானே பொருள் கண்டுணர்ந்துகொள்வான். தப்புத் தவறுகள் இருக்குமானுல் அதையுங் கண்டு பிடித்து விடுவான்.

திருமேனியழகன் தன்னுடைய பாட்டை அச் செல்வனிடங் கொண்டுபோய்ப் படித்தான். உடனே

அச் செல்வனுக்கு மிகுந்த சினம் உண்டாகிவிட்டது. "நன்றாகப் படிக்காத நீ ஏன் பாட்டியற்றத் தொடங்கினாய்? சொல்ல வேண்டிய செய்திகளை உரைநடையாகச் சொல்லித் தொலைக்கக் கூடாதா? தப்புந் தவறுமாகப் பாடுவதைவிடப் பாடாமல் இருப்பது நல்லது. உயர் குலத்தில் பிறந்தலைவிடத் தாழ் குலத்தில் பிறந்து நல்லொழுக்கம் உடையவனாக இருப்பது நல்லது; ஆண்மையற்றவனாக இருப்பதைவிட நோயாளியாக இருப்பது நல்லது." என்று இப்படிப் பலவாறு அறிவுரைகூறித் திருமேனியழகனுக்குப் பாடஞ் சொல்லத் தொடங்கிவிட்டான். திருமேனியழகன் செல்வனிடமிருந்து பரிசைக்கூட எதிர்பார்க்கவில்லை. அதை விட்டாற் போதுமென்று ஓடிவிட்டான்.

"இழுக்குடைய பாட்டிற்கு இசைநன்று சாலும்
ஒழுக்கம் உயர்குலத்தின் நன்று—வழுக்குடைய
வீரத்தின் நன்று விடாநோய் பழிக்கஞ்சாத்
தாரத்தின் நன்று தனி."

(உரை.) இழுக்குடைய பாட்டிற்கு இசை நன்று - இலக்கண வழுக்களையுடைய செய்யுளினும் அஃதில்லாத பேச்சு நல்லது, உயர்குலத்தின் சாலும் ஒழுக்கம் நன்று - உயர்ந்த குலத்தில் பிறத்தலைப் பார்க்கினும் ஒழுக்கம் உடையவனாக இருத்தல் நல்லது, வழுக்கு உடைய வீரத்தின் விடா நோய் நன்று - தவறுதலையுடைய வீரத்தினும் தீராத நோய் நல்லது, பழிக்கு அஞ்சாத் தாரத்தின் தனி நன்று - பழிச்சொல்லுக்கு அஞ்சாத மனைவியோடு கூடி வாழ்தலைப் பார்க்கினும் தனியே இருத்தல் நல்லது.

(கருத்து.) ஒவ்வொரு பொருளுந் தக்கவாறு அமையாவிட்டால் எத்தகைய பயனும் உண்டாகமாட்டாது.

## ௬௨. துறவியும் செல்வனும்

ஓர் உண்மைத் துறவி ஒருநாள் ஓர் ஊர் வழியாகச் சென்றுகொண்டிருந்தார். அவருடைய பெயர், தெய்வநாயகம். ஓர் இடத்தில் ஒரு பெரிய வீடு இருந்தது அவ் வீட்டைப் பார்த்த அளவிலேயே துறவியார் அவ் வீட்டுக்காரன் பெருஞ் செல்வனாக இருக்க வேண்டும் என்று எண்ணினார். செல்வத்திற்குத் தக்கவாறு குணநலம் அமைந்திருக்கிறதா பார்த்துவிட்டுப் போவோம் என்று முடிவுசெய்து அவ் வீட்டிற்குச் சென்றார். வீட்டுக்காரன் வெளியில்தான் உட்கார்ந்திருந்தான். அவனுடைய பெயர், மருதநாயகம். தெய்வநாயகம் மருதநாயகத்தைக் கண்டார். "அப்பா! நெடுந்தொலைவழி நடந்து வருகிறேன். சிறிது உணவளிப்பாயா?" என்று கேட்டார்.

மருதநாயகம் தனக்குள்ள இயற்கைப்படி உரையாடத் தொடங்கினான். "அடிகாள்! தங்கட்கு வணக்கம் புரிகிறேன். சமையல்காரன் ஊருக்குப்போயிருக்கிறான். சாப்பாட்டிற்கு இங்குச் சரிப்படாது," என்றான். துறவியார் விடவில்லை. "போனாற்போகட்டும்; சாப்பாட்டுச் செலவுக்குக் காசு கொடுப்பாயானால் உணவுக் கடையில் சாப்பிட்டுவிட்டுப் போகிறேன்," என்றார். மருதநாயகம், 'அடிகாள்! அப்படியே செய்யலாம். காசு கொடுப்பதற்குக் கணக்கப்பிள்ளை ஊரிலில்லை. அவனும் ஊருக்குப் போய்விட்டான்," என்று கூறினான்.

தெய்வநாயகத் துறவியார் நகைத்து, "அன்பனே! உன்னுடைய குண நலத்தைப் பார்ப்பதற்

காகவே கேட்டேன். நீ எனக்கு ஒன்றுங் கொடுக்க வேண்டாம். நான் பசியா வரம் பெற்றவன். செல்வத்தைப் பெற்றால் நல்வழியிலே செலவு செய்தல் வேண்டும். செல்வமானது ஆற்றுநீர்ப் பெருக்கால் உண்டாக்கப்படுகிற மேடு பள்ளங்களைப்போல் மாறி மாறி உண்டாகி மறையக்கூடியது. அறம் புரிவாயானால் அஃது உனக்கு மறுமைத் துணையாகும். ஆகவே, ஐயமேற்போர்க்குச் சோறுபோடு. தண்ணீர் கொடு; நல்லறத்தைச் செய்தால் உள்ளத்தில் மெய்யறிவுத் தன்மை உண்டாகும்," என்று பலவாறு அறிவுரை கூறிவிட்டுச் சென்றார்.

"ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாருந் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து."

(உரை.) மாநிலத்தீர் - பெரிய நிலவுலகில் உள்ளவர்களே!, ஆறு இடும் மேடு மடுவும் போல் - ஆற்று வெள்ளத்தினால் உண்டாக்கப்படுகிற மேட்டையும் பள்ளத்தையும் போல, செல்வம் ஏறிடும் மாறிடும் - செல்வம் வளர்வதுந் தேய்வதுமாக இருக்கும், ஆகையால், சோறு இடும் - இரப்பவர்க்கு உணவு அளியுங்கள், தண்ணீரும் வாரும் - குடிப்பதற்கு நல்ல தண்ணீருங் கொடுங்கள், தருமமே சார்பு ஆக - இத் தருமமே துணையாக, உள்நீர்மை உயர்ந்து வீறும் - உள்ளத்திலே தூய தன்மை சிறந்து விளங்கும்.

(கருத்து.) செல்வம் அழியுந் தன்மையுடையது. செல்வம் பெற்றவர்கள் அறத்தைச் செய்தல் வேண்டும்.

## ௩௩. அடங்காப்பிடாரிகளும் ஆசிரியர்களும்

ஓர் உயர்நிலைப் பள்ளியின் வகுப்பு ஒன்றில் சில அடங்காப்பிடாரி மாணவர்கள் இருந்தனர். அந்த் மாணவர்கள் தலைமையாசிரியருக்கோ உதவியாசிரியர்களுககோ சிறிதுங் கட்டுப்படுவதிலர். ஆசிரியர்கள் சொல்லுவதற்கு நேர்மாருகவே எதையுஞ் செய்வர். சில ஆசிரியர்கள் தமது அதிகாரத்தைப் பயன்படுத்தி அவர்களை அடக்க முயன்றனர் முடியவில்லை. இவ்வாருகப் புதிய ஆசிரியர் ஒருவர் அப் பள்ளிக்கு வந்தார். தாம் வேலைக்கு வந்த முதல்நாளே அடங்காப்பிடாரி மாணவர்களை நன்ருக உணர்ந்துகொண்டார்.

அந்த ஆசிரியர் துடுக்குக்கார மாணவர்களை அடக்குவதற்குச் சிறிதும் முயலவில்லை. அவர்கள் தம்மிடம் எவ்வாறு நடக்க வேண்டும் என்று ஆசிரியர் விரும்பினுரோ அவ்வாறு தாம் அந்த மாணவர்களிடத்தில் நடந்துகொண்டார். பிற ஆசிரியர்களைப்போல் அம் மாணவர்களிடம் கடிந்தும் அதிகாரத்தொனியோடும் பேசவில்லை. இனிமையாகவும் பணிவாகவும் அன்புடன் பேசிப் பழகினுர். அம் மாணவர்களால் அவரிடம் துள்ள முடியவில்லை. "ஆசிரியரோ நயமாகவும் பணிவாகவும் இருக்கிருர்; நாம் எப்படித் துள்ளுகிறது," என்று எண்ணிப் பணிந்து போயினர். புதிய ஆசிரியர் வகுப்பு நடத்தும்போது வந்து பார்த்தார் தலைமையாசிரியர். அடங்காப்பிடாரி மாணவர்கள் பெட்டிப் பாம்புபோல் அடங்கிப் பாடங் கேட்டுக்கொண்டிருந்தலைக் கண்டு வியந்தார்.

"வெட்டனவை மெத்தனவை வெல்லாவாம் வேழத்தில்
பட்டுருவுங் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்."

(உரை.) *வேழத்தில் பட்டு உருவும் கோல் பஞ்சில் பாயாது - வலிய யானையின்மேல் பட்டு உருவுகிற அம்பானது மெல்லிய பஞ்சின் மேலே பாயாது, நெடு இருப்புப் பாரைக்கு நெக்குவிடாப் பாறை - நீண்ட இருப்புப் பாரைக்குப் பிளவாத கருங்கற் பாறையானது, பசுமரத்தின் வேருக்கு நெக்குவிடும் - பச்சை மரத்தின் வேருக்குப் பிளந்து போகும், அவ்வாறே, வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் - வன்சொற்கள் இன்சொற்களை வெல்ல மாட்டாவாம், (இன்சொற்களே வெல்லும் என்க.)*

(கருத்து.) *இனிய மொழிகள்தாம் பலனளிக்குமே யன்றிக் கடுஞ் சொற்கள் யாதும் பயனளிக்கமாட்டா.*

---

## ௩௪. செல்வனும் புலவனும்

ஒரு வீட்டிலே திருமணம் நடைபெற்றது. அழைப்புப் பெற்றிருந்தவர்கள் யாவரும் அத் திருமணத்திற்குச் சென்றனர். வீட்டிற்குரியவன் எல்லோரையும் வரவேற்றுப் போற்றிக்கொண்டிருந்தான்.

நன்கு கல்வி கற்றுத் தேறிய புலவர் ஒருவர் தாமும் அழைப்புப் பெற்றிருந்தபடியால் திருமணத்திற்குச் சென்றார். இவரை யாரும் 'வருக' என்று கூடச் சொல்லவில்லை. பேசாமல் ஒரு மூலையிற் போய் உட்கார்ந்தார். சிறிது நேரம் சென்றது. செல்வன் ஒருவன் வந்தான். அவனைக் கண்டதும் வீட்டுகுரியவன் விழுந்தடித்து ஓடினான். "வாருங்கள் வாருங்கள், தங்களுடைய வருகையைத்தான் எல்லோரும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தோம்," என்று கூறி வரவேற்றதுடன் சந்தனம் பன்னீர் முதலியவைகளைப் பூசி வெற்றிலை பாககுக கொடுத்துப் பலவாறு போற்றினான். மற்றும் பலவாறு இது வேண்டுமா அது வேண்டுமா என்று கேட்டுக்கோண்டும், கேட்டவைகளைக் கொடுத்துக் கொண்டும் இருந்தான்.

இதனைப் பார்த்த புலவர், "கல்வியுடைமை பொருள் உடைமை என்று இரண்டு செல்வமும் செல்வம் எனப்படும்," என்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். அவ்வாறாகவும், நம்மைத் திரும்பிப் பார்க்க ஒருவரையுங் காணோமே என்று எண்ணமிட்டுக் கொண்டு மேலுஞ் சிறிது நேரம் இருந்துவிட்டு அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டுச் சென்றார். உலகத்

தாரும் உற்றூர் உறவினரும் மற்றவர்களும் பொருளுடையவனைத்தான் போற்றுவார்களே யன்றிப் பொருள் அற்ற வறியவனை யாருந் திரும்பிப் பார்க்க மாட்டார்கள்.

"கல்லானே யானாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்."

(உரை.) *கல்லானே ஆனாலும் கைப்பொருள் ஒன்று உண்டாயின் - ஒருவன் நூல்களைப் படியாதவனே யானாலும் அவன் கையில் பொருள்மட்டும் இருக்குமாயின், எல்லாரும் சென்று எதிர்கொள்வர் - அவனை யாவரும் போய் எதிர்கொண்டு போற்றுவார்கள், இல்லானை இல்லாளும் வேண்டாள் - (பொருளற்றவன் படித்தவனாக இருந்தாலும்) அவனை அவனுடைய மனைவியும் விரும்ப மாட்டாள், ஈன்று எடுத்த தாய் வேண்டாள் - அவனைப் பெற்று வளர்த்த தாயும் விரும்பமாட்டாள், அவன் வாயில் சொல் செல்லாது - அவன் வாயிற் பிறக்குஞ் சொல்லானது பயன்படமாட்டாது.*

(கருத்து.) *அறிவற்றவனாக இருந்தாலும் பொருளுடையவனைத்தான் இவ்வுலகத்தினர் போற்றுவர்.*

## ௩௫. இரண்டு செல்வர்கள்

ஓர் ஊரிலே இரண்டு செல்வர்கள் இருந்தார்கள். ஒருவன் பெயர் வானமாமலை. மற்றவன் பெயர் மலையப்பன்; வானமாமலை நுண்ணறிவுடையவன். எதையுங் குறிப்பறிந்து செய்வான். மலையப்பனோ நுண்ணறிவுடையவன் அல்லன். யாராவது ஒன்றைக் குறிப்பாகச் சொன்னாலும் உணர்ந்துகொள்ளமாட்டான். வெளிப்படையாகச் சொன்னாலும் அறிந்து கொள்ள மாட்டான்.

ஒரு நாள் ஒரு பெரியவர் அவ்வூருக்கு வந்தார். அவர் ஒரு கோயில் திருப்பணியின் பொருட்டுப் பொருள் திரட்டுதற்கு வந்தார். அவர் யாரிடமும் வெளிப்படையாகக் கேட்பதில்லை. குறிப்பாகவே கேட்பார். கொடையாளர்களும் குறிப்பறிந்தீதலே கொடை என்பதற்கு ஏற்ப அப்பெரியவருடைய குறிப்பை யறிந்து பொருள் வழங்கினார்கள்.

வானமாமலை அப்பெரியவர் அவ்வூருக்கு வந்துள்ளதன் காரணத்தைக குறிப்பால் உணர்ந்து பெரும்பொருள் வழங்கினான். அவனுடைய செயல் பெரியவருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. மலையப்பன் வானமாமலையைவிடப் பெருஞ் செல்வன்! அவன் பெரியவருடைய குறிப்பறிந்துநடந்து கொள்ளவில்லை. பிறகு பெரியவர் அவனைக் கண்டு தாம் ஒரு பெரிய திருக்கோயில் திருப்பணியின் பொருட்டுப் பொருள் திரட்டுவதாகவும், வானமாமலை கேளாமலே பெரும் பொருள் வழங்கியிருப்பதாகவும் மலையப்பனும்

பெரும் பொருள் வழங்க வேண்டுமென்றுந் தெரியப் படுத்தினர்.

இவ்வாறு கேட்டுங்கூட மலையப்பன் யாதுங் கொடுக்கவில்லை. இவன் அறிவிலாப் பேதை. இவனிடம் பொருளைப் பெற்றாலுங்கூட அப்பொருள் பயனளிக்காது என்று எண்ணிக்கொண்டே பெரியவர் அவ்வூரைவிட்டுச் சென்றார் அப் பெரியவர் மனவருத்தத்தோடு சென்றபடியினால் நாளடைவில் மலையப்பனுடைய செல்வவளம் குன்றத்தொடங்கிவிட்டது.

"பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்கு
உரைத்தாலுந் தோன்றா துணர்வு."

(உரை.) பூவாதே காய்க்கும் மரமும் உள - பூவாமலே காய்க்கின்ற மரங்களும் இருக்கின்றன; அதைப்போல, மக்களுளும் ஏவாதே நின்று தாம் உணர்வார் உளர் - மனிதர்களுள்ளும் ஏவாமலே இருந்து தாமே அறிந்து செய வல்லவரும் உண்டு, தூவா விரைத்தாலும் நன்று ஆகா வித்து என - தூவி விரைத்தாலும் முளைத்துப் பயன்படாத விதைபோல, பேதைக்கு உரைத்தாலும் உணர்வு தோன்றாது - அறிவற்றவனுக்கு எடுத்து விளக்கச் சொன்னாலும் அவனிடத்தில் அறிவு உண்டாகாது.

(கருத்து.) இயற்கையாகவே அறிவற்றிருப்பவனுக்கு அறிவுரைகளைக் கூறினாலும் பலனுண்டாகமாட்டாது.

---

## ௬௬. பிறன்மனை விரும்பிய பேதை

பாண்டவர்கள் இவ்வுலகில் வாழ்ந்திருந்த காலத்திலே கீசகன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் அறிவற்றவன்; முரடன். அவனுக்கு யாராவது அறிவுரை கூறினாலும் தெரியாது. அவன் பாண்டவர்களுடைய மனைவியாகிய திரௌபதியைக கண்டு அவள்மீது கடுமையான காதல்கொண்டான். பலவாறு முயற்சி செய்தான்.

இச் செய்தி வீமனுக்குத் தெரிந்தது. அவன் ஒருநாள் இரவு மிகு சூழ்ச்சியாகக் கீசகனை அழைத்து அவனோடு மற்போரிட்டான். அடிமேல் அடி அடித்தான். நன்ருகக் குத்திக் குமைத்தான். வீமன் பெரிய முரடனாகையால் அவனுககு ஒப்பாக நின்று போரிடக கீசகனல் முடியவில்லை. வெகு விரைவாக மாண்டு தொலைந்து முடிந்து போனன். அந்தக் கீசகன் பிறனுடைய மனைவியை விரும்பியபடியால் இவ்வாறு வீணக மாண்டு தொலைந்தானே என்று பலரும் வருந்தினர்.

"நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்தில்
கொண்ட கருவளிக்குங் கொள்கைபோல்—ஒண்டொடீ
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலம் அயல்
மாதர்மேல் வைப்பார் மனம்."

(உரை.) ஒண்தொடீ - ஒள்ளிய வளையலை அணிந்தவளே!, நண்டு சிப்பி வேய் கதலி - நண்டும் சிப்பியும் மூங்கிலும் வாழையும், நாசம் உறும் காலத்தில் - தாம் அழிவை அடையுங் காலத்திலே,

கொண்ட கரு அளிக்கும் கொள்கைபோல் - முறையே, குஞ்சு முத்து, அரிசி, காய்க்குலை ஆகியவைகளை வெளிப்படுத்துகிற தன்மையைப்போல மனிதர்கள், போதம் தனம் கல்வி பொன்ற வரும் காலம் - ஞானமும் செல்வமும் வித்தையும் அழிய வருங் காலத்திலே, அயல் மாதர்மேல் மனம் வைப்பார் - பிற மகளிர் மேல் மனம் வைப்பார்கள்.

(கருத்து.) அழிவு நேரக் கூடிய காலத்திலேதான், பிறன் மனையை விரும்பும் தீய எண்ணமும் உண்டாகும்.

---

## ௩௭. ஔவையார் கூறிய முடிபு

ஒரு நாள் ஔவையார் ஓர் ஊர் வழியாகச் சென்றுகொண்டிருந்தார். ஓரிடத்தில் பலர் கூடிக் கடுமையாக ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தார்கள். அவர்கள் எதைக் குறித்துச் சொற்போரிடுகிறார்கள் என்று ஔவையார் கருத்துடன் கேட்டார்.

அவர்களில் ஒருவர் சொன்னார்: "திருக்குறள் தான் நூல்களிலே சிறந்தது. திருக்குறளுக்கு ஒப்பாக வேறொரு நூலும் இல்லை," என்று. இதனைக் கேட்டு வேறொருவர், "அப்படிச் சொல்லாதீர்கள். இப்பொழுதுள்ள நூல்களிலே சிறந்தது உபநிடதங்கள் தாம்," என்றார். இன்னொருவர், "அப்படியன்று; மறை நூலின் கருத்துக்களைக் கொண்டு விளங்குகிற மூவர் தேவாரமுந்தான் மிக உயர்ந்தவை," என்றார்.

மற்றொருவர், "உங்களுடைய கருத்துக்கள் சிறந்தனவாக எனக்குத் தெரியவில்லை. திருவாதவூரடிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகமும் திருக்கோவையாரும் இருக்கும்பொழுது அவைகளை மறந்துவிட்டு இப்படிப் பேசலாமா?" என்றார். இன்னொருவரோ, "நீங்கள் எவ்வாறு வேண்டுமானாலுஞ் சொல்லிக்கொள்ளுங்கள். நீங்கள் சொல்வதை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். திருமூலநாயனார் அருளிச் செய்த திருமந்திரத்தைத்தான் நான் பெரிதும் பாராட்டிப் போற்றுகிறேன்," என்றார்.

இவ்வுரையாடலைக் கேட்ட ஔவையார் அவர்களைப் பார்த்து, "நீங்கள் வீணாகச் சொற்போரிட

வேண்டாம். நீங்கள் குறிப்பிட்ட திருக்குறள், உபநிடதங்கள், மூவர் தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருமந்திரம் ஆகியவைகளெல்லாம் ஒரே தன்மையான பெருமையுடையவைகள் தாம்," என்று முடிவாகக் கூறினார். சொற்போரிட்டவர்கள் ஔவையாருடைய அறிவுத் திறமையைக் கண்டு பெரிதும் வியப்படைந்து போற்றினார்கள்.

"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்."

(உரை.) தேவர் குறளும் - திருவள்ளுவநாயனாருடைய திருக்குறளும், திருநான் மறைமுடிவும் - சிறப்புப் பொருந்திய நான் மறைகளின் முடிவாகிய உபநிடதங்களும், மூவர் தமிழும் - மூவர் தேவாரமும், முனி மொழியும் கோவை திருவாசகமும் - மாணிக்க வாசகர் அருளிய திருவாசகம் திருக்கோவையார் ஆகியவைகளும், திருமூலர் சொல்லும் - திருமந்திரமும், ஒரு வாசகம் என்று உணர் - ஒரு பொருளையே குறிப்பன என்று உணர்ந்து கொள்வாயாக.

(கருத்து.) திருக்குறள், திருநான்மறை, தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருமந்திரம் ஆகியவைகள் ஒரே தன்மையான சிறப்புடையவை.



கழக வெளியீடு : ௮௫௪

# நன்னெறி விளக்கக் கதைகள்



ஆசிரியர் :

திரு. க. இனியன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
திருநெல்வேலி : : சென்னை-1

# பதிப்புரை

செந்தமிழ்மொழிக்கண் திருக்குறள் பொது நூல்! இது நம் நாட்டகத்தும், வீட்டகத்தும் களிநடம் புரிதல் வேண்டும் அன்றே நம் தமிழகம் நன்றே மிளிரும் நாளாகும்

இதன் சாயல்களே பிற்காலத்துத் தோன்றிய அற நூல்கள். அவற்றுள் ஒன்றே நன்னெறி என்னும் அறநூல். இது எளிய இனிய நன்னடையில் இயன்றது. ஸ்ரீ சிவப் பிரகாச சுவாமிகளால் இயற்றியருளிச செய்யப் பெற்றது.

'இளமையிற் கல்வி சிலையிலெழுத்து' என்ப. ஆகலான், நம் இளஞ்சிறார்க்கு, விளையாடும் பருவ முளைப்பருவத்தினர்க்கு இவைகளைக் கதைகள் வாயிலாக விளக்குதல் சிறந்தது, நலந்தருவது எனக் கருதி ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, வெற்றிவேற்கை, நல்வழி, நன்னெறி போன்ற ஏனைய அறநூல்களுக்கும் திரு. க. இராமன் அவர்களைக்கொண்டு எழுதுவித்து நூலுருவாக்கி வெளியிட்டுள்ளோம்.

இது அவற்றுள் நன்னெறி விளக்கக் கதைகளாகும். இதனையும ஏனைய விளக்கக் கதைநூல்களையும் பன்னெறித் தாடுஞ் சிறார் கைகளில் முந்திருப்பச் செய்து கற்கச்செய்வது, நம் தமிழகப் பெருமக்கள் கடன். இதனை வாங்கிக் கற்குமாறு செய்து எம்மையும் ஊக்குவிப்பார்களென நம்புகின்றேம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

பக்கம்

# நன்னெறி விளக்கக் கதைகள்



## க. கயவனும் கவிராயரும்

முன்னாளிலே மதுரை மாநகரில் மூலனூர் என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார். அவர் மனிதர்களிடத்திலே மட்டும் அல்லாமல் விலங்குகள், பறவைகள் முதலியவைகளிடத்திலேயும் மிகுந்த அருள் உடையவர். எவரேனும் வறுமையால் வருந்தக் கண்டால் பிச்சையெடுத்தாயினும் வருந்துபவர்கட்கு உதவி செய்வார். ஆனால், அவர் பிச்சை யெடுக்கவேண்டிய நிலையில் இல்லை. கல்விச் செல்வத்தோடு, பொருட் செல்வத்தையும் பெற்று ஏழை எளியவர்கட்கு உதவிசெய்து வந்தார்.

அந்த மதுரையிலே பில்லப்பன் என்று பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் அறிவற்ற கீழ்மகன். முன்சினமும் முருட்டுத்தனமும் உடையவன். எத்தகைய நல்லவர்கட்கும் பொல்லாங்கு செய்து விடுவான். அவனைக்கண்டோர் சிங்கம் புலி முதலியவைகளைக் கண்டாற்போல அஞ்சி விலகிவிடுவார்கள்.

பில்லப்பன் செய்த தீவினையால் அவனுக்குப் பெருநோய் ஒன்று உண்டாயிற்று. அவனுடைய மனைவி மக்கள் கூட அவனைக் கவனிக்காமல் ஒதுங்கிப் போய் விட்டார்கள். பில்லப்பனை எட்டிப்பார்ப்பார் எவரும் இலர். அவன் வயிற்றுப் பசியால்வாடி எழுந்

திருக்கவும் முடியாமல் கதறிக்கொண்டு கிடந்தான். அவனைத் திரும்பிப் பார்ப்பார் இல்லாமற் போகவே அவன் நிலைமை மிகவும் மோசமாகி விட்டது.

மூலனார் பில்லப்பன் நிலைமையை அறிந்தார். உணவு முதலியவைகளோடு விரைந்து அவனிடஞ் சென்றார். போய்க்கொண்டிருந்த அவனுடைய உயிரைக் காப்பாற்றினார். அடுத்தடுத்துப் பல நாளுஞ் சென்று ஆகவேண்டியவைகளைச் செய்தார். பில்லப்பனோ மூலனாருக்கு ஓர் உபசாரமொழி கூடக் கூறவும் இல்லை. தன்னுடைய நன்றியறிதலைத் தெரியப்படுத்திக் கொள்ளவும் இல்லை. மூலனார் அவனுடைய போற்றுதலை எதிர்பார்க்கவும் இல்லை. மூலனாருடைய செயல் எல்லோருக்கும் மிகுந்த வியப்பை உண்டாக்கிற்று.

"என்று முகமன் இயம்பா தவர்கண்ணுஞ்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர்—துன்றுசுவை
பூவிற் பொலிகுழலாய்! பூங்கை புகழவோ
நாவிற் குதவும் நயந்து."

(உரை) பூவின்பொலி குழலாய் - பூவினால் விளங்குகின்ற கூந்தலையுடையவளே!, பூங்கை - அழகிய கையானது, புகழவோ - தன்னைப் புகழ்தலை நினைத்தோ, நாவிற்கு - நாவினுக்கு, துன்று சுவை - மிகுந்த சுவையுள்ள உணவினை, நயந்து உதவும் - விரும்பிக் கொடுக்கும்; புகழ்தற்கன்று அதைப்போல, தீது அற்றோர் - குற்றமற்றவராகிய பெரியோர், என்றும் முகமன் இயம்பாதவர் கண்ணும் - எந் நாளிலும் தம்மிடம் இனிய மொழிகளைச் சொல்லாதவரிடத்திலும், சென்று பொருள் கொடுப்பர் - தாமே வலியச் சென்று அவர்க்கு வேண்டும் பொருளைக் கொடுப்பார்கள்.

(கருத்து) பெரியோர்கள் தம்மிடம் நன்மொழியைக் கூறாதவரிடத்திலும், தாமே வலியச் சென்று அவர் வேண்டும் பொருளை வழங்குவர்.

## உ. வன்சொல்லும் இன்சொல்லும்

கண்ணபிரான் திருமாலின் ஒரு கூருக உலகில் தோன்றியவர். அவர் நல்லவர்களாகிய பாண்டவர் களுக்குத் துணை நின்று நன்மைகளையெல்லாம் உண் டாக்கினுர். அருச்சுனன் கண்ணபிரான் இடத்திலே அளவற்ற அன்புடையவன். முழுமுதலாகிய அம் மணிவண்ணனையே இவன் எல்லாவற்றிற்கும் நம்பி யிருந்தான்.

சில சமயங்களில் அருச்சுனன் கண்ணபிரானை மனம்போனபடி வைதுவிடுவான். வெண்ணெயுண்ட கண்ணனே அருச்சுனனுடைய இகழ்ச்சியுரைகளை யெல்லாம் புன்முறுவலோடு கேட்டுப் புகழ்ச்சியுரை யாகக் கொள்வார். அருச்சுனனுக்கு எத்தகைய தீமையும் நேர்ந்துவிடாதபடி கண்ணை இமை காப்பது போல் காத்துவந்தார்.

துரியோதனன் வஞ்சகமனம் பொருந்தியவன். தீய வர்கள் எல்லோருக்கும் தலைவனுகத் திகழ்ந்திருந்த வன். அவனுடைய உள்ளத்திலே அன்பு என்பது சிறிதும் இருக்காது. கண்ணபிரானுடைய அருமை பெருமைகளைக கண்ணிலான் மகனுகிய அம்மன்னன் சிறிதும் உணர்ந்து கொள்ளவில்லை. கண்ணனைக் கொல்லவுஞ் சூழ்ச்சி செய்து ஏற்பாடு செய்தான்.

ஒருநாள் அம் மாயவனை அழைத்து வஞ்சகமாக இனிய உரைகள் பலவற்றைக் கூறினுன். துரியோ தனனுடைய இன்னுரைகளையுஞ் சூழ்ச்சியையும் நன் கறிந்த கண்ணபிரான் துரியோதனனுக்குத் தக்க

பாடம் கற்பித்துவிட்டுச் சென்றார். தீயவர்கள் கூறும் இன்சொல் தீமைசெய்வதற்கு அறிகுறி என்பது துரியோதனன் இடத்திலே நன்கு விளங்கியது.

" மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற இன்சொல் பிறிதென்க—ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ நன்னுதால் ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு."

(உரை.) நன்னுதால் - நல்ல நெற்றியை உடைய பெண்ணே! மாசு அற்ற நெஞ்சு உடையார் வன்சொல் இனிது - குற்றமற்ற மனத்தையுடையவரது கடுஞ்சொல்லும் இனியதாகும்; ஏனையவர் பேசுற்ற இன்சொல் பிறிது என்க - குற்றம் பொருந்திய மனத்தையுடையவராகிய பிறர் சொல்லும் இனிய சொல்லும் கொடியதாகும்; ஈசற்கு - சிவபெருமானுக்கு, நல்லோன் எறிசிலையோ - நல்லவராகிய சாக்கிய நாயனார் அன்போடு எறிந்த கல்லோ, ஒள் கருப்பு வில்லோன் மலரோ-ஒள்ளிய கரும்பு வில்லையுடைய காமன் அன்பின்றி எறிந்த பூவோ, விருப்பு - விருப்பமுடையதாயிற்று?

(க - து.) நல்லவர்கள் சொல்லும் கடுஞ்சொல்லும் இன்பத்தை யுண்டாக்கும்: தீயவர்கள் சொல்லும் இன்சொல்லும் துன்பத்தை உண்டாக்கும்.

# ௩. திருமுறைகண்ட செந்தமிழ் வேந்தன்

முன் காலத்தில் திருவாரூரில் அபயகுலசேகரன் என்னும் சோழமன்னன் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். அவன் கடவுளிடத்திலே அளவு கடந்த பேரன்புடையவன். சமய குரவர்களாகிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தியார் என்பவர்களுடைய தேவாரப்பதிகங்கள் சிலவற்றை, அவன் கேட்டுப் பெருமகிழ்ச்சியடைந்தான்.

அவன் மேலும் பல தேவாரப் பதிகங்களைக் கேட்க வேண்டும் என்று விரும்பினான். தேவாரப் பதிகங்கள் எங்கே கிடைக்கும் என்று எல்லோரையும் கேட்டுக் கொண்டு வந்தான். சிலர், "கடவுள் அருள்பெற்ற பெரியோர்கள்தாம் தேவாரத்தைக கண்டு பிடிக்க முடியும். கடவுள் தமமுடைய பெருந்தொண்டர்களுக்குத்தான் எளிதில் அருள்புரிவாரே யல்லாமல் நம் போன்றவர்களுககு விரைவில் அருள் புரியமாட்டார்," என்று கூறினார்கள். அதுமுதல் அபய குலசேகர மன்னன் கடவுளின் அருள்பெற்ற பெரியார்கள் எங்கேனும் இருககிறார்களா என்று விசாரித்துக்கொண்டிருந்தான்.

இந்தச் சமயத்தில் நம்பியாண்டார் நம்பி பொல்லாப் பிள்ளையாருடைய அருளைப் பெற்றுத் திகழுஞ் செய்தி அபய குலசேகர மன்னனுக்குத் தெரிந்தது. அவன் விரைந்து நம்பியாண்டாரிடஞ் சென்று, "தேவாரப்பாடல்கள் எங்கிருக்கின்றன என்று கண்டு பிடிககவேண்டும். அதற்குத் தாங்கள்தாம் துணை புரியவேண்டும். உங்கள் வேண்டுகோளைக் கடவுள்

விரைவில் நிறைவேற்றுவார்," என்று வேண்டிக் கொண்டான்.

நம்பியாண்டார் நம்பி சோழமன்னனுடைய வேண்டுகோளுக்கு இணங்கினர். பொல்லாப் பிள்ளையாரை வணங்கித் தேவாரத் திருமுறைகள் இருக்குமிடத்தைத் தெரிவித்தருளவேண்டும் என்று வேண்டிகொண்டார். பொல்லாப் பிள்ளையார் தேவாரம் இருக்குமிடத்தைத் தெரிவித்தார். அதன் பிறகு தான் இப்பொழுதுள்ள மூவர் தேவார அடங்கன் முறை கண்டு பிடிககப்பட்டது. சோழமன்னனை தன் விருப்பம் நிறைவேற நம்பியாண்டார் நம்பியைப் பிடித்த செயல் போற்றத்தக்கதன்றோ?

" தங்கட் குதவிலர்கைத் தாமென்று கொள்ளினவர்
தங்கட் குரியவரால் தாங்கொள்க—தங்கநெடும்
குன்றினல் செய்தனைய கொங்கையாய்! ஆவின்பால்
கன்றினல் கோள்ப கறந்து."

(உரை.) நெடும் தஙக குன்றினல் செய்த அனைய கொங்கையாய் - நெடிய பொன்மலையினற் செய்தாற் போன்ற தனங்களை யுடையவளே! ஆவின்பால் கன்றினல் கறந்து கொள்ப-தங்கட்குக் கொடாத பசுவினுடைய பாலை அப்பசுவுக்குரிய கன்றைக் கொண்டு கறந்து கொள்வார்கள். அதுபோல; தங்கட்கு உதவிலர்கை-தங்கட்கு உதவி செய்யாதவர்களுடைய கையினின்றும், தாம் ஒன்று கொள்ளின் - தாம் ஒரு பொருளை அடையவேண்டுமானல், அவா தங்கட்கு உரியவரால் தாம் கொள்க - அவர்களுக் குரியவர்களாலே அப்பொருளைத் தாங்கள் பெறக் கடவர்கள்.

(க - து.) தமக்கு உதவி செய்யாதவரிடத்தில் ஓர் உதவியைப் பெறவேண்டினல், அவருக்கு உரியவரைக்கொண்டு அவ்வுதவியைப் பெறவேண்டும்.

## ௬. ஆலயத் திருப்பணி செய்த அடிகள்

நந்தாமணி என்னும் ஊரிலே, சிந்தாமணி அடிகள் என்னும் பெயருடைய துறவி ஒருவர் இருந்தார். அவர் பல நூல்களையும் நன்கு பயின்றவர். நல்ல சொல்லாற்றல் உடையவர். தமது சொல்வன்மையி ஞல் எத்தகைய கல்மனக் கொடியர்களையும் தம் வழிப் படுத்தித் தாம் சொல்வதைக் கேட்கச் செய்து விடுவார்.

அந்த ஊரிலே பெரிய கோவில் ஒன்று இருந் தது. அது வெகு காலத்திற்கு முன் கட்டப்பட்டபடி யால் மிகவும் பழுதடைந்து இடிந்துவிட்டது. பூசை திருவிழா முதலியவைகளும் இல்லாமற் போய்விட் டன. அந்த ஊரிலே பெருஞ்செல்வர்கள் பலர் இருந் தும் அந்தக் கோயிலைக் கட்டுவதற்கு எவரும் முன் வரவில்லை. காரணம் எல்லோரும் பொருளை இறுகப் பிடிக்கும் பிசினர்களாக இருந்ததுதான்.

சிந்தாமணி அடிகள் அந்த ஊரைச் சேர்ந்தவர் அல்லர். யாத்திரையாக அந்த ஊருககுவந்தார். வந்தவர் ஊரின் நிலைமையைத் தெரிந்துகொண்டு அங்கேயே தங்கிவிட்டார். ஒவ்வொருநாளும் சொற் பொழிவு செய்து பிசினச் செல்வர்களை யெல்லாம் தம் வழிப்படுத்திவிட்டார். அப்பெரியார் சொல்வ தைத் தட்ட எவருந் துணிந்திலர். எல்லோரிட மிருந்தும் ஏராளமான பொருளை வாங்கித் திருப்பணி செய்து நித்திய பூசை திருவிழா முதலியவைகட்கும் ஏற்பாடு செய்துவிட்டார். கோயிலை ஒட்டிச் சத்தி ரஞ் சாவடி முதலியவைகளையும் கட்டிவிட்டார்.

எல்லா அறங்களும் அந்தப் பெரியார் செய்த தாக மக்கள் சிந்தாமணி அடிகளை வாழ்த்திக்கொண் டாடினார்களே தவிர எவரும் பணங்கொடுத்த செல் வர்களை ஒரு சிறிதும் பொருட்படுத்தவில்லை. பணங் கொடுத்த செல்வர்களே எல்லா அறங்களும் சிந்தா மணி அடிகளால் செய்யப்பட்டவை என்று சொல்லி விட்டார்கள். உலோபிகளின் செல்வம் எடுத்துச் செலவு செய்பவர்களுடைய செல்வம் என்பது உண் மையாகி விட்டது.

"பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி ஆக்குபவர் பேறும்—பிறர்க்குதவி
செய்யார் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு."

(உரை.) பிறர்க்கு உதவி செய்யா-பிறருக்கு உதவி செய்யாத, கருங்கடல் நீர்-கரிய கடலின் தண்ணீரை, புயல் சென்று முகந்து - முகிலானதுபோய் அள்ளி வந்து, பிறர்க்குப் பெய்யாக் கொடுக் கும் - பிறருககு மழையாகப் பெய்து கொடுக்கும், அதைப்போல்; பிறர்க்கு உதவி செய்யார் பெருஞ்செல்வம் - பிறருக்கு நன்மை யைச செய்யாதவருடைய பெரிய செல்வமானது, வேறு - பிறிதே யாயினும், பிறர்க்கு உதவி ஆக்குபவர் பேறு ஆம் - அதனை எடுத் துப் பிறருக்கு உதவிசெய்பவர்களுடைய செல்வமே யாகும்.

(க - து.) உலோபிகளின் செல்வமானது அவர்களுக்கு உரிமையுடையதாக இருந்தாலும், அதனை எடுத்து உதவிசெய்பவர் களுடைய செல்வமாகவே மதிக்கப்படும்.

---

## ரு. பிரிந்துகூடிய நண்பர்கள்

பல ஆண்டுகட்கு முன்பு, சென்னைமாநகரில் இரண்டு செட்டியார்கள் ஆருயிர் நண்பர்களாக விளங்கினார்கள். அவர்களில் ஒருவர் பெயர் நல்லான் செட்டியார்; மற்றவர் பெயர் மாணிக்கஞ் செட்டியார். இவர்களுடைய நட்புப் பள்ளிக்கூடத்தில் தொடங்கியது. பெரியவர்களான பின்னர் இருவரும் ஒன்றாகச் சேர்ந்து பலசரக்குக்கடை வைத்து வாணிகஞ் செய்து பெரும்பொருள் ஈட்டினார்கள்.

இவர்களுடைய நட்பைப் பார்த்தவர்கள், "நட்பு என்றால் நல்லான் செட்டியாரையும் மாணிக்கஞ் செட்டியாரையும்போல அல்லவோ இருக்கவேண்டும்," என்று புகழ்ந்து பேசிக்கொள்ளும் அளவுக்கு அவர்களுடைய நட்பு முதிர்ந்துவிட்டது. ஆண்டுகளும் இருபத்திரண்டு வரையில் ஓடிவிட்டன. பார்த்தவர்கள் இவர்களுடைய நட்பிற்கு இனிமேல் அழிவில்லை என்று எண்ணிக்கொண்டிருந்தார்கள்.

ஒருநாள் மூன்று ரூபாயைக் குறித்து இருவருக்குந் தகராறு வந்துவிட்டது. அது சில நாட்களில் வளர்ந்து முதிர்ந்துவிட்டது. இருவரும் பாகத்தைப் பிரித்துக்கொண்டு பிரிந்துவிட முடிவு செய்தார்கள். இவர்களுடைய நீண்டகால நட்பை உணர்ந்த சிலர் இருவருக்கும் ஏற்பட்ட போராட்டத்தை ஒருவாறு போக்கி மீண்டும் பழமைபோல் நட்பாக இருப்பதற்கு ஏற்பாடு செய்தார்கள். அதனால் இருவரும் சிறிது காலம் ஒன்றாக இருந்தார்களாயினும் முன்னரைப்

போல் மனஅமைதியுடன் இருவராலுமே இருக்க முடியவில்லை. ஆகவே, அவர்கள் தனித்தனியே பிரிந்து விட்டார்கள்.

“ நீக்கம் அறும்இருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர்பெருமை நொய்தாகும்—பூக்குழலாய்
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினுந் திண்மைநிலை போம்.”

(உரை.) பூக் குழலாய் - பூக்களை முடித்த கூந்தலையுடையவளே !, நெல்லின் உமி சிறிது நீங்கி - நெல்லினுடைய உமியானது சிறிது நீங்கி - பழமைபோல் புல்லினும் - முன்போலவே கூடினாலும், திண்மை நிலைபோம் - முளைத்தற் கேற்ற ஆற்றலின் நிலை போய் விடும்; அதைப்போல, நீக்கம் அறும் இருவர் நீங்கிப் புணர்ந்தாலும்-பிரிவில்லாத இரண்டு நண்பர்கள் பிரிந்து முன்போலவே கூடினாலும், நோக்கின் அவர் பெருமை நொய்து ஆகும் - பார்க்குமிடத்து அவருடைய பெருமை சிறுமையாகவே இருக்கும்.

(க - து.) இடையே பகையால் பிரிந்து கூடும் நட்பு முன்போல் உறுதியுடையதாக மாட்டாது.

---

## ௬௱. இளையான்குடிமாறர் இல்லறம்

முன்னாளிலே இளையான்குடி என்னும் ஊரிலே மாறனார் என்னும் பெயருடைய சிவபகதர் ஒருவர் இருந்தார். சிவனடியார்கட்கு உணவிட்டுப் போற்று தலையே அவர் தம்முடைய சீரிய அறமாகக் கொண்டிருந்தார். அவருடைய மனைவியார் கணவருக்கேற்ற கற்பரசியாக அமைந்திருந்தார் தம்முடைய தலைவராகிய மாறனார் செய்யும் அறத்திற்குப் பெருந்துணையாக அமைந்து நின்றார். கணவர் இன்னது செய்க என்று ஏவுதற்கு முன்னரே குறிப்பறிந்து செய்தலைத் தம்முடைய கடமையாகக் கொண்டிருந்தார்.

ஒருநாள் இரவு, இறைவன் பசியால்வாடிய அடியவர்போல் கோலங்கொண்டு, மாறனார் வீட்டிற்குச் சென்றார். மாறனார் அப்பொழுது வறுமையால் வாடியிருந்தார். மாறனார் மனைவியார், வயலில் விதைத்திருந்த நெல்முளைகளை அரித்து வருமாறு செய்து அதனை உணவாக்கி மாறுகோலத்துடன் வந்திருந்த இறைவனுக்குப் படைத்தார்.

மாறனார் தொண்டிற்கு மனங்கோணாமல் துணையாக அமைந்திருந்ததுடன் அமைச்சன்போல் அமைந்து நின்று தகக சமயத்தில் நல்ல சூழ்ச்சித் திறங்களையும் சொல்லி நின்றபடியால் மாறனாரினும் அவர் மனைவியார் சிறந்து விளங்கினார். ஒற்றுமையாகச் செய்த நல்லறத்தின் பயனாய் இருவரும் பெறற்கரிய பேறு பெற்றார்கள். கணவனும் மனைவியும் மன ஒருமையுடன் செய்வதே சிறந்த அறம் என்பது மாற

*ஞரிடத்தும் அவர் மனைவியிடத்தும் நன்கு காணப் பட்டது.*

" காதல் மனையாளுங் காதலனும் மாறின்றித்
தீதில் ஒருகருமம் செய்பவே—ஓதுகலை
எண்ணிரண்டும் ஒன்றுமதி என்முகத்தாய் நோக்கல்
கண்ணிரண்டும் ஒன்றையே காண்." [தான்

(உரை.) *ஓது - புகழ்ந்தோதப் பெறுகின்ற, எண் இரண்டு கலையும் - பதினாறுகலைகளும், ஒன்றும் - பொருந்திய, மதி என் முகத்தாய் - திங்கள் என்று சொல்லத் தக்க முகத்தையுடையவளே !, கண் இரண்டும்-இரண்டு கண்களும், நோக்கல்-பார்த்தல், ஒன்றையே - ஒரு பொருளையே யாம்; அதுபோல, காதல் மனையாளும் காதலனும் - அன்பை யுடைய கணவனும் மனைவியும், மாறு இன்றி - மாறுபாடு இல்லாமல், தீது இல் ஒரு கருமமே செய்ப - குற்றமற்ற ஒரு காரியத்தையே செய்வார்கள்.*

(க - து.) *கணவனும் மனைவியும் ஒற்றுமையுடன் செய்வதே அறமாகும்.*

---

## எ. பேராசிரியரும் சிறுவனும்

ஓர் ஊரிலே பேராசிரியர் ஒருவர் இருந்தார். அவர் தமிழ்நூல்கள் எல்லாவற்றையும் ஐயந்திரிபறக் கற்றவர். மற்றவர்கள் எதைக் குறித்து அவரைக் கேட்டாலும் அவர் உடனே பதில் கூறிவிடுவார். அதனால் அவர், "எல்லாம் உணர்ந்தவர்" என்று அந்த ஊர்மக்களாலே மிகவும் போற்றப்பட்டார். அவருக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை என்பது அந்த ஊரார்களுடைய எண்ணம்.

இதனை அந்தப் புலவர் ஒருவாறு உணர்ந்து கொண்டார். அதனால் அவருடைய உள்ளத்திலே ஆணவம் கூத்தாடத் தொடங்கியது. தாம் சர்வகலா வல்லவர் என்று எண்ணி இறுமாப்படைந்திருந்தார். அவர் எத்தகையோரையுஞ் சிறிதும் மதிப்பதில்லை. எப்பொழுதுந் தருக்குடனேயே நடந்துகொள்ளத் தொடங்கினார்

ஒருநாள் பேராசிரியர் வெகுதொலையில் உள்ள ஓர் ஊருக்குச் சென்றார். அந்த ஊரில் இருந்து முடிக்கரை என்னும் ஓர் ஊருக்குச் செல்லவேண்டிய வேலை அவருக்கு ஏற்பட்டது. அந்த ஊருக்குச் செல்லும் வழி அவருக்குத் தெரியவில்லை. ஓர் இடத்தில் சில சிறுவர்கள் மாடுமேய்த்துக்கொண்டு இருந்தார்கள். பேராசிரியர் அந்தச் சிறுவர்களைப் பார்த்து, "முடிக்கரைக்கு எப்படிப்போவது?" என்று கேட்டார். ஒரு சிறுவன், "அடிக்கரை பிடித்துச் சென்றால் முடிக்கரை அடையலாம்" என்று சொன்னான். பேராசிரியருக்கு ஒன்றும் விளங்கவில்லை, "அப்படி என்றால் என்ன?" என்று மீண்டும் கேட்டார்.

உடனே சிறுவர்கள் நகைத்து, "என்ன ஐயா! பெரிய மக்காக இருக்கிறீர்? அடிக்கரை என்றால் தெரியாதா? நடந்து சென்றபடியால் உண்டாகி யிருக்கும் பதிவு அடிக்கரையாயிற்றே. இதை எந்த மூட்டாளும் அறிவானே!" என்று சொல்லி எள்ளி நகையாடினார்கள். பேராசிரியருக்கு மிகுந்த அவமானமாகப் போய்விட்டது. அன்றுமுதல் தாம் எல்லாம் உணர்ந்தவர் என்னுஞ் செருக்கைவிட்டு விட்டுத் தமக்கு ஒன்றுமே தெரியாது என்னும் எண்ணத்தை மேற்கொண்டார்.

" கடலே அனையம்யாம் கல்வியால் என்னும்
அடலே றனையசெருக் காழ்த்தி—விடலே
முனிக்கரசு கையால் முகந்து முழங்கும்
பனிக்கடலும் உண்ணப் படும் "

(உரை.) முழங்கும் பனிக்கடலும் - ஒலியைச் செய்கின்ற குளிர்ந்த கடலும், முனிக்கு அரசு கையால் - முனிவர்களுக்குத் தலைவராகிய அகத்திய முனிவருடைய கையினால், முகந்து உண்ணப்படும் - அள்ளிக் குடிக்கப் பெறும்; ஆகையால், யாம் கல்வியால் கடலே அனையம் என்னும் - நாம் கல்விப் பெருமையால் கடலைப்போல் விளங்குகின்றோம் என்று கொண்டுள்ள, அடல் ஏறு அனைய செருக்கு-வலிமை பொருந்திய ஆண் சிங்கத்தினது செருக்கைப் போன்ற செருக்கிலே, ஆழ்த்திவிடல் - உங்களை அமிழ்த்தி விடாமல் இருங்கள்.

(க - து.) பெருங் கல்வி யறிவுடையவரும் ஆணவங் கொள்ளுவாரானால் மற்றவராலே வெல்லப்படுவர்.

## அ. தருமரும் விராடனும்

பன்னிரண்டு ஆண்டுகள் காட்டு வாழ்க்கையை முடித்த பாண்டவர்கள் ஓராண்டு யாவரும் உணரா வண்ணம் மறைந்துறைதலை மேற்கொண்டு விராடனுடைய நகரத்தை அடைந்தார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு பெயரை மேற்கொண்டு மறைந்திருந்தார்கள். தருமர் கங்காபட்டர் என்னும் பெயரை மேற்கொண்டு விராட மன்னனுடன் அமர்ந்திருந்தார்.

ஒருநாள் விராட மன்னனுக்கும் கங்காபட்டருக்கும் ஒருசிறு விளையாட்டு நடந்தது. அஃதாவது இருவருஞ்சேர்ந்து சொக்கட்டான் விளையாடினார்கள். கங்காபட்டர் சூதாக விளையாடுவதாய் விராடன் தவறாக எண்ணினான். வட்டை எடுத்துப் பட்டருடைய பொட்டில் பட்டென்று அடித்தான். அவ்வளவு சினம் விராடனுக்கு உண்டாகிவிட்டது. விராடன் செயலைககண்டு தருமர் தாமுஞ் சினங்கொள்ளவில்லை. அவர் தமக்குண்டாகிய சினத்தை அறிவாற்றலால் அடக்கிக்கொண்டார்.

மடைப்பள்ளியில் மறைமுகமாகச் சமையல் தொழிலில் அமர்ந்திருந்த வீமன் அப்பொழுது அங்கு வந்தான். நிகழ்ந்ததை அறிந்தான். அவனுக்குப் பெருஞ்சினம் உண்டாகியது. அண்மையில் நின்ற ஒரு மரத்தைப் பார்த்தான். அதைப் பிடுங்கி ஒரே அடியினால் விராடனைத் தொலைக்கவேண்டு மென்பது வீமனுடைய எண்ணம். தருமருக்கு அவனுடைய எண்ணம் இன்னதென்று விளங்கிவிட்டது.

அவர் வீமனைப் பார்த்து, "அப்பா! அந்த மரம் முழுப்பச்சை; அஃது அடுப்பெரிப்பதற்குச் சரிப் படாது. ஆகையால் அதைப் பிடுங்குவதற்கு முயற் சிக்காதே," என்று பல நல்லுரைகளை இயம்பி அவனை அனுப்பிவிட்டார். அன்று தருமர் சினங்கொண் டிருப்பின் விராடனைத் தண்டித்திருக்கலாம். பின் னர் அவருடைய பொறுமை எல்லோராலும் நன்கு போற்றப்பட்டது.

" உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க—வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு."

(உரை.) உள்ளம் கவர்ந்து எழுந்து - மனதைத் தன் வழிப் படுத்திக்கொண்டு எழுந்து, ஓங்கு சினம்-மிகுதிப்படுகிற சினத்தை, காத்துக்கொள்ளும் குணமே குணம் என்க - அடக்கிக்கொள்ளுகிற குணமே சிறந்த குணமாகும்; வெள்ளம் தடுத்தல் அரிதோ-பெருகி வருகின்ற வெள்ளத்தைக் கரைகட்டித் தடுத்தல் அரியதோ அன்றி; தடம் கரை பேர்த்து விடுத்தல் அரிதோ-முன் கட்டப்பட் டிருந்த பெரிய கரையை உடைத்துத் தண்ணீரை வெளியே போகச செய்தல் அரிய செய்கையோ, விளம்பு - நீ இதனைச் சொல் வாயாக !

(க - து.) சினங்கொள்ளுதல் எளிது; சினத்தை அடக்குதல் அரிது.

## ௬௯. நல்லப்பனைச் சேர்ந்த செல்லப்பன்

உயர் நிலைப்பள்ளி ஒன்றிலே, செல்லப்பன் என்னும் பெயருடைய மாணவன் ஒருவன் படித்துக் கொண்டிருந்தான். செல்லப்பன் ஓர் எளிய குடும்பத்தில் தோன்றியவன். நோஞ்சலாக இருப்பான். ஆனால் எவரேனும் இகழ்ந்து பேசினால் அதனைப் பொறுகக மாட்டான். பதிலுக்குத் தானும் அவர்களைத் தாககிப் பேசித் தக்கவாறு பதிலளிப்பான். அந்தப் பள்ளியிலே கறுப்பண்ணன் என்றும் காளிமுத்து என்றும் பெயருடைய இருமாணவர்கள் காலிகளாகவும் குறும்பர்களாகவும் இருந்தார்கள்.

அவர்கள் அடிக்கடி செல்லப்பனைக் குரங்கென்றும் கொசுவென்றும் கொககென்றும் இகழ்ந்து பேசுவதுடன் சமயத்தில் காதையும் பிடித்துத் திருகி அடிப்பார்கள். அவர்களுடைய தொல்லை நாள் தோறும் வளர்ந்துகொண்டே வந்தது. ஆசிரியர்களிடத்தில் சொன்னால் அவர்கள் சரியாகக் கண்டிப்பதில்லை. அந்தக் குறும்பர்களுடைய தொல்லையில் இருந்து தப்புவதற்கு வழியாதென்று செல்லப்பன் எண்ணமிட்டான்.

அந்தப் பள்ளியிலே நல்லப்பன் என்னும் பெயருடைய மாணவன் ஒருவன் இருந்தான். அவன் தன்னுடைய பெயருக்கேற்ப உண்மையிலேயே நல்லவன். நல்ல தேககக்கட்டும் வலுவும் அமையப் பெற்றவனுகவும் இருந்தான். பொருள்நலம் நல்லப்பனுககு நன்கு அமைந்திருந்தது. ஆகவே நல்லப்பன் எவரையும் ஒருபொருட்படுத்த மாட்டான்.

குறும்பர்களின் தொல்லையிலிருந்து நீங்குதற்கு வழிதேடிக்கொண்டிருந்த செல்லப்பன் நல்லப்பனை நண்பனாக்கிக் கொள்வதே தக்கது என்று முடிவுசெய்தான். நல்லப்பனை அடுத்துத் தன் குறையைச் சொல்லிக்கொண்டான். நல்லப்பன் தான் செல்லப்பனை யாரும் நலியாதபடி பார்த்துக் கொள்வதாக உறுதிமொழி கூறினன்.

கறுப்பண்ணனும் காளிமுத்துவும் நல்லப்பனுக்கு மிகவும் அஞ்சுவார்கள். செல்லப்பன் நல்லப்பன் துணையில் இருப்பதை அறிந்ததும் அவர்கள் செல்லப்பனிடம் வாலாட்டுவதை விட்டுவிட்டார்கள். செல்லப்பனும் அந்தக் குறும்பர்களை ஒருபொருட் படுத்தாமல் பெருமிதத்துடன் விளங்கினன்.

"மெலியோர் வலிய விரவலரை அஞ்சார்
வலியோர் தமைத்தாம் மருவில்—பலியேல்
கடவுள் அவிர்சடைமேல் கட்செவிஅஞ் சாதே
படர்சிறைஅப் புள்ளரசைப் பார்த்து."

(உரை) பலி ஏல் - பூசையை ஏற்றுக் கொள்ளுகிற, கடவுள்-சிவபெருமானது, அவிர் சடைமேல் கட்செவி - விளங்குகின்ற சடையின்மேல அணியப்பட்டிருக்கின்ற பாம்பானது, படர் சிறை-விரிந்த சிறகினையுடைய, அப் புள் அரசைப் பார்த்து-அந்தப் பறவைகட்கு அரசாகிய கருடனைப் பார்த்து, அஞ்சாது-பயப்படமாட்டாது. அதைப்போல், மெலியோர் - இளைத்தவர்கள், வலிய விரவலரை - வலிமையுடைய பகைவருக்கு, தாம் வலியோர் தமை மருவில் அஞ்சார் - தாம் தம் பகைவரைப் பார்க்கினும் வலிமை யுடையவர்களைச் சேர்ந்திருந்தால் பயப்பட மாட்டார்கள்.

(க - து.) பகைவர்கள் வலியவர்களாக இருந்தால், அவர்களினும் வலியவர்களது துணையைத் தேடிக்கொள்ளவேண்டும்.

## ௬0. இரண்டு புருக்கள்

ஒருவேடன் பகற்காலம் முழுவதும் காட்டிலே திரிந்து பலவகைப் பறவைகளையும் வேட்டையாடினான். மாலைப்போதில் பெருமழை வந்துவிட்டது. எங்கும் இருள் சூழ்ந்துகொண்டது. ஓர் ஆலமரத் தடியில் தங்கினான். இரவு நெடுநேரமாகியும் மழை விடவில்லை. பேரிருளாக இருந்தபடியால் வேடன் வழியறிந்து வீட்டிற்குச் செல்ல முடியவில்லை. பசியாலுங் குளிராலும் அவன் வாடினான்.

அந்த ஆலமரத்தில் இரண்டு புருக்கள் நெடுங் காலமாக வாழ்ந்திருந்தன. அவற்றுள் பெண்புரு இரைதேடச் சென்ற விடத்தில் அந்த வேடனது வலையிற் சிக்கி அவனது வலைப்பைக்குள் அடைபட்டுக் கிடந்தது. பெண்புரு திரும்பிவராமையைக் கண்ட ஆண்புரு மரத்தில் இருந்து பலவாறு வருந்தியது. வலையிற் பிடிபட்டிருந்த பெண்புரு ஆண்புரு வருந்துதலைக் கேட்டது.

அது வலைகுள் இருந்தபடியே, "ஓ என் ஆருயிர்த் தலைவனே! நான் வேடன் வலையில் அகப்பட்டுப் பிடிபட்டு இங்கே இருக்கிறேன். ஊழ்வினை இவ்வாறு முடிந்துவிட்டது. இதைக குறித்து வருந்துவதில் பயன் இல்லை. நமது இருப்பிடத்திற்குவந்து தங்கியுள்ள இந்த வேடனது குளிரையும் பசியையும் போக்கவேண்டியது நமது கடமையாகும். நானே இங்கே அகப்பட்டுக் கொண்டேன். உம்மால் இயன்ற உதவியை இவனுக்குச் செய்யும்," என்று உரைத்தது.

ஆண்புறா மனந்தெளிந்தது. காட்டுத் தீயைக் கொண்டுவந்தது. தான் தங்கியிருந்த கூட்டைக் கீழே தள்ளியது. அதனால் நெருப்புமூள வேடன் அதில் தனது குளிரைப் போக்கிக் கொண்டான். "அவனுக்கு உணவாகத் தான் அத்தீயில் விழுந்து விட்டது. இவைகளைப் பார்த்த வேடன் நல்லறி வடைந்து தன் தீத்தொழிலை விட்டுவிட்டான். தமது குறையைப் போக்கிக்கொள்ள முயலாமல் வேடனது குறையைப் போக்க முயன்ற புறாக்களின் செயல் போற்றத் தக்கதன்றோ?

" தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகில்
நிறையிருளை நீக்குமேல் நின்று."

(உரை) திங்கள் - சந்திரன், கறை இருளை நீக்கக் கருதாது - தனக்கு உண்டாகியுள்ள களங்கமாகிய இருளைப் போக்கிக் கொள்ளுதற்கு எண்ணாமல், மேல் நின்று - விண்ணில் இருந்து, உலகின் நிறை இருளை நீக்கும் - உலகத்திலே மிகுந்துள்ள இருளைப் போக்குவான், அதைப்போல்; விழுமியோர் - மேலானவர், தம் குறை தீர்வு உள்ளார் - தமது குறைபாட்டைப் போக்கிக் கொள்ளுதலை எண்ணாமல், தளர்ந்து - மனம் இரங்கி, பிறர்க்கு உறூஉம் - மற்றவர்களுக்கு உண்டாகிய, வெம் குறை தீர்க்கிற்பார் - கொடிய துன்பத்தைப் போக்குவார்கள்.

(க - து.) பெரியோர்கள் தமது குறையைப் பொருட்படுத்தாமல் பிறர் குறையைப் போக்குவார்கள்.

---

## கக. தெய்வப் புலவர் திருவள்ளுவர்

திருவள்ளுவர் என்பவர் தமிழ் மறையாகிய திருக்குறளை அருளிச் செய்தவர். பேரறிவும் மெய்ஞ்ஞானமும் கைவரப் பெற்றவர். ஆயினும் அவர் துறவறத்தை மேற்கொள்ளவில்லை, "இல்லறம் அல்லது நல்லறம் அன்று" என்று துணிந்தவராய் இல்லறத்தையே கடைப்பிடித்து ஒழுகினர். அவருக்கு வாழ்க்கைத் துணையாக அமைந்த மனைவியின் பெயர் வாசுகி.

இவர் தொழில்கள் பலவற்றுள்ளும் சிறந்தது நெய்தல் தொழிலே என்று முடிவுசெய்து அதனையே மேற்கொண்டு வாழ்க்கையை நடத்தினர். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புல இன்பங்களையும் மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை என்னும் மூவாசைகளையும் வென்று விளங்கினர். இந்த ஆசைகள் திருவள்ளுவரை ஒன்றுஞ்செய்ய முடியவில்லை. பொன்னாசையைத் தாம் வென்று விளங்கியதுடன், தம் மாணவர்களும் அவ்வாசையை வெல்லுமாறு செய்தார்.

ஐம்புல ஆசைகள் இறுதிவரையில் திருவள்ளுவரை ஒன்றுஞ் செய்யமுடியவில்லை. திருவள்ளுவருடைய தூயவாழ்க்கையையும் பற்றற்ற தன்மையையுங் கண்டவர்கள் அவரை இல்லறஞானி என்று போற்றினர்கள். அவருடைய திருக்குறளைப் படிப்பவர்கள் இந் நாளிலும் திருவள்ளுவர் முற்றத் துறந்த முனிவரே என்று கூறிப் போற்றுகிறார்கள்.

ஐம்புலன்களும் அறிவுடையோரிடத்தில் தொல்லைசெய்ய மாட்டா என்பதற்குத் திருவள்ளுவர் தகுதிவாய்ந்த எடுத்துககாட்டாக அமைந்தார்.

" பொய்ப்புலன்கள் ஐந்துநோய் புல்லியர்பால் அன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாம்—துப்பில்
சுழற்றுங்கோல் கல்தூணைச் சூறு வளிபோய்ச்
சுழற்றுஞ் சிறுபுன் துரும்பு."

(உரை) சூறுவளிபோய் - சுழற்காற்றானது சென்று, சிறுபுல் துரும்பு - சிறிய எளிய துரும்பை, சுழற்றும் - எடுத்துச் சுழற்றும், கல்தூணை - கருங்கல்தூணை, துப்பில் சுழற்றும் கொல் - தனது ஆற்றலால் சுழற்றுமோ?, சுழற்ற மாட்டாது; அதைப்போல், பொய்ப் புலன்கள் ஐந்தும் - பொய்ம்மையை உடைய ஐந்து புலன் களும, புல்லியர்பால் அன்றி - அறிவற்ற கீழோர்களிடத்திலே அல்லாமல், மெய்ப் புலவர் தம்பால்-மெய்யறிவுடையவரிடத்திலே, நோய் விளையா - துன்பத்தைச செய்யமாட்டா.

(க - து.) ஐம்புலன்களும் அறிவற்றவரிடத்தில் தொல்லை செய்வதன்றி, அறிவுடையோரிடத்தில் தொல்லை செய்ய மாட்டா.

## கஉ பிணத்தை மறைத்து விருந்திட்டவன்

பல ஆண்டுகளுககு முன்பு தமிழ்நாட்டிலே வடுகன் என்னும் பெயருடைய செல்வன் ஒருவன் இருந்தான். அவன் பலநூல்களையும் நன்கு கற்றுத் தேறி மெய்யறிவுபெற்றிருந்தான். விருந்தினர்களைத் திருந்திய உணவுகளால் பொருந்துமாறு போற்றி அவர்கள் அருந்தி எஞ்சியதையே உண்பான். அவனிடஞ் செல்பவர்கள் ஒருவேளையேனும் சாப்பிடாமல் மீள முடியாது.

ஒருநாள் வடுகன் வீட்டிற்குச் சில அறிஞர்கள் விருநதாளிகளாக வந்தார்கள். வடுகன் பெருந்திருப் பெற்றவன். மனமகிழ்ந்து பலவகை உணவுகளைச் சமைக்கச் செய்தான். அப்போது அவன் வீட்டிலே ஒருவர் மிகுந்த நோயால் பிடிக்கப்பட்டு இறக்குஞ் சமயத்தில் இருந்தவா விருந்தினர் அருந்துதற்கு முன்னர் இறைவனடி சேர்ந்தார். வடுகன் மனைவி அழுது புலம்ப முயனறாள்.

வடுகன் அவளைப் பார்த்து, "ஓ பெண்ணே! ஒன்பது ஓட்டைகள் உடைய உடலாகிய வீட்டில் இருந்து உயிர் ஓடிப்போனது வியப்பல்ல; ஓடாமல் அடங்கியிருப்பதுதான் வியப்பு. நீ வீணை அழுது புலம்பி விருந்தாளிகளை விரட்டிவிடாதே," என்று கூறினன். வடுகன் மனைவி வருந்துதலை நிறுத்தினள். இருவரும் விருந்தினர்க்கு உணவு படைத்து உண்ணுமாறு செய்தனர். அவ்விருந்தாளிகளும் உண்டு பசியாறிய பின்பு உண்மையை உணர்ந்தனர்.

அவர்கள் வடுகனுடைய மெய்யறிவைப் போற்றி "ஒன்பது ஓட்டைகள் உள்ள உடலில் உயிர் தங்கி நிற்பது புதுமைதான்," என்று கூறிச் சென்றனர். அதன் பிறகு வடுகனுடைய புகழ் தமிழ்நாடெங்கும் பரவியது.

" வருந்தும் உயிரோன்பான் வாயில் உடம்பில்
பொருந்துதல் தானே புதுமை—திருந்திழாய்
சீதநீர் பொள்ளல் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு "

(உரை) *திருந்திழாய்-விளக்கமான அணிகலன்களை அணிந்த பெண்ணே!, சீத நீர் - குளிர்ந்த நீரானது, பொள்ளல் சிறுகுடத்து நில்லாது வீதலோ - ஓட்டையை உடைய சிறிய குடத்திலே தங்காமல் ஒழுகிப் போதலோ வியப்பு, நிற்றல் வியப்பு - ஒழுகாமல் தங்கி நிற்றல்தான் வியப்பானதாகும்; அதைப்போல், வருந்தும் உயிர் - பலவகைத் தொல்லைகளாலும் வருத்தப்படுகின்ற உயிரானது, ஒன்பான் வாயில் உடம்பில் பொருந்துதலே புதுமை - ஒன்பது வாசல்களையுடைய உடம்பிலே தங்கியிருப்பதுதான் வியப்பாகும்.*

(க - து.) *உயிர் உடலைவிட்டு நீங்குவது வியப்பன்று.*

## கங. ஔவையாரும் கொடையாளர்களும்

ஔவையார் தமிழ்நாட்டிலே வாழ்ந்திருந்த தவ மூதாட்டியார். அவருக்குத் தெரியாத அரசர்களோ கொடையாளர்களோ அவர் காலத்தில் நாட்டில் இல்லை. ஔவையார் பிடிவாதத்தையும் பெருமையையுங் கைக்கொண்டொழுகியவ ரல்லர். அன்பையும் அருளையுமே அடிப்படையாகக் கொண்டு உலகில் உயிர் வாழ்ந்திருந்தவர்.

ஔவையார் ஒருமுறை சேரனிடம் சென்று ஓர் ஆடுகேட்டார். ஔவையாரின் பெருமையை அறிந்த அவன், பொன்னினால் ஓர் ஆடு செய்வித்து அதனை ஔவையாருக்குக் கொடுத்தான். சேரன் ஏன் இப் படிச் செய்தான் எனின் அவன் தான் பெற்ற பொருளின் பெருமைக்கு ஏற்பச் செய்தான். ஒரு முறை ஔவையார் ஒரு விலைமகள் வீட்டிற்குச் சென் றிருந்தார். அவ்விலைமகள் ஐந்நூறுபொன் செல விட்டும் தன் எண்ணம் நிறைவேறப் பெறாமல் வருந் திக்கொண் டிருந்தாள்.

ஔவையார் அவளுடைய எண்ணம் நிறைவேறு மாறு செய்தார். அப்பொழுது அவள் வறுமையால் வாடி யிருந்தமையின் ஔவையாருக்கு உணவிட்டு வணங்கி அனுப்பிவைத்தாள். ஒருகால் ஔவையார் வெட்டப்பட்ட பலாமரம் தழைத்துக் காய்த்துப் பழுக் கும்படி செயற்கருஞ்செயல் ஒன்றைச் செய்தார். அப் பலாமரம் ஒரு குறவனுக்கு உரியது. வெட்டப் பட்ட பலாமரம் தழைத்து வளர்ந்து பழுத்ததைக்

கண்ட குறமகள் பெருவியப்படைந்து ஔவையாருக்கு நன்கொடை வழங்க எண்ணினள். அவள் வறியவள். அவளிடம் அப்பொழுது இருந்த தினையரிசியில் காற்படி கொடுத்தாள்.

ஔவையார் அதனைப் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சியுடன் சென்றார். கொடையாளர்கள் தம்முடைய பெருமை சிறுமைக்குத் தக்கவாறு பொருள் வழங்குவார்கள் என்பது ஔவையாரைப் போற்றியவர்களிடம் நன்கு காணப்பட்டது.

"பெருக்க மொடுசுருக்கம் பெற்றபொருட் கேற்ப
விருப்ப மொடுகொடுப்பர் மேலோர்—சுரக்கும்
மலையளவு நின்றமுலை மாதே மதியின்
கலையளவு நின்ற கதிர்."

(உரை) சுரக்கும் - நீர் அருவிகளைப் பொழியும், மலை அளவு நின்ற முலைமாதே - மலையைப் போலப் பருத்து நிற்கின்ற மார்பையுடைய பெண்ணே!, மதியின் கதிர் கலை அளவு நின்ற - திங்களினுடைய கதிர்க்கற்றைகள் வளர்தலையும் தேய்தலையும் உடைய கலையின் அளவாக இருக்கின்றன; அதைப்போல, மேலோர் - கொடையாளர்கள், பெருக்கமொடு சுருக்கம் பெற்ற பொருட்கு ஏற்ப - மிகுதியாகவும் குறைவாகவும் தாம் பெற்றுள்ள பொருளுக்குத் தக்கவாறு, விருப்பமொடு கொடுப்பர் - இரவலாளர்கட்கு அன்புடன் நன்கொடை வழங்குவார்கள்.

(க - து.) கொடையாளர்கள் தம்முடைய செல்வத்திற்குத் தக்கவாறு நன்கொடை வழங்குவார்கள்.

## கச. பயாபதி மன்னன்

பயாபதி என்னும் பெயருடைய மன்னன் முன்னாளில் போதனமாபுரம் என்னும் நகரில் இருந்து அரசு செலுத்திககொண்டிருந்தான். அவன் மிகுந்த செல்வச் சிறப்புடையவன். விசயன், திவிட்டன், என்னும் பெயருடைய பேராண்மையாளர்கள் இருவரைத் தன்னுடைய மககளாகப் பெற்றிருந்தான்.

செல்வப் பெருக்காலும் பிற நலத்தாலும் பயாபதி மன்னன் தலைமைபெற்று விளங்கியிருந்தும் செருக்கையோ, ஆணவத்தையோ மேற்கொண்டிருக்கவில்லை. பணிவுடைமையையும் அடக்கத்தையும் அணிகலன்களாகக கொண்டிருந்தான்.

அச்சுவக்ரீவன் என்னும் வித்தியாதர மன்னன் பயாபதி மன்னனிடம் இருந்து திறைப்பொருள் வாங்கி வருமாறு தூதர்களை அனுப்பினான். பயாபதி மன்னன், "எப்பேர்ப்பட்ட பெருஞ் செல்வர்கட்கும் அழிவு நேரிடுதல்கூடும். உலகத்தில் தோன்றியவர்கள் ஒருவருக்குள் ஒருவர் அடங்கி வாழுமாறுதான் நான்முகன் படைத்துள்ளான். தலைமையும் செல்வச் சிறப்பும் நிலைபெற்று நில்லா" என்று எண்ணித் தூதர்களிடம் திறைப்பொருளைக் கொடுத்து அனுப்பினான்.

அச்சுவக்கிரீவன் எனனும் வித்தியாதர மனனன "நாம் பெருஞ்செல்வம் உடையோம்; எல்லோர்களும் தலைமைதாங்கும் பேறு நமககு மட்டும்தான் அமைந்

*துள்ளது," என்று எண்ணி மிகப் பெருமையுடன் இறுமாந் திருந்தான். ஆனால் அவனுடைய செல்வப் பெருமையும் இறுமாப்பும் மிகுவிரைவில் ஒழிய அவன் மாண்டுபோனான். அறிவுடையோர் பணிவுடன் நடந்து பெருமையடைவார்கள். அறிவற்றவர்கள் ஆணவங்கொண்டு விரைவில் அழிந்தொழிவார்கள்.*

" தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோம் என்று
தலையா யவர்செருக்குச் சார்தல்—இலையால்
இரைக்கும்வண் டூதுமலர் ஈர்ங்கோதாய் மேரு
வரைக்கும்வந் தன்று வளைவு."

(உரை) *இரைக்கும் வண்டு ஊதும் - ஒலிக்கின்ற வண்டுகள் ஊதுகின்ற, மலர் ஈர்ங்கோதாய் - பூக்களால் ஆகிய மாலையை உடையவளே!, மேருவரைக்கும் வளைவு வந்தன்று - மகாமேரு மலைக்கும் ஒரு காலத்தில் வளைவு ஏற்பட்டது; ஆகையால், தலையாயவர் - முதன்மையான அறிவுடையவர்கள், தொலையாப் பெரும் செல்வத் தோற்றத்தோம் என்று-அழியாத பெரிய செல்வத்திலே பிறந்திருக்கிறோம் என்று, செருக்குச் சார்தல் இலை-செருக்கடைய மாட்டார்கள்.*

(க - து.) *அறிவுடையோர்கள் பெருஞ் செல்வர்களாக இருந்தாலும் செருக்கடைய மாட்டார்கள்.*

---

## கரு. அன்பற்ற துரியோதனன்

துரியோதனன் பெருஞ் செல்வக் குடும்பத்திலே தோன்றினான். ஊழ்வினையின் போக்கினால் அவனுடைய உள்ளம் நல்லதாக அமையவில்லை. பெருஞ் செல்வனாகிய அவனுக்கு இடம் பொருள் ஏவல் முதலிய யாவும் நன்கு அமைந்திருந்தன. ஆயினும் அவன் எவரிடத்திலும் அன்பற்றவனாக விளங்

உடன் பிறந்தவர்களாகிய பாண்டவர்களுக்குத் தீமைகளையே நாளும் செய்துகொண்டு திரிந்தான். அதன் பயனாகப் பாரதப்போர் மூண்டது. தன்னுடைய உறவினர்கள் அனைவரையும் போரில் இழந்ததுடன் இறுதியில் தானும் மடிந்து முடிந்து போனான்.

துரியோதனனது அழிவைக் கண்டவர்கள் " துரியோதனன் பெருஞ்செல்வ மன்னனாகப் பிறந்தும் அந்தச் செல்வ நலங்களையெல்லாம் நுகராமல் வீணே ஒழிந்து போனானே!" என்று உள்ளம் வெதும்பினார்கள்.

ஒருவன் செல்வத்தை மட்டும் பெற்றிருந்தால் போதாது. அதனை அனுபவிப்பதற்கு நல்லூழையும் எல்லோரிடத்திலும் அன்புடைமையையும் அருளுடைமையையும் பெற்றிருககவேண்டும்.

" இல்லானுக் கன்பிங் கிடம்பொருள் ஏவன்மற்(று)
எல்லாம் இருந்துமவற் கென்செய்யும்—நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு.

(உ-ரை) நல்லாய்-நல்லவளே!, மொழி இலார்க்கு ஏது முது நூல் - பேசசற்ற ஊமைகளுக்குப் பழமையாகிய நூல் யாது பயனைச் செய்யும்?, தெரியும் விழி இலார்க்கு ஏது விளக்கு-பார்க்கின்ற கண் இலாதவர்களுக்கு விளக்கு'என்ன பயனைச் செய்யும்?, அதைப் போல், இங்கு-இவ்வுலகத்தில், அன்பு இல்லானுக்கு - எவரிடத்திலும் அன்பில்லாதவனுக்கு, இடம் பொருள் ஏவல் எல்லாம் இருந்தும் - இடம் பொருள் ஏவல் முதலிய நன்மைகளெல்லாம் அமையப் பெற்றிருப்பினும், அவற்கு என் செய்யும் - அவனுக்கு எத்தகைய பயனை உண்டாக்கும்.

(க - து) அன்பற்றவனுக்கு எத்தகைய செல்வம் இருப்பினும் அவன் அவைகளால் நன்மையடைய மாட்டான்.

## ௧௬. திருஞானசம்பந்தர்

திருஞானசம்பந்தர் சீகாழியிலே தோன்றியவர். மூன்றாவது அகவையில் தானே முக்கண் முதல்வனின் திருவருளைப் பெற்றவர். இவர் முருகக்கடவுளின் கூறாக உலகில் தோன்றியவர் என்று அறிஞர்கள் கூறுப. இவர் பல சிவப்பதிகட்குஞ் சென்று இறை வழிபாடு செய்துகொண்டு திருமறைக் காட்டில் எழுந்தருளியிருந்தார்.

அப்பொழுது பாண்டி நாட்டிலே சமணர்கள் மிகுதியாகப் பெருகி வளர்ந்தார்கள். பாண்டியராசனும் சமணனாகினான். ஆனால் அவனுடைய மனைவியும் அமைச்சரும் சைவர்களாகவே மறைந்தொழுகினார்கள். திருஞானசம்பந்தப் பிள்ளையாருடைய பெருமை அவர்களுக்குத் தெரிந்தது. அவரைப் பாண்டி நாட்டிற்கு அழைத்துச் சமண சமயத்தை வேரோடு களையவேண்டும் என்று முடிவு செய்தார்கள். திருஞானசம்பந்தரை அழைத்து வருமாறு சிலரைத் திருஞானசம்பந்தர் இடத்திற்கு அனுப்பினார்கள்.

திருஞானசம்பந்தர் தமது பெருமையையும் தலைமையையும் எண்ணிப் பாண்டி நாட்டில் இருந்துவந்த தூதர்களுடைய வேண்டுகோளைப் புறக்கணித்து விடவில்லை. தம்மிடத்திலே அன்புகொண்டுள்ளவர்களுடைய உள்ளத்துத் துன்பத்தைப் போக்கி நன்மை உண்டாகக வேண்டும் என்று எண்ணினார். தம் க்கூட்டத்துடன் புறப்பட்டு மதுரையை அடைந்

தார். சமணர்களை வென்று சைவசமயத்தை நிலை நாட்டினர்.

பெரியோர்கள் சிறியோர்கள் இடத்திற்குச் சென்று அவர்களுடைய துன்பத்தைப் போக்குவார்கள். தம்முடைய பெருமையையே பெரிதாக எண்ணிக்கொண்டிருக்க மாட்டார்கள் என்பது திருஞான சம்பந்தர் இடத்திலே நன்கு காணப்பட்டது.

"தம்மையும் தங்கள் தலைமையையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர்—தம்மின்
இழியினும் செல்வர் இடர்தீர்ப்பர் அல்கு
கழியினுஞ்செல் லாதோ கடல்."

(உரை) கடல் - மிகப் பெரிய கடலானது, அல்கு கழி செல்லாதோ - தன்னை அடுத்த சிறிய உப்பங்கழியினும் போய்ப் பாயாதோ?, போய்ப்பாயும் அதைப்போல், உயர்ந்தோர் - பெரியோர், தமை அடைந்தோர் தம்மின் இழியினும்-தங்களைச் சார்ந்தவர்கள் தங்களைப் பார்க்கினும் இழிந்தவர்களாக இருந்தாலும், தம்மையும் தஙகள் தலைமையையும் பார்த்துத் தம்மை மதியார் - தங்களையும் தங்களுடைய பெருமையையும் எண்ணித் தம்மைப் பெரியாராக எண்ணி மதித்திராமல், செல்வர் இடர் தீர்ப்பர்-அவர்களிடத்திற்குச் சென்று அவர்களுடைய மனவருத்தத்தைப் போக்குவார்கள்.

(க - து.) மேலோர்கள் கீழோர்களிடமுஞ் சென்று அவர்களுடைய துன்பத்தைப் போக்குவார்கள்.

---

## கஎ. மன்னனும் மைந்தரும்

முன்னாளிலே தென்னாட்டிலே இளங்கோ என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். அவனுக்குச் செல்வம் மிகுதியாக அமைந்திருந்தது. செல்வத்திற்குப் பயன் ஈதலே என்று எண்ணிய இளங்கோ அறம்புரிதலை மேற்கொண்டான்.

இளங்கோவின் பெயர் நாடுமுழுவதும் பரவியது. நாள்தோறும் கணக்கற்ற இரவலாளர்கள் இளங்கோவின் அரண்மனையில் குழுமினார்கள். நாளடைவில் இளங்கோவேந்தன் பொருள்கள் எல்லாஞ் செலவாகி விட்டன. ஆயினும் அரசன் தன்னுடைய பொருள்நிலைக்குத் தக்கவாறு பொருள் வழங்கிக் கொண்டிருந்து இறுதியில் வறிய நிலையிற் காலமானான்.

ா மன்னனுக்கு இரண்டு மைந்தர்கள் இருந்தார்கள். ஒருவன் பெயர் நீலமணி, மற்றவன் பெயர் நெடுமால். இவர்கள் அரசர்கள் ஆனபோது பொருளறை காலியாக இருந்தது. தக்கவாறு முயன்று பொருளறையை நிறைத்தார்கள். இரவலாளர்கள் இவர்களிடமும் வரத்தொடங்கினர். அமைச்சர்களோ, "இவர்களுடைய கொடையைத் தடுத்து விடவேண்டும். இன்றேல் நமக்கு ஊதியம் கொடுப்பதற்குக்கூட வழியில்லாமல் இவர்கள் எல்லாப் பொருள்களையும் ஊதிவிடுவார்கள்," என்று எண்ணினார்கள்.

மெதுவாக இளைஞர்களை அடுத்து "இனிமேல் இரவலாளர்கட்கு வீணாகப் பொருள் வழங்காதீர்கள்.

நாம் படைதிரட்டுதற்கும் பிறர் நாடுகளைப் பிடித்து நம் நாட்டைப் பெருக்குவதற்கும் பொருள் இன்றியமையாததாகும்," என்று அறிவுரை வழங்கினார்கள். ஆனால், இளைஞர்கள் அமைச்சர்களுடைய ஈவது விலக்குச் சொற்களைக் கேட்கவில்லை. தம் மனம் போனவாறு கொடைத்தொழிலை மேற்கொண்டனர். இதனால் இவர்களுடைய பெயரும் புகழும் எங்கும் பரவி நிலைபெற்றது.

" எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ—பைந்தொடீ
நின்று பயனுதவி நில்லா அரம்பையின் கீழ்க்
கன்றும் உதவும் கனி."

(உரை) பைந்தொடீ ! - பசும்பொன்னாலாகிய வளையல்களை உடையவளே !, எந்தை இரப்பார்க்கு ஈந்து நல்கூர்ந்தான் என்று - எங்கள் தந்தை இரப்பவர்களுக்குப் பொருளைக் கொடுத்து வறியவன் ஆனான் என்று, அவன் மைந்தர் தம் ஈகை மறுப்பரோ - அவனுடைய மக்கள் தங்களுடைய ஈகைக் குணத்தைக் கைவிடுவார்களோ; விடமாட்டார்கள். நின்று பயன் உதவி - தான் நின்று பயனைக் கொடுத்து, நில்லா - பிறகு அழிந்துபோன, அரம்பையின் - வாழை மரத்தின், கீழ்க்கன்றும் - கீழே தோன்றிய கன்றும், கனி உதவும் - பழத்தைக் கொடுக்கும்.

(க - து.) தந்தை இரப்பவர்கட் களித்து வறியவனானான் என்று புதல்வர் தமது அறத்தை விடமாட்டார்கள்.

---

## ௧௮. திரிசடையும் அரக்கிகளும்

சீதாபிராட்டியார் ஒருபோது இராவணனாலே சிறை யெடுக்கப் பெற்று இலங்கையில் இருந்தார். இராவணன் அரக்கியர் பலரைச் சீதாபிராட்டிக்குக் காவலாக அமைத்தான். அவ்வரக்கியர் இரக்கமற்றவர். கண்டார்க்கு அச்சம் உண்டாக்கும்படியான தோற்றம் உடையவர். அவர்கள் எப்பொழுதும் வன்சொற்களைப் பேசிச் சீதாபிராட்டியை அச்சுறுத்திக்கொண்டிருந்தனர்.

நயமொழிகளாலும் பயமொழிகளாலும் சீதையின் மனதை மாற்றுமாறு இராவணன் கட்டளையிட்டிருந்தான். நயமொழி இன்னதென்றறியாத அரக்கியர் கடுமொழிகளையே நயமொழி என்று நினைத்துச் சீதையிடம் பேசினார். அவ்வரக்கியர் மொழிகட்குச் சீதை எத்தகைய பதிலும் உரைக்கமாட்டாள்.

அவ்வரக்கியர்களுள் திரிசடை என்னும் பெயருடையவள் ஒருத்தி இருந்தாள். அவள் விபீடணனுடைய மகள். நல்லியல்புகள் பல அமையப் பெற்றவள். அவள் அடிக்கடி இன்மொழிகள் பலவற்றை இயம்பிச் சீதாபிராட்டியின் துன்பத்தை மாற்றிக் கொண்டிருந்தாள்.

சீதாபிராட்டி அந்தத் திரிசடை ஒருத்தியின் சொல்லால்தான் மனமகிழ்ந்து இராமபிரான் தன்னை மீட்கும் வரையிலும் உயிரைக் காப்பாற்றிக்கொண்டிருந்தாள்.

"இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய் பொங்கா தழற்கதிரால் தண்ணென்
கதிர்வரவாற் பொங்குங் கடல்."

(உரை.) பொன்செய் அதிர்வளையாய் - பொன்னாலே செய்யப்பட்ட ஒலிக்கின்ற வளையல்களை உடையவளே, கடல் தண் என் கதிர்வரவால் பொங்கும் - கடலானது குளிர்ச்சி பொருந்திய ஒளிகளையுடைய திங்களின் வருகையால் பொங்கும், அழல் கதிரால் பொங்காது - வெம்மை பொருந்திய ஒளிகளையுடைய கதிரவன் வருகையினால் பொங்க மாட்டாது; அதுபோல், இருநீர்வியன் உலகம் - பெரிய கடல் சூழ்ந்த பெரிய உலகத்தில் உள்ளவர்கள், இன்சொலால் அன்றி - இனிய சொற்களினால் அல்லாமல், வன்சொலால் என்றும் மகிழாது - வலிய கடுஞ்சொற்களினாலே எக்காலத்திலும் மகிழ்ச்சியடைய மாட்டார்கள்.

(க - து.) உலகத்தார்கள் இன்சொலால் அன்றி வன்சொலால் மகிழ்ச்சியடைய மாட்டார்கள்.

---

## ௬௬. சங்கப்புலவர்களும் குயக்கொண்டானும்

மதுரையில் தமிழ்ச்சங்கம் நடந்துகொண்டிருந்த காலத்தில் சங்கத்திலே புலவர்கள் பலர்கூடித் தமிழாராய்ச்சிசெய்து இன்பமாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது புதுப்புலவர்கள் எவரேனும் வேற்றூரில் இருந்துவரின் அவர்களோடு அளவளாவி மகிழ்ச்சியுடன் உரையாடுவார்கள். அறிஞர்களோடு அறிஞர்கள் அளவளாவும் இன்பம் மிகச் சிறந்ததன்றோ?

அந்நாளில் குயக்கொண்டான் என்ற பெயருடையவன் ஒருவன் வேறோர் ஊரில் இருந்தான். அவன் வடமொழியை நன்கு கற்றுத் தேர்ந்து அம்மொழியிலே புலமை பெற்று விளங்கினான். அவன் மிகுந்த ஆணவம் உடையவன். எல்லோரிடத்தினும் மிகத் துடுக்காகப் பேசுவான். வடமொழியே சிறந்தது என்றும் தமிழ் தாழ்ந்தது என்றும் வல்லடி வழக்குப் பேசி வாயடி அடிப்பான்.

அவன் பெயரைக் கேட்டால் தமிழ்ப் புலவர்கள் வெறுப்படைவார்கள். அவன் ஒருநாள் சங்கத்திற்கு வந்தான். அங்கிருந்த புலவர்களோடு சொற்போரிட்டுக் கலாம் விளைத்தான். அதனைக் கண்டு சங்கப் புலவர்கள் மிகவும் வருந்தினார்கள். பிறகு நக்கீரர் குயக்கொண்டானைத் தக்கவாறு கண்டித்து விரட்டினார். நல்லறிஞர்களைக் கண்டால், மகிழ்ச்சியடையும் சங்கப் புலவர்கள் குயக்கொண்டான் வரவு

கண்டு உள்ளங்கலங்கினர்களெனின் வேறுகூற வேண்டுவதென்னை ?

"நல்லோர் வரவால் நகைமுகங்கொண் டின்புறீஇ
அல்லோர் வரவால் அழுங்குவார்—வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழற்கால் வர."

(உரை.) *தேமா - நல்ல மாமரமானது, தென்றல் வரத் தளிர் காட்டித் திருந்தும் - தென்றற் காற்றுவரத் தளிரைக் காட்டிச் சிறப்புற்றிருக்கும்; சுழல்கால்வர வருந்தும் - சுழற்காற்றுவர வருந்தும்; அதுபோல, வல்லோர் - கல்வியறிவிற் சிறந்தவர்கள், நல்லோர் வரவால் நகை முகம்கொண்டு - நல்லவர்களுடைய வரவால் முகமலர்ச்சிகொண்டு, இன்புறீஇ - இன்பத்தை அடைந்து, அல்லோர் வரவால் அழுங்குவார் - தீயவர்களுடைய வருகையினாலே துன்பத்தை அடைவார்கள்.*

(க - து.) *கல்வி யறிவுடையோர் நல்லோர் வரவால் இன்பத்தையும், தீயோர் வரவால் துன்பத்தையும் அடைவார்கள்.*

---

## உ௦. சிறுவரைக்காத்த செந்தமிழ்ப் புலவர்

இரண்டு அரசர்கள் ஒருகாலத்தில் பகையுடைய வர்களாக இருந்தார்கள். அவர்களில் ஓர் அரசனுடைய மக்கள் இருவர், மற்ற அரசன் கையில் எப்படியோ சிக்கிக்கொண்டார்கள். "குற்றஞ் செய்தவன் தப்பிப்போகக் குறுக்கே வந்தவன் தலையில் அடித்தான்," என்பதுபோல், பகையரசனைப் போரில் தோற்கடிக்க முடியாத பேதை யரசன் அந்தச் சிறுவர்களைக் கொன்று வன்மம் தீர்த்துக்கொள்ள எண்ணினன்.

தன் கையிலே சிக்கிய சிறுவர்களை யானையின் கால்களிலே இடறிக் கொலைசெய்து விடும்படி அவன் கட்டளையிட்டான். யானையின் காலில் இடறுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. சிறுவர்கள் கொலைக் களத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அவர்கள் ஏழெட்டாண்டுகளே நிரம்பப் பெற்ற பாலர்கள். அச்சம் மிகுதியினால் அவர்கள் அழுது கதறினார்கள். சிறுவர்களை வதைப்பதை வேடிக்கை பார்ப்பதற்குப் பெருந்திரளான மக்கள் கூடியிருந்தார்கள்.

அப்பொழுது ஒரு புலவர் விரைந்து வந்தார். சிறுவர்களின் நிலையைக் கண்டார். துன்பமுற்றுக் கலங்கினார். அரசனிடம் ஓடி, "அரசே! இந்தக் குழந்தைகள் உனக்கு எத்தகைய குற்றமுஞ் செய்யவில்லை. பால்மணம் மாறாத இந்தப் பச்சிளங் குழவிகளை வதைப்பாயானால் உனக்குப் பழியும் பாவமும் மிகுதியாக உண்டாகும்," என்று பலவாறு அறவுரைகளை

அந்த அரசனுடைய உள்ளம் உருகுமாறு உரைத்தார்.

புலவர் மொழிகளைக்கேட்டு அரசன் சிறுவர்களைக் கொலைசெய்யாமல் விட்டான். குழந்தைக் கொலைப் பாவத்திற்கு ஆளாகாமல் அரசன் தப்பினான். அன்று புலவர் வருந்திய வருத்தம் மக்கள் அனைவருடைய உள்ளத்தையுங் கவர்ந்தது.

" பெரியவர்தந் நோய்போல் பிறர்நோய்கண் டுள்ளம்
எரியின் இழுதாவர் என்க—தெரியிழாய் !
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்."

(உரை.) தெரி இழாய் - தேர்ந்தெடுத்த அணிகலன்களை அணிந்தவளே! மண்டு பிணியால் வருந்து - மிகுந்த நோயினால் வருத்தப்படுகிற, பிற உறுப்பைக் கண்டு - மற்றைய உறுப்புக்களைப் பார்த்து, கண் - கண்களானவை, கலுழும்-அழும்; அதைப்போல், பெரியவர் - கல்வியறிவினாற் பெரியவர்கள், பிறர் நோய் கண்டு - பிறருக்கு வந்த துன்பத்தைப் பார்த்து, தம் நோய்போல் உள்ளம் எரியின் இழுது ஆவர் என்க - தமக்குவந்த நோய்போல நினைத்துத் தீயிடைப் பட்ட வெண்ணெய்போல் உருகுவர் என்று அறிந்து கொள்வாயாக!

(க - து.) அறிஞராயினோர் பிறர் துன்பத்தைத் தந்துன்பம் போல் எண்ணி வருந்துவர் என்க.

---

## உக கச்சியப்ப முனிவரும் கச்சிப்புலவர்களும்

சிவஞானமுனிவர் என்பவர் காஞ்சிப்புராணம் என்னும் நூலை இயற்றினர். அதனைக் காஞ்சிநகரத்தில் ஏகாம்பர நாதர் கோவிலில் அரங்கேற்றஞ் செய்யத் தொடங்கினர். அதில் ஏகாம்பர நாதர் வணக்கத்திற்குமுன் கூத்தப்பிரான் (நடராசர்) வணக்கம் பாடப் பட்டிருந்தது. அவ்வாறு பாடப் பெற்றிருப்பது தவறு என்று காஞ்சி நகரத்துப் புலவர்கள் பலர் எதிர்த்து உரையாடினர்.

அவர்கட்குத் தக்க அறிவு புகட்டவேண்டும் என்று எண்ணினர் சிவஞானமுனிவர். தம் மாணவர்களில் ஒருவராகிய கச்சியப்பர் என்பவரை அழைத்துக் காஞ்சிப் புலவர்களின் தடைக்கு விடைகொடுக்குமாறு கூறினர். அவர் சிவஞானமுனிவரிடம் இலக்கணநூலை நன்கு கற்றுத்தேர்ந்தவர். அவர் காஞ்சிப் புலவர்களின் மறுப்புக்குத் தக்கவாறு பதிலளித்தார்.

இலக்கண வல்லுநராகிய கச்சியப்பரிடம் காஞ்சிப் புலவர்கள் வாய்திறக்கவில்லை. வாய்திறந்து பேசத் தக்க இலக்கண அறிவும் அவர்கட்கு இல்லை. அவர்கள் அனைவரும் பெட்டிப் பாம்பாக அடங்கி விட்டனர். காஞ்சிப்புராண அரங்கேற்றம் மேற்கொண்டு தொடர்ந்து நடந்தது. அன்று காஞ்சிப் புலவர்கள் கச்சியப்பரிடம் வாய்திறக்க முடியாமற் போனதைக் கண்டு, காஞ்சிநகரத்து மக்கள் பெருவியப் புற்றனர்.

"எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்
எழுத்தறிவார்க் காணின் இலையாம்—எழுத்தறிவார்
ஆயுங் கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில்
வீயுஞ் சுரநீர் மிகை."

(உரை.) *சுரநீர்மிகை - விண்ணிலுள்ள கங்கையின் பெருக்கமானது, எழுத்து அறிவார் ஆயும் கடவுள் - எழுத்துக்களின் இயல்பை அறியும் பெரியோர்களால் ஆராயப்படும் சிவபெருமானது, அவிர்சடை முன் கண்ட அளவில் - விளங்குகின்ற சடையை எதிரே கண்ட அளவில், வீயும் - அடங்கிவிடும்; அதைப்போல், எழுத்து அறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும் - இலக்கண நூலை அறியாதவருடைய மற்றக் கல்வியினது பெருக்கம் முழுவதும் எழுத்து அறிவார்க் காணின் இலை-இலக்கண நூலை அறிந்தவரைக் கண்டால் இல்லாமற் போகும்.*

(க - து.) *இலக்கணம் படியாதவருடைய கல்வி இலக்கணம் படித்தவருக்குமுன் பயன்படாமற் போகும்.*

---

## உ௨. நந்தனார்

நந்தனார் என்பவர் சோழநாட்டிலே ஆதனூர் என்னும் ஊரிலே புலையர் குலத்தில் தோன்றினார். அவருக்குச் சிவபெருமான் இடத்திலே அன்புண்டாகி வளர்ந்தது. நாள்தோறும் சிவ வழிபாடு செய்து கொண்டிருந்தார். அதனால் இறைவன் திருவருள் அவருக்கு உண்டாயிற்று. அவர் தில்லையில் கூத்தியற்றும் கூத்தப்பிரானைப் போற்றி வணங்க விரும்பினார். புறப்பட்டுத் திருத்தில்லையை அடைந்தார். கோயிலுக்குள் போகமுடியாத படியால் வருத்த முற்றுத் திருவீதியை வலஞ்செய்து போற்றிக்கொண்டிருந்தார்.

அவருடைய மெய்யன்புக்கு மகிழ்ந்த பொன்னம்பலவாணர் நந்தனாரைத் தூயவராக்கித் தம்மிடம் அழைத்துவரும்படி தில்லைவாழ் அந்தணர்களுக்குக் கட்டளையிட்டார். அவர்களும் அவ்வாறே வேள்வித் தீயினால் நந்தனாரைத் தூய்மைப்படுத்தி அம்பலவாணரிடம் அழைத்துச் சென்றார்கள்.

கடவுளிடத்திலே கொண்ட அன்பாகிய அறிவினால் நந்தனார் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவராகிப் பெருமை யடைந்தார். இக் காலத்தில் கல்வியறிவிற் சிறந்த தாழ்ந்த குலத்தினரும் உயர்ந்த பதவியிலே அமர்ந்திருத்தலைக் காண்கிறோம். ஆகவே ஒவ்வொருவருடைய பெருமைக்கும் அறிவே காரணமாகும்.

" ஆக்கும் அறிவான் அலது பிறப்பினுல்
மீக்கோள் உயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவரார் அரவின் பருமணிகண் டென்றும்
கவரார் கடலின் கடு."

(உரை.) அரவின் பருமணி கண்டு நீக்குபவர் ஆர் - நஞ்சை யுடைய பாம்பினிடத்திலே உண்டாகிய பருத்த மாணிக்கத்தைக் கண்டு நீக்குவோர் யாவர்? ஒருவரு மிலர், கடலின் கடு என்றும் கவரார் - பாற்கடலின் இடத்தில் உண்டாகிய நஞ்சை ஒருநாளும் கொள்வாரும் இல்லை, ஆதலால்; மீக்கொள் உயர்வு இழிவு - மேலாகக் கொள்கின்ற உயர்வையும் கீழாகக் கொள்கின்ற இழிவையும், ஆக்கும் அறிவான் அலது பிறப்பினுன் வேண்டற்க - நன்மையை உண்டாக்குகின்ற அறிவினுல் அல்லாமல் சாதியினுல் கொள்ளுதல் வேண்டாம்.

(க - து.) எக் குலத்தினராயினும் அறிவுடையவரை உயர்ந்தவராகவும், அஃதில்லாதவர்களைக் கீழானவர்களாகவும் கொள்ள வேண்டும்.

---

## உ௲. தவத்தை இழந்த முனிவர்

ஒரு முனிவர் பன்னிரண்டு ஆண்டுகள் தொடர்ந்து ஓரிடத்தில் அமர்ந்து தவஞ்செய்துகொண்டிருந் தார். அவருடைய பெயர் தீவண்ண முனிவர். சில சம யங்களில் அம் முனிவர் தவஞ்செய்தலை விட்டுவிட்டு வெளிநாட்டமாக அமர்ந்திருப்பதும் உண்டு.

அம் முனிவர் தவஞ்செய்துகொண்டிருந்த இடம் ஒரு சிறுகாடு. அக் காட்டை யடுத்த சிற்றூர்ப் பெண் கள் அந்தக் காட்டுககுத்தான் அடிக்கடி விறகு பொறுக்கச் செல்வார்கள்.

வெகு காலம் வரையில் அம் மாதர்களைக் கண் ணெடுத்துப் பாராதிருந்த முனிவர் ஒருநாள் ஒரு பெண்ணைப் பார்த்து உரையாடினார். பிறகு அடிக்கடி விறகு பொறுக்கவரும் பெண்களிடம் பேசும் பழக்கம் தீவண்ண முனிவருக்கு ஏற்பட்டது.

பெண்களின் உரையாடல் முனிவர் உள்ளத்தை மெதுவாகக் கவர்ந்ததை முதலில் அவர் அறிய வில்லை. இரண்டொரு மொழிகள் பேசுவதால் யாதும் மோசம் வந்துவிடாது என்று முதலில் அவர் எண் ணினார். பிறகு நெடுநேரம் விறகு பொறுக்கும் பெண்களோடு பேசும் பழக்கமும் அவர்களோடு போய் விறகு பொறுக்கிக் கொடுக்கும் பழக்கமும் ஏற்பட்டது.

பிறகு முனிவர் நெடுநாள் அந்த இடத்தில் தவஞ் செய்து கொண்டிருக்கவில்லை. ஒருபெண்ணைத் திரு

மணஞ்செய்து கொண்டு இல்லறம் நடத்தத் தொடங்கி விட்டார்.

"பகர்ச்சி மடவார் பயிலநோன் பாற்றல்
திகழ்ச்சி தருநெஞ்சத் திட்பம்—நெகிழ்ச்சி
பெறும்பூரிக் கின்றமுலைப் பேதாய் பலகால்
எறும்பூரக் கற்குழியு மே."

(உரை.) பூரிக்கின்ற முலைப் பேதாய் - விம்முகின்ற தனங்களையுடைய பெண்ணே!, பலகால் எறும்பு ஊரக் கல் குழியும் - பலதரம் சிற்றெறும்புகள் ஊர்ந்து செல்லக் கருங்கல்லும் குழிந்து போகும்; அதுபோல, மடவார் பகர்ச்சி பயில - பெண்களிடத்தில் வாய்ப் பேச்சோடு பழகிக்கொண்டு வந்தாலும், நோன்பு ஆற்றல் திகழ்ச்சிதரும்-தவஞ்செய்யும் ஆற்றலானது மாறுபாட்டை அடையும், நெஞ்சத் திட்பம் நெகிழ்ச்சி பெறும் - மனத்தின் உறுதியானது தளர்ந்து போகும்.

(க - து.) தவஞ்செய்வோர் பெண்களிடம் பழகினால் அவர்களது தவம் அவமாகும்.



## ௨௪. கடோற்கசனும் துரியோதனனும்

துரியோதனன் எப்பொழுதும் பிறருடைய குற்றங்குறைகளை ஆராய்வதிலேயே நோக்கம் உடையவனாக இருந்தான். அவனுடைய உள்ளம் எப்போதும் பிறருடைய குற்றங் குறைகளைத்தான் எண்ணிக் கொண்டிருக்கும். துரியோதனனால் பாராட்டப் பெற்றவர்கள் எவருமே இலர்.

பாரதப் போர் நடந்துகொண்டிருந்தபோது ஒருநாள் கடோற்கசன் துரியோதனனிடம் சென்றான். தருமர் துரியோதனனுக்குக் கூறிய ஒரு செய்தியைச் சொல்லுதற்கே அவன் சென்றான். துரியோதனன் கடோற்கசனைக் கண்டதும் அவனுடைய குற்றம் குறைகளை ஆராயத் தொடங்கினான்.

கடோற்கசனிடத்திலே எத்தனையோ நல்ல குணங்கள் இருந்தன. ஆயினும் துரியோதனனுக்கு அந்த நல்ல குணங்கள் ஒன்றும் புலப்படவில்லை. கடோற்கசன் அரக்கி மகன் என்பதை மட்டும் எண்ணியவனாய், "அடா அரக்கி மகனே!" என்று ஆணவத்துடன் விளித்தான். அவ்வளவில் கடோற்கசனுக்கு மிகுந்த சீற்றம் உண்டாகிவிட்டது. அவன் துரியோதனனைப் பலவாறு வைதுவிட்டுத் திரும்பிச் சென்றான்.

அறிவிலிகள் மற்றவர்களுடைய குற்றங்குறைகளைத்தான் எடுத்துப் பேசுவார்கள் என்பதற்குத்

துரியோதனனே தக்க எடுத்துக்காட்டாக அமைந்தான்.

"உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கை விரும்புஞ் செழும்பொழில்வாய் வேம்பன்றே
காக்கை விரும்புங் கனி."

(உரை.) செழும் பொழில்வாய் - செழுமையாகிய சோலையினிடத்திலே, மலர்ச் சேக்கை வண்டு விரும்பும் - பூவாகிய மெத்தையை வண்டுகள் விரும்பும், வேம்பு அன்றோ காக்கை விரும்பும் கனி - வேப்பம் பழம் அன்றோ காக்கைகள் விரும்பும் பழம்; அதுபோல, இங்கு ஒருவர்க்குக் குணம் உண்டு எனினும் - இவ்வுலகத்திலே ஒருவர்க்கு நற்குணம் உள்ளதாயினும், கீழ்கொண்டு புகல்வது அவர் குற்றமே - கீழோர் எடுத்துப் பேசுவது அவருடைய குற்றமேயாகும்.

(க - து.) ஒருவனிடத்திலுள்ள நற்குணத்தையே மேலோர் எடுத்துப் பேசுவார்கள். தீக்குணத்தையே கீழோர் எடுத்துப் பேசுவார்கள்.

---

## ௨௫. அறிவிலியும் புலவனும்

ஓர் ஊரிலே ஒரு பெருஞ்செல்வன் இருந்தான். அவனுக்குத் தோட்டந் துரவுகளும் நிலபுலங்களும் கைப்பொருளும் மிகுதியாக அமைந்திருந்தன. அவன் ஒரு சிறிய அரசன்போல விளங்கி யிருந்தான். அவனுக்கு எவ்வளவு மிகுதியாகப் பொருள் அமைந்திருந்ததோ அதற்குத் தக்கபடி அறிவு பாழாகி இருந்தது.

அவனுக்கு ஏழை எளியவர்களையோ இரப்போர்களையோ கண்டால் அடியோடு பிடிக்காது. புலவர்களைக் கண்டால் தடியை எடுத்து விரட்டுவதற்கு அவன் ஆள்களை எப்பொழுதும பக்கத்திலேயே வைத்திருந்தான். அந்தப் பிசினனுடைய செய்தியை அறியாத ஒரு புலவர் அவன்மீது பாட்டு ஒன்று அருமையானதாகப் பாடிக்கொண்டு சென்றார். அப் பாட்டிலே அவனைக் காமதேனு என்றும், சிந்தாமணி என்றும், கற்பகவிருட்சம் என்றும், அரிச்சந்திரன் என்றும் புகழ்ந்து பாடியிருந்தார்.

செல்வன் பாட்டைக் கேட்டான். அவனுக்கு மிகுந்த சினம் உண்டாகி விட்டது. அந்தப் புலவரைப் பார்த்து, "ஓய் புலவரே! நீர் யாரைப் பார்த்து மாடு என்றும் கல் என்றும் மரம் என்றும் சொன்னீர். என்னை அரிச்சந்திரன் என்று சொல்லி யிருக்கிறீரே. நான் யாருடைய கையிலே பெண்டாட்டியை விற்றேன். நீர் பாடியிருக்கிற இந்த வசை என்னைவிட்டு ஒருநாளும் நீங்கப் போகிறதே இல்லை. உமக்குச் சரி

யான பாடம் கற்பிக்கச் செய்கிறேன் பாரும்," என்று கூறி வேலைக்காரர்களைக் கூப்பிட்டான்.

அவர்கள் விரைவாக வந்து ஆளுக்கு ஒரு தடியைத் தூக்கினார்கள். அடி மேலே விழுவதற்குள் புலவர் தலைதப்பியது தம்பிரான் புண்ணியம் என்று சிட்டாய்ப் பறந்து மறைந்து போனார். எல்லா இடங்களிலும் தக்க நன்கொடை பெறும் புலவர் மூடனிடம் சென்றதால் உயிரைக் காப்பாற்றுவதற்கு ஓடும்படியாக நேரிட்டது.

"கல்லா அறிவில் கயவர்பால் கற்றுணர்ந்த
நல்லார் தமதுகனம் நண்ணுரே—வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணாய் நொய்தாம்
புணையிற் புகுமொண் பொருள்."

(உரை.) வில் ஆர் கணையின் பொலியும் கருங்கண்ணாய்-வில்லோடு கூடிய அம்பைப்போல் [புருவத்தோடு கூடி] விளங்குகின்ற கருமையாகிய கண்களையுடையவளே, புணையில் புகும் ஒண் பொருள் நொய்து ஆம் - [கனமற்ற] தெப்பத்திலே சேர்ந்த கனமுடைய பொருளும் இலகுவாம்; அதைப்போல், கல்லா அறிவின் கயவர் பால் - கல்லாத அறிவினையுடைய மூடரிடத்திலே சேர்ந்தால், கற்று உணர்ந்த நல்லார் தமது கனம் நண்ணார் - கற்றறிந்த நல்லோர் தமது பெருமையை இழப்பர்.

(க - து.) கற்றறிந்தவர் மூடரிடத்திலே சென்றால் தமது பெருமையை இழப்பர்.

## உ௬. ஆளவந்தாரும் புலவனும்

முன்னாளில் ஆளவந்தார் என்னும் பெயருடைய அறிஞர் ஒருவர் இருந்தார். நல்லூழின் காரணத்தினால் அவர் சிறு குழந்தையாக இருக்கும்போதே எல்லாக் கலைகளிலும் வல்லவராக விளங்கினார். அவருடைய புகழ் திக்குகள்தோறும் பரவியது. ஒரு பெரும் புலவர் ஆளவந்தாரின் பெருமையைக் கேட்டுப் பொறாமை கொண்டார்.

தம்முடைய அறிவாற்றலால் ஆளவந்தாரைத் தோற்கடித்துப் புகழடையவேண்டும் என்று எண்ணினார். புறப்பட்டு ஆளவந்தார் இருக்குமிடத்திற்கு வந்து சேர்ந்தார். ஆளவந்தாரைப் பார்த்தார். ஆளவந்தார் சிறு குழந்தையாகக் காணப்படவே அந்தப் புலவர் மிக எளிதாக எண்ணினார்.

சொற்போர் செய்யும் பொருட்டு அவையொன்று கூட்டப்பட்டது. பெரும்புலவர் ஆளவந்தாரைப் பார்த்துக், "குழந்தாய்! நீ பால் குடிப்பதை விட்டு விட்டாயா?" என்று இகழ்ச்சியாகக் கேட்டார். நடந்த சொற்போரிலே ஆளவந்தார் வெற்றியடைந்தார். பெரும் புலவர் தோல்வியடைந்து ஆளவந்தாரின் தாளில் வீழ்ந்தார். அதன் பிறகுதான் அவருக்கு யாரையும் உருவத்தைக்கொண்டு எளிதாக மதிக்கக்கூடாது என்னும் நல்லறிவு உண்டாயிற்று.

"உடலின் சிறுமைகண் டோண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார்—மடவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரோளிதான்
விண்ணளவா யிற்றே விளம்பு."

(உரை.) மடவரால் - இளமை பொருந்திய பெண்ணே!, ஒண் புலவர் உடலின் சிறுமை கண்டு - ஒள்ளிய புலவருடைய உடலின் சிறுமையைப் பார்த்து, கல்விக் கடலின் பெருமை கடவார் - அவரது கல்வியாகிய கடலின் பெருமையை ஒருவரும் கடக்கமாட்டார்கள், கதிர்காணும் ஒளி - கதிரவனுடைய ஒளியோடு கூடிக் காண்கிற கருமணி யொளியானது, கண் அளவு ஆய் நின்றதோ - தனக்கிடமாகிய சிறிய கண்ணின் அளவாக அடங்கி நின்றதோ, விண் அளவு ஆயிற்றோ விளம்பு - விண்ணின் அளவாகப் பரவி நின்றதோ நீ சொல்லுவாயாக.

(க - து.) உருவத்தாற் சிறியவரும் அறிவினாற் பெரியவராயிருப்பார்.

## ௨எ. குடிதாங்கி முதலியார்

பல ஆண்டுகளுக்கு முன்பு தொண்டை நாட்டிலே முதலியார் ஒருவர் இருந்தார். அவர் பலநூல்களைக் கற்றுணர்ந்தார். பிறருக்கு உதவிசெய்தலே பேரறம் என்று அவர் அறிந்தார். அவருக்கு விளைநிலங்கள் மிகுதியாக இருந்தன. முதலியார் அந்த நிலங்களில் தாமே வருந்திப் பயிர்த்தொழில் செய்தார். அவருக்கு வருவாய் நிரம்பக் கிடைத்தது.

முதலியாருடைய உறவினர்கள் மிகுந்த வறியவர்களாக இருந்தார்கள். அந்த வறியவர்களுக்கெல்லாம் முதலியார் தகுந்தபடி உதவிசெய்தார். அதனால் அந்த உறவினர்களும் நாளடைவில் முன்னுக்கு வந்து சிறந்து விளங்கினார்கள். முதலியார் உறவினர்கள் அனைவருடைய முன்னேற்றத்திற்கும் காரணமாக இருந்தபடியால் அவருக்குக் குடிதாங்கி முதலியார் என்று காரணப்பெயர் உண்டாயிற்று.

அவர் தம்மிடம் இருந்து உதவி பெற்றவர்கள்பால் எத்தகைய எதிர்உதவியையும் எதிர்பார்க்கவில்லை. முதலியார் தம்முடைய முயற்சியாலும் உதவியாலும் இவ்வாறு பெரும்புகழ் அடைந்தார்.

"கைம்மா றுகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயலுதவி தாஞ்செய்வர்—அம்மா
முளைக்கும் எயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதாம் மென்று."

(உரை.) முளைக்கும் எயிறு - முளைக்கின்ற பற்களானவை, நாவிற்கு - நாக்கிற்கு, வலியனதாம் மென்று முதிர்சுவை விளைக்கும்-கடினமாகிய உணவுப் பொருள்களைத் தாம் மென்று கொடுத்து மிகுந்த சுவையை உண்டாக்கும்; அதுபோல, கற்று அறிந்தோர் - கற்றறிந்தவர், கைம்மாறு உகவாமல் - எதிர் உதவியை விரும்பாமல், மெய் வருந்தித் தம்மால் இயல் உதவி தாம் செய்வர் - உடல் வருந்தித் தம்மால் இயன்ற உதவிகளைத் தாமே செய்வர்.

(க - து.) அறிவுடையவர் எதிர்உதவியை நாடாமலே பிறருக்குத் தம்மால் இயன்ற உதவிகளைச் செய்வார்கள்.

## உஅ. ஓர் அறிஞரும் இருசெல்வரும்

பல ஆண்டுகளுக்கு முன்பு தென்னாட்டிலே நல்ல பெருமாள் கவிராயர் என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார். பலரையும் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்று வாழ்க்கையை நடத்திவந்தார். ஒருநாள் இரண்டு செல்வர்களின்மேல் பாடல்கள் இயற்றிக் கொண்டு சென்றார்.

அவர்களில் ஒரு செல்வன் பெயர் அருளாழி. மற்றவன் பெயர் ஆனையப்பன். அருளாழி கல்வி யறிவும் நல்லொழுக்கமும் உடையவன். ஆனையப் பனோ அறிவு சிறிதும் இல்லாதவன். அவன் பிற ருக்கு மனம் இரங்கவும் மாட்டான். ஆனையப்பனு டைய செய்தி தெரிந்தும் கவிராயர் அவன்மீதும் பாட்டு இயற்றிக்கொண்டு சென்றார்.

நல்ல பெருமாள் கவிராயர் முதலில் அருளாழி யின் வீட்டிற்குச் சென்றார். அருளாழியின் பணி யாள் ஒருவன் பெருந்தவறு ஒன்றைச் செய்துவிட்ட படியால் அருளாழி மிகுந்த சினத்துடன் அவனை வைதுகொண்டிருந்தான். வீட்டிற்குள் அடியெடுத்து வைத்த புலவர் அருளாழி சினத்துடன் இருத்தலை அறிந்து திரும்பினார். ஆனால் அருளாழி வேறொரு பணியாளனை அனுப்பி அவரைக் கூப்பிடச் செய் தான். அவருடைய பாட்டைக் கேட்டு மகிழ்ச்சி யடைந்து அவரைப் போற்றியதுடன் இருநூறு வெண்பொற் காசுகள் நன்கொடையும் தந்து அனுப்பினான்.

இரண்டாவதாக ஆனையப்பன் வீட்டிற்குச் சென்றார். ஆனையப்பன் தன்னளவுக்கு வஞ்சகமில்லாமல் சாப்பிட்டு ஆனையைப் போலவே பெருத்திருந்தான். புலவர் சென்றபோது அவன் சாப்பிட்டுவிட்டு மனைவி மக்களுடன் மகிழ்ச்சியாக உரையாடிக்கொண்டிருந்தான். புலவர் இதுதான் நல்ல சமயம் என்று எண்ணித் தமது பாட்டைப் படித்தார். ஆனையப்பன் கவிராயரை முறைத்துப் பார்த்தான். "இங்குப் பணம் கொட்டிக் குவித்திருக்கிறதென்று எண்ணிக்கொண்டீரோ, போம்போம்," என்று விரட்டினான். தமக்குப் பூசை கொடாமல் விட்டதே பரிசாக எண்ணிக் கொண்டு புலவர் திரும்பிவிட்டார்.

" முனிவினும் நல்குவர் மூதறிஞர் உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர்—நனிவிளைவில்
காயினும் ஆகும் கதலிதான் எட்டிபழுத்
தாயினும் ஆமோ அறை."

(உரை.) மூதறிஞர் முனிவினும் நல்குவர் - பேரறிவுடையோர் சினமுள்ள காலத்திலும் கொடுப்பர், கயவர் உள்ளக் கனிவினும் நல்கார் - மூடர்களோ மன மகிழ்ச்சி உள்ள காலத்திலும் கொடுக்க மாட்டார்கள்; கதலி நனி விளைவு இல் காயினும் ஆகும் - வாழையானது மிக முற்றுதலில்லாத காயானாலும் பயன்படும், எட்டி பழுத்து ஆயினும் ஆமோ அறை-எட்டியானது பழுத்தாலும் பயன்படுமோ நீ சொல்வாயாக.

(க - து.) அறிவுடையோர் சினமுள்ள காலத்திலும் கொடுப்பர். மூடர்களோ மகிழ்ச்சியுள்ள காலத்திலும் கொடுக்க மாட்டார்கள்.

## உசு. அப்பரும் அமணரும்

அப்பர் என்பவர் திருநாவுக்கரசு நாயனார் என்று வழங்கப் பெறுவார். சைவராக இருந்த அப்பர் சமண சமயத்தில் புகுந்து அச் சமயநூல்களைக் கற்றுத் தேறித் தருமசேனர் என்னும் பெயருடன் சிறந்து விளங்கினார். திருவருட் செயலால் மீண்டும் சைவ சமயத்தை அடையும்பேறு அவருக்கு உண்டாகவே சைவராகிச் சிவபெருமானுடைய திருவடிகளிலே அழுத்தமான பற்றுக்கொண்டு மெய்யறிவாளராக விளங்கினார்.

சமணர்கள் அதனைக்கண்டு பொறாமை கொண்டார்கள். அப்பருக்கு அல்லல்கள் பல செய்யத் தொடங்கினார்கள். கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலிலே போட்டார்கள்; நீற்றறையிலே தள்ளிப் பூட்டினார்கள்; நஞ்சை உண்ணச் செய்தார்கள். மேலும் பலவாறு வருத்திப் பார்த்தார்கள். சிவபெருமானுடைய திருவடிகளிடத்திலே பற்றுக் கொண்டமையின் எதற்கும் கலங்காமல் மனவன்மையுடன் அப்பர் விளங்கினார்.

யாகச் சமணர்கள் அப்பரை வருத்துவதால் அவர் சிறிதும் வருந்தமாட்டார் என்று கண்டு தமது வீண்செயலை விட்டுவிட்டார்கள்.

"உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோர்
அடுக்கும் ஒருகோடி யாக—நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பணிமொழியாய் அஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான்."

(உரை.) பண்ணின் புகலும் பணிமொழியாய் - பண்ணைப் போலப் பேசுகின்ற குளிர்ச்சி பொருந்திய சொல்லை உடையவளே!, மதிமான் - திங்களின் இடத்தில் உள்ள மானானது, மண்ணில் புலியை அஞ்சுமோ - நிலவுலகில் இருக்கிற புலிகளுக்கு அச்சத்தை யடையுமோ?, அடையாது; அதைப்போல், நெஞ்சு ஓங்கு பரத்து உற்றோர் - தம்முடைய மனம் உயர்ந்த பரம்பொருளின் இடத்திலே அழுந்தப்பெற்ற ஞானிகள், உடற்குவரும் இடர் அடுக்கும் ஒருகோடி ஆக - தம்முடைய உடம்புக்கு வருந் துன்பங்கள் அடுக்கிச் சொல்லப்படும் ஒருகோடி அளவாக வந்தாலும், நடுக்கம் உறார் - அச்சத்தை அடையார்.

(க - து.) கடவுளின் இடத்திலே மனம் அழுந்தப் பெற்றவர்கள் எவ்வளவு பெருந் துன்பங்களுக்கும் அஞ்சமாட்டார்கள்.

## ௯௦. தருமஞ்செய்த தனவான்

பல்லாண்டுகட்கு முன்னே நல்லியக்கோடன் என்னும் பெயருடைய செல்வன் ஒருவன் தென்னாட்டிலே வாழ்ந்திருந்தான். அவனுக்குக் கணக்கற்ற பொருள் இருந்தது. அவன் நீண்டநாள் வரையில் யாதோர் அறமுஞ் செய்யவில்லை. தான்மட்டும் உண்டு உடுத்து இன்பவாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தான்.

ஒருநாள் அந்த நல்லியக்கோடனுடைய இல்லத்திற்கு ஒரு பெரியவர் வந்தார். அவருடைய பெயர் **பொய்சொல்லா மெய்யர்.**

அவர் நல்லியக்கோடனுடைய தன்மைகளையெல்லாம் உணர்ந்து அவனைப் பார்த்து, "அப்பா! செல்வா! நாம் இவ்வுலகில் நெடுங்காலம் வாழ்ந்திருக்க மாட்டோம்; எந்தக் கணத்திலும் நம்முடைய உயிர் இந்த உடலைவிட்டு நீங்கிப்போகும். அவ்வாறு நீங்கிப் போய் விட்டால் பிறகு இந்தச் செல்வத்தில் நமக்கு எத்தகைய உரிமையும் உண்டாக மாட்டாது. உயிர் தான் செய்துள்ள நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப மறுபிறப்பை அடையும். நீ இறந்த உடன் உன் உறவினர்கள் கோவணத்தையும் அவிழ்த்துக்கொண்டு உன்னைக் கொளுத்தி விடுவார்கள்," என்று அறிவுரை கூறிவிட்டுச் சென்றார்.

அவர் உரைகளைக் கேட்ட நல்லியக்கோடனுக்கு மிகுந்த அச்சம் உண்டாகியது. அவன் அன்றுமுதல் பலவகையான அறங்களைச் செய்து தான் செல்லும் வழிக்கு உறுதி தேடிக்கொண்டான்.

"கொள்ளுங் கொடுங்கூற்றம் கொல்வான் குறுகுதன்முன்
உள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே—வெள்ளம்
வருவதற்கு முன்னர் அணைகோலி வையார்
பெருகுதற்கண் என்செய்வார் பேசு."

(உரை.) *கொள்ளும் கொடும் கூற்றம் கொல்வான் குறுகுதல் முன் - உயிரைக் கொண்டு செல்கின்ற கொடுமையை உடைய நமனானவன் கொல்லும்படி வருவதற்கு முன், உள்ளம் கனிந்து அறம் செய்து உய்க - மனம் நெகிழ்ந்து அறங்களைச் செய்து பிழைக்கக் கடவாய்; வெள்ளம் வருவதற்கு முன்னர் அணைகோலி வையார் - வெள்ளம்வருவதற்கு முன்னே கரையைக் கட்டிவைக்காதவர்கள், பெருகுதற்கண் என்செய்வார் பேசு-வெள்ளம் பெருகிவரும்போது யாது செய்வார் நீ சொல்வாயாக.*

(க - து.) *சாக்காடு நேர்வதற்கு முன்னே அறத்தை விரைந்துசெய்தல் வேண்டும்.*

---

## ௩௧. எளியவனைக் காத்த இராமலிங்க அடிகள்

இராமலிங்க அடிகள் என்னும் பெரியார் எல்லா உயிர்களின் இடத்தும் இரக்கம் உடையவர். பிறர் துன்பப்படுவதைக் கண்டால், எவ்வாறேனும் அவர்களுடைய துன்பத்தைப் போக்குதற்கு விரைந்து முயல்வார். ஒருநாள் அடிகள் ஓர் ஊரின்வழியே சென்று கொண்டிருந்தார்.

அங்குப் பலபேர் ஓர் எளிய மனிதனை மரத்திலே பிணைத்துவிட்டுக் கழிகளால் தாக்கிப் புடைத்துக் கொண்டிருந்தனர். அந்த எளியவனோ கதறிக் கூச்சலிட்டுக்கொண்டிருந்தான். இரங்கத்தக்க அந்தக் காட்சியை இராமலிங்க அடிகள் கண்டார். விரைந்து ஓடினார்; அடித்துக்கொண்டிருந்தவர்களைத் தடுத்து மேலும் அவர்கள் அவனைப் புடைக்காமல் நிறுத்தினார். அவ்வாறு அடித்ததைத் தடுத்தபோது அடிகளின் மேலேகூட இரண்டோரடிகள் விழுந்தன.

இராமலிங்க அடிகள் தம்மீது விழுந்த அடிகளைப் பொருட்படுத்தவில்லை. அவ்வாறு அவனை அடித்ததுக்குக் காரணம் யாது என்று உசாவினார். அவன் ஒருவருடைய தோட்டத்திற் புகுந்து தேங்காய்களைக் களவுசெய்ததாகத் தெரியவந்தது. அடிகள் அவன் களவுசெய்த தேங்காயின் விலையைத் தாம் கொடுப்பதாகச் சொல்லி அவனை விட்டுவிடச் செய்தார்.

அந்த எளியவன் இராமலிங்க அடிகளை வாழ்த்திக் கொண்டு சென்றுவிட்டான். தேங்காய்க் கள்ளனைப் புடைத்தவர்களுக்கு இராமலிங்க அடிகளின் செயல் வியப்பை விளைத்தது.

" பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்—நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோல் அடிதன்மேல்
கைசென்று தாக்குங் கடிது."

(உரை.) நேர் இழாய் - தகுதிவாய்ந்த அணிகலன்களை அணிந்தவளே! மெய் சென்று தாக்கும் வியன்கோல் அடி - உடம்பிலே சென்று தாக்குகின்ற பெரிய கோலினுடைய அடியை, கை கடிது சென்று தன்மேல் தாங்கும் - கை விரைந்து போய்த் தன் மேலே ஏற்றுக் கொள்ளும்; அதைப்போல், பேர் அறிஞர்-பேரறிவு படைத்தவர்கள், பிறர் துயரம் வீரமொடு தாங்கி - வருத்துகின்ற பிறருடைய துன்பத்தை வீரத்தோடு தாம் ஏற்றுக்கொண்டு, காக்க விரைகுவார் - அவரைப் பாதுகாத்தற்கு முற்படுவார்கள்.

(க - து.) பெரியோர்கள் பிறர் துன்பத்தை விரைந்து சென்று நீக்குவர்.

---

## ௩௨. அறிவற்ற செல்வனின் அறம்

பல ஆண்டுகளுக்குமுன் சென்னைமாநகரிலே பெருஞ் செல்வன் ஒருவன் இருந்தான். ஆயினும் அவனுடைய அறிவு நல்ல அறிவு அன்று. அதனால் வெகுகாலம் வரையிலும் எத்தகைய அறமுஞ் செய்யா மலே அவன் காலங் கடத்திவந்தான். பெரும் பணக் காரனாகிய அவன் அறஞ்செய்யா திருத்தலைப் பார்த் துப் பலரும் அவனை இகழ்ந்துரைத்தார்கள். அதனால் அவன் வெளிப்பகட்டாக ஏதேனும் அறஞ்செய்ய வேண்டும் என்று முடிவுசெய்தான். செல்வன் தன் னுடைய பெயரால் அறச்சாலை ஒன்றை ஏற்படுத் தினான்.

அதில் எல்லோருக்கும் உணவு போடப்படும் என்று எங்கும் பறை யறைவித்தான். நகரில் சுற் றித் திரிந்த சோம்பேறிகளும், குறும்பர்களும், வம்பர் களும், கள்ளர்களும் செல்வனுடைய அறச்சாலையிலே வந்து குவிந்தார்கள். வேளைக்குவேளை சாப்பிட்டு விட்டுத் தங்களுடைய தில்லுமுல்லுகளைச் செய்து கொண்டு திரிந்தார்கள். நல்லறிவாளர்கள் சிலர் அந் தச் செல்வன் பொல்லாதவர்கட்கு உணவளித்துத் தீவினையாளனாதலைக் கண்டு உள்ளம் வருந்தினார்கள்.

நாளடைவில் அந்தச் செல்வனுடைய அறம் ஒன்றுக்கும் பயனில்லாமலே போய்விட்டது. அவனு டைய அறச்சாலையில் உண்டவர்கள் தீவினைகளைச் செய்து திரிந்தபடியால் செல்வனுந் தீவினைக்கு உள் ளானான். "பாத்திரம் அறிந்து பிச்சையிடு" என்

பதை முன்னரே உணர்ந்து கொள்ளாமற் போனேமே என்று உள்ளம் வருந்தினன்.

" பன்னும் பனுவல் பயன்தேர் அறிவிலார்
மன்னும் அறங்கள் வலியிலவே—நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றுன்."

(உரை.) நன்னுதால் - நல்ல நெற்றியை உடையவளே!, காழ் ஒன்று உயர் திண் கதவு - வயிரம் பொருந்திய உயர்ந்த வலிய கதவானது, தாழ் ஒன்று இலது ஆயின் வலி உடைத்தோ - ஒரு தாழ் இல்லாத தாயின் உறுதியை உடைய தாகுமோ; உடையதா காது அதைப்போல், பன்னும் பனுவல் பயன்தேர் அறிவு இலார் - சொல்லப்படுகின்ற நூல்களினது பொருளை அறியும் நல்லறிவு இல்லாதவர்கள் செய்யும், மன்னும் அறங்கள் வலி இலவே-மிகுதியான தருமங்கள் உறுதியில்லாதனவே யாம்.

(க - து.) நன்மை தீமைகளைப் பகுத்தறியும் அறிவில்லாதவர் செய்யும் தருமங்கள் பயன்படா.

---

## ௬௬. சொற்பொழிவாளர்கள்

ஒரு பேரவைக்கண் ஆண்டுவிழா நடைபெற்றது. அங்குப் புலவர் பெருமக்கள் பலர் சொற்பொழி வாற்றற்கு ஏற்பாடாயிற்று. புலமை நிரம்பப் பெறாத சிறியோர் சிலர் அப்பேரவைக்கண் தாமுஞ் சொற்பொழிவு செய்து பெருமை அடையவேண்டும் என்று எண்ணினர். சொற்பொழிவு செய்தலுக்குச் செயலாளர்களின் உடன்பாடும் பெற்றனர்.

சொற்பொழிவு செய்யவேண்டிய செய்தியைத் தக்க அறிஞர்களிடம் எழுதி வாங்கிப் பல நாட்கள் அல்லும் பகலும் நெட்டுருச் செய்தனர். பிறகு அதனைப் பாடம் ஒப்புவித்தலைப்போல் மற்றவர்களிடம் ஒப்புவித்துச் சரிபார்த்துக் கொண்டனர். சொற்பொழிவு செய்யவேண்டிய நாள்வந்தது. அறிஞர்கள் எழுந்து கடல்மடை திறந்தாற்போல் சடசட வென்று தங்கள் சொற்பொழிவுகளைச் செய்து முடித்து உட்கார்ந்தார்கள்.

பிறகு கற்றுக் குட்டிகள் சொற்பொழிவு செய்யத் தொடங்கினார்கள். அவைகளுக்குத் தொடைநடுக்கம் ஏற்பட்டு விட்டது. "நாம் பேசுவதில் என்ன தவறு நேருமோ? யார் என்ன சொல்வார்களோ?" என்று அஞ்சிக்கொண்டே உளறினார்கள். அதனைக் கண்டு அவையிற் கூடியிருந்த பொதுமக்கள் எள்ளி நகையாடினார்கள்.

"அந்தோ! தெரியாத்தனமாகச் சொற்பொழிவுக்கு வந்து சிக்கிக்கொண்டோமே," என்று மனம்

வருந்தி ஒருவாறு தமது சொற்பொழிவை முடித்துக் கொண்டு உட்கார்ந்தனர். பிறரால் இகழப் பெருமல் காத்துக்கொள்ளுங் கடமைப் பாடுடையவர்கள் சிறிய வர்கள் தாம் என்பது இன்று நன்ருகத் தெரிந்து விட்டது.

“ எள்ளா திருப்ப இழிஞர்போற் றற்குரியர்
விள்ளா அறிஞரது வேண்டாரே—தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல்.”

(உரை.) நீர் கட்டு குளம் தள்ளாக் கரை காப்பு உளது - நீரைக் கட்டிவைக்கின்ற சிறிய குளமே தள்ளப்படாத கரை காவலாக உள்ளது; அன்றிக் கடல் கரை காப்பு உளதோ - அதுவல்லாமல் பெரிய கடலானது கரை காவலாக உள்ளதோ; உள்ள தன்று அதுபோல, இழிஞர் எள்ளாது இருப்பப் போற்றற்கு உரியர் - அறிவில்லாத சிறியோர் தம்மைப் பிறர் இகழா திருக்கும்படி காக்கப் படுதற்கு உரியவராவர், விள்ளா அறிஞர் அது வேண்டார்- நீங்காத அறிவையுடைய பெரியோர் அவ்வாறு காக்கப்படுதலை வேண்டார்.

(க - து.) பிறர் இகழாமல் காத்துக் கொள்ளற் குரியோர் சிறியோரே அன்றிப் பெரியோர் அல்லர்.

## ௩௪. மெய்ப்பொருளாரும் முத்திநாதனும்

திருக்கோவலூரில் மெய்ப்பொருள் நாயனர் என்னும் அரசர் அரசாட்சி செய்துகொண்டிருந்தார். முத்தி நாதன் என்னும் அரசன் மெய்ப்பொருள் நாயனருக்குப் பகைவனாக இருந்தான். மெய்ப்பொருள் நாயனர் சீரிய அறிவும் புகழும் உடையவர். சிவ பெருமான் இடத்தும் சிவனடியார்களிடத்தும் பேரன்பு உடையவர். முத்திநாதனே அறிவற்ற மூடனாக இருந்ததுடன் மூர்க்கனாகவும் இருந்தான்.

மெய்ப்பொருள் நாயனருக்கும் முத்திநாதனுக் கும் பலமுறை போர் மூண்டது. ஒவ்வொரு முறையும் முத்திநாதன் புறங்காட்டி யோடினன். பலமுறை புறங்காட்டி யோடிய முத்திநாதன் சூழ்ச்சியினால் மெய்ப்பொருள் நாயனரை வெல்ல எண்ணினன். சிவனடியார்போல் கோலம் பூண்டு சென்று மெய்ப் பொருள் நாயனருக்குச் சிவாகமத்தைப் போதிப்ப தாகச் சொல்லிக் கொன்றுவிட்டான்.

வாயிற் காவலாளர் முத்திநாதனைப் பிடித்துக் கொலை செய்யத் தொடங்கினர்கள். மெய்ப்பொருள் நாயனர், "சிவனடியாரைக் கொலைசெய்தபழி நமக்கு நேரக்கூடாது. இந்தச் சிவனடியாருக்கு எத்தகைய துன்பமும் நேராமல் வெளியே கொண்டுபோய் விட்டு விடுங்கள்," என்று கூறினர். முத்திநாதன் நலத் துடன் வெளியேறிய செய்தி தெரிந்த பின்னரே மெய்ப்பொருள் நாயனரின் உயிர் நீங்கியது.

அறிவுடையோரே யல்லாமல் அறிவற்றவர்கள் தமக்கு நேரும் பழிக்குச் சிறிதும் அஞ்சமாட்டார்கள் என்பது மூத்திநாதனிடத்திலே நன்கு பெறப் பட்டது.

"அறிவுடையா ரன்றி அதுபெறார் தம்பால்
செறிபழியை அஞ்சார் சிறிதும்—பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள்விழியே அன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோஇருளைக் கண்டு."

(உரை.) பிறைநுதால் - பிறை போலும் நெற்றியை உடையவளே!, வண்ணம் செய் வாள்விழியே அன்றி-அழகு செய்கின்ற ஒளியை உடைய கண்களே யல்லாமல், மறை குருட்டுக்கண் - ஒளி மறையப் பெற்றுள்ள குருட்டுக் கண்களானவை, இருளைக் கண்டு அஞ்சுமோ - இருளைப் பார்த்து அச்சத்தை அடையுமோ? அஞ்ச மாட்டா; அதைப் போல், அறிவுடையார் அன்றி - அறிவுடையவர்களே யல்லாமல், அது பெறார் - அவ்வறிவைப் பெறாத மூடர், தம் பால் செறிபழியைச் சிறிதும் அஞ்சார் - தமக்கு நேரும் பழிக்கு சிறிதும் அஞ்ச மாட்டார்கள்.

(க - து) அறிவுடையோர் பழிக்கு அஞ்சுவரே யல்லாமல் மூடர்கள் அஞ்ச மாட்டார்கள்.

---

## ௩௫. பாட்டருமை அறியாத காட்டெருமை

ஓர் அரசன் அறிஞர்களைப் போற்றுவதில் மிகவுஞ் சிறந்து விளங்கினான். அவன் சாகும் நிலையில் இருந்தபோது ஒரு புலவர் அருமைவாய்ந்த செய்யுள் ஒன்றை இயற்றிக் கொண்டுவந்து அவனிடம் படித்தார். அதனைக்கேட்டு அரசன் மிகுந்த களிப்படைந்தான். புலவருக்கு மிகுந்த பொருள் கொடுக்குமாறு தன்னுடைய தம்பிக்குக் கட்டளையிட்டுவிட்டுத் தான் இறந்து போனான்.

அரசனுடைய தம்பியோ கல்வி யறிவற்றவன். ஒன்றுமே தெரியாத முழுமூடன். "பாட்டருமை அறியாத காட்டெருமை," என்று அவனைப் புலவர்கள் இகழ்வர். அவன் புலவருக்குச் சிறிது பொருள் கொடுகக முற்பட்டான். அவன் கொடுக்கவந்த பொருள் மிகவும் குறைவாக இருந்த படியால், புலவர் அப் பொருள் அற்பம் என்று கூறினார். உடனே அந்த அரசமூடன் புலவருடைய பாட்டை யெழுதிய ஏட்டை எடுத்துப் புலவருடைய தலையிற் போட்டு, "உம்முடைய பாட்டை நீரே எடுத்துக்கொண்டு போம். அஃது எனக்கு வேண்டாம்," என்று கூறி விட்டான்.

புலவர் அவனுடைய மடமையைப் பார்த்து நகைத்துக் கொண்டே போய்விட்டார்.

"கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர் தாம் என்றும் மதியாரே—வெற்றிநெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம்."

(உரை.) வெற்றி நெடும் வேல் வேண்டும் வாள் விழியாய் - வெற்றியை உடைய நெடிய வேற்படை விரும்புகின்ற ஒளி பொருந்திய கண்களை உடையவளே!, பால் வாழைப் பழம் வேண்டும் - பாலானது தன்னைப் போல் இனிப்புள்ள வாழைப் பழத்தை விரும்பும், புளிங்காடி வேண்டா-புளிப்பையுடைய காடிநீரானது வாழைப் பழத்தை விரும்பாது; அதுபோல, கற்ற அறிவினரை மேன் மக்கள் காமுறுவர் - கற்றறிவுடையவர்களை மேலோர் விரும்புவர்; மற்றையர் என்றும் மதியார் - கீழோர்கள் அறிவுடையோரை எக்காலத்திலும் மதிக்க மாட்டார்கள்.

(க - து.) கல்வி யறிவுடையவர்களை மேன்மக்களே விரும்புவர்; கீழ்மக்கள் விரும்ப மாட்டார்கள்.

---

## ௩௯. தீயாரை விரட்டிய செல்வன்

ஒரு பெருஞ்செல்வன் பல வகையான அறங்களைச் செய்துகொண்டிருந்தான். அவன் அறஞ் செய்யும்போது தன்னிடம் வந்தவர்களுக் கெல்லாம் எதனையுங் கொடுத்துவிட மாட்டான். ஒருவேளை உணவு போடுவதாயினுஞ் சரி, சாப்பாட்டிற்கு வந்தவர் என்னசெய்துகொண் டிருக்கிறார் என்று உசாவி அவருடைய வரலாறு முழுவதையுந் தெரிந்து கொண்டு விடுவான்.

வந்திருப்பவர் நல்லவர் அல்லர் என்று அவனுடைய உள்ளத்திற்குப் பட்டால் யாதுங் கொடுக்கவே மாட்டான். "உங்களுக்கு ஏன் தண்டமாகக் கொடுக்க வேண்டும்? உங்களுக்குக் கொடுப்பது வீணாகும்," என்று கூறி அவர்களை விரட்டிவிடுவான். அவனுடைய இத்தகைய செயலால் அவனிடம் ஏதும் பெற்றவர்கள் நல்லவர்களாகவே இருந்தனர்.

அச் செல்வனுடைய தன்மையைக் கண்டோர் "அவன், 'பாத்திரமறிந்து பிச்சையிடு' என்பதற்கு, ஏற்ப நடந்து கொள்ளுகிறான்," என்றுகூறி அவனைப் பாராட்டினார்கள்.

" தக்கார்க்கே ஈவர் தகார்க் களிப்பார் இல்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர்—எக்காலும்
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய்."

(உரை.) எக்காலும் நீர் நெல்லுக்கு இறைப்பதே அன்றி - எக் காலத்தும் நீரை நெற்பயிருக்கே இறைப்ப தல்லாமல், காட்டு முளி புல்லுக்குப் போய் இறைப்பரோ - காட்டினிடத்திலே உலரும் புல்லுக்குப் போய் இறைப்பார்களோ, இறைக்க மாட்டார்கள்; அதைப் போல், தக்கார்க்கே ஈவர் தகார்க்கு அளிப்பார் இல் என்று - தகுதியுடையவருக்கே கொடுப்பார்; தகுதியற்றவர்களுக் குக் கொடுப்பவர் இல்லையென்று அறிந்து, விழுமியோர்-மேலோர், மிக்கார்க்கு உதவார் - தீயவர்களுக்குக் கொடுக்க மாட்டார்கள்.

(க - து.) மேலோர்கள் தகுதியுடையவர்களுக்குக் கொடுப் பார்களே அல்லாமல் தகுதியற்றவர்களுக்குக் கொடுக்க மாட் டார்கள்.

## ௩௭. வடமொழிப் புலவனும் வசைகவியும்

பாண்டி நாட்டிலே வசைகவியாண்டான் என்னும் பெயருடையவர் ஒருவர் இருந்தார். அவர் முதலில் கல்வி யறிவில்லாதவராகத்தான் இருந்தார். பிறகு தேவியின் திருவருளால் கல்வியறிவு கைவரப்பெற்றுப் பெருஞ் சிறப்புடன் விளங்கினார். அவர் வாயினால் யாது கூறினும் கூறியபடியே நடக்கும். ஒருவருக்குத் தீமைசெய்ய வேண்டும் என்னும் நோக்கமில்லாமலே ஒரு தீய மொழியைக் கூறிவிட்டாலும் போதும்; உடனே தீமை ஏற்பட்டுவிடும்.

அவர் ஒருநாள் தந்தையைப் பார்த்துச், "சினுங்குதற்குத் தலைப்பட்டாயே," என்று முடியும் ஒருசெய்யுளைப் பாடினார். தலைப்பட்டாய் என்றால் தொடங்கினாய் என்னும் பொருளில்தான் சொன்னார். ஆயினும் சொல்லப்பட்டவர் தலைவெடித்து மாண்டே போனார்.

இத்தகைய பெருமை வாய்ந்த புலவரிடம் வடமொழிப் புலவன் ஒருவன் வந்தான். "நான் வடமொழியில் உள்ள நூல்களையெல்லாம் நன்கு படித்திருக்கிறேன்; எனக்கு வியாகரணமும் தெரியும். கல்வியில் என்னை யாராலும் வெல்லமுடியாது. நீ என்னோடு சொற்போர் தொடங்கு; என்னுடைய பெருமையை உனக்குக் காட்டுகிறேன்," என்று தன்னையே பலவாறு புகழ்ந்து பேசினான்.

இதைப் பார்த்த வசைகவியாண்டான் கவிராயர், ஒரு தேங்காயைக் கொண்டு வந்தார். வடமொழி வல்லானுக்கு முன்னே வைத்தார். "துண்டு துண்டு துண்டு துண்டு," என்று சொன்னார். இவர் எத்தனை

துண்டுகள் சொன்னாரோ அத்தனை துண்டுகளாகத் தேங்காய் உடைந்து சிதறிப் போயிற்று. கவிராயர் அத் தேங்காயை ஒன்றுஞ் செய்யவில்லை. அது தானாகவே உடைந்து போய்விட்டது.

கவிராயர் வடமொழி வல்லானைப் பார்த்துத், "தேங்காய் பட்டபாட்டைப் பார்த்தாயா? இதைப் போல் உன் தலையும் உடையுமாறு செய்வேன். நீயும் இப்படிச் செய்வாயா?" என்று கேட்டார். வடமொழி வல்லானுக்கு மிகுந்த நடுக்கம் உண்டாகி விட்டது. சிறிது நேரத்திற்கு முன் தன்னைப் புகழ்ந்து பேசிய அவன், "ஐயா என்னை ஒன்றுஞ் செய்துவிடா தீர்கள்," என்று கெஞ்சி வணங்கி ஓட்டம் பிடித்தான்.

"பெரியார்முன் தன்னைப் புனைந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழும்—தெரியாய்கொல்
பொன்னுயர்வு தீர்த்த புணர்முலையாய் விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து."

(உரை.) பொன் உயர்வு தீர்த்த புணர் முலையாய் - திருமகளுடைய உயர்வை அழகினாலே போக்கிய நெருங்கிய தனங்களை யுடையவளே, பெரியோர்முன் தன்னைப் புனைந்து உரைத்த பேதை - பெரியார் முன்னே தன்னைச் சிறப்பித்துச் சொல்லிய மூடன், உயர்வு தரியாது அகன்று தாழும்-மேன்மையானது தன்னிடத்திலே அமையப் பெறாமல் நீங்கித் தாழ்வை அடைவன், விந்தமலை தாழ்ந்து தன் உயர்வு தீர்ந்தன்று - அகத்தியர் முன்னே தன்னைப் பெருமையாகப் பேசிய விந்தமலையானது தாழ்ச்சியை அடைந்து தன் பெருமையைப் போக்கியது, தெரியாய் கொல்-நீ அதனை அறியமாட்டாயா?

(க - து.) பெரியோர்முன் தன்னைப் புகழ்ந்துரைத்தவன் தாழ்வையடைவான்.

## ௬அ. அரசனும் அவனுடைய நண்பர்களும்

முன்னாளில் தமிழ்நாட்டில் களப்பாளன் என்னும் பெயருடைய அரசன் ஒருவன் அரசியற்றிக்கொண்டிருந்தான். அவனுக்கு இரண்டு நண்பர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் பெயர் பனம்பாரன் மற்றொருவன் பெயர் பல்லவன். பனம்பாரன் கல்வியறிவுகளிற் சிறந்தவன். அவனுடைய ஒவ்வொரு மொழியும் பயன் செறிந்ததாக இருக்கும்.

பல்லவனோ கல்விகேள்விகளில் அவ்வளவு வல்லவனும் அல்லன் நல்லவனும் அல்லன்; களப்பாளன் பல்லவனோடு பழகுதலை அரசனுடைய உறவினர்களும் பிறரும் வெறுத்தனர். பல்லவன் உள்ளத்தில் கள்ளங்கபடு இருத்தலைக் கண்ட பனம்பாரன் சமயங் கிடைத்தபோதெல்லாம், "பல்லவன் நட்பு அல்லலை விளைவிக்கக் கூடும். ஆதலின் பாதுகாப்பாக இருந்து கொள்ள வேண்டும்," என்று வற்புறுத்திக்கொண்டே இருந்தான்.

பல்லவன்மீதுகொண்ட அன்பினால் களப்பாளன் பல்லவனை வெறுக்காமலே நடந்து வந்தான். பல்லவனோ களப்பாளனுடைய அரசியல் மறைமுகச் செய்திகளை யெல்லாம் களப்பாளனுடைய பகைவன் ஒருவனுக்குச் சொல்லி அவன் படைதிரட்டிக் கொண்டு போர்க்கு வருமாறு செய்துவிட்டான். படைதிரட்டுஞ் செய்தியறிந்த பிறகே களப்பாளன் விழிப்படைந்தான். இப்பொழுது யாதுசெய்வதென்று பனம்பாரனை உசாவினான்.

பனம்பாரன் களப்பாளனுக்கு நல்ல சூழ்ச்சிகளைச் சொல்லிக் கொடுத்துப் பகைவனைத் தோற்கடிப்பதற்கு ஏற்பாடு செய்தான். இருதிறத்தினருக்கும் போர் நிகழ்ந்தது. பல்லவன் சிறைபிடிக்கப்பட்டான். எதிரியாக எதிர்த்துவந்தவன் களப்பாளனுக்கு முன்னிற்க முடியாமல் புறங்காட்டி யோடினன். அதன் பிறகுதான் களப்பாளனுக்குத் தீயவர் நட்பு தீமையை அளிக்கும் என்பது தெரிந்தது.

"நல்லார் செயுங்கேண்மை நாள்தோறும் நன்றாகும்
அல்லார் செயுங்கேண்மை ஆகாதே—நல்லாய்கேள்
காய்முற்றின் தின்தீங் கனியாம் இளந்தளிர்நாள்
போய்முற்றின் என்னாகிப் போம்."

(உரை.) நல்லாய் கேள் - நற்குணத்தை யுடையவளே கேட்பாயாக!, காய் முற்றின் தின்தீம் கனி ஆம்-காயானது முற்றினால் உண்டற்குரிய இனிய கனியாகும், இளந்தளிர் நாள் போய் முற்றின் என் ஆகிப்போம்-இளந்தளிரானது நாள் சென்று முற்றினால் யாதாகிப் போம்; அதைப்போல், நல்லார் செயும் கேண்மை - நல்லவர்கள் செய்யும் நட்பானது, நாள்தோறும் நன்று ஆகும் - நாள் தோறும் நன்றாகி வளரும், அல்லார் செயும் கேண்மை ஆகாது-அல்லாதவர்கள் செய்யும் நட்பானது நல்லதாக மாட்டாது.

(க - து.) நல்லோர் நட்பு நாளாக நாளாக இனிதாகும். தீயோர் நட்பு அவ்வாறு ஆகமாட்டாது.

## ௩௪. மன்னனும் மனிதக் குரங்கும்

ஓர் அரசன் வேட்டைக்குச் சென்றான். வேட்டையில் மனிதக் குரங்கு ஒன்று பிடிபட்டது. அரசன் அதனைத் தன்னுடன் அரண்மனைக்குக் கொண்டு சென்றான். அது பெரும்பாலும் மனிதனைப் போலவே இருந்தது. அதன் செயல்கள் அரசனுக்கு மிகுந்த வியப்பை விளைவித்தன. அவன் அதனைப் பெரிதும் போற்றிக் காப்பாற்றினான்.

அமைச்சர்கள் அரசனைப் பார்த்து, "அரசே! அந்த மனிதக் குரங்கினிடம் பாதுகாப்புடன் பழக வேண்டும். அது அறிவுடையதாகவும் உதவி செய்யக் கூடியதாகவும் இருந்தாலும், அதனை நம்பக்கூடாது. அது கல்வியறிவில்லாதது; நனக்குத் தெரியாமல் ஏதாவது தீமையைச் செய்துவிடும்," என்று அறிவுரைகள் கூறினார்கள். ஆயினும் அரசன் அமைச்சர்களுடைய அறிவுரையைப் பொருட்படுத்தவில்லை. அதற்கு எல்லாந் தெரியும் என்றே எண்ணிவிட்டான்.

ஒருநாள் நண்பகல் உணவுக்குப்பின் படுக்கைக்குச் சென்றான். மனிதக் குரங்கின் கையில் ஒரு வாளைக் கொடுத்து "இங்கு எவரும் வராமல் பார்த்துக் கொள்," என்று கூறிவிட்டுத் தான் படுத்துத் தூங்கினான். சிறிது நேரஞ்சென்றது. ஈ ஒன்று பறந்து வந்து அரசனுடைய தலைமீது உட்கார்ந்தது. உடனே மனிதக் குரங்கு அந்த ஈயைத் தன் கைவாளால்

ஓங்கி வெட்டிற்று. அதனால் அரசன் படுகாயம் அடைந்தான்.

மூடர் கூட்டுறவால் தீமை நேரிடும் என்பது பிறகு தான் அரசனுக்கு விளங்கியது.

"கற்றறியார் செய்யுங் கடுநட்புந் தாங்கூடி
உற்றழியுந் தீமைநிகழ் உள்ளதே—பொற்றொடீ
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
அன்றே மணமுடைய தாம்."

(உரை.) பொன் தொடீ - பொன்னாலாகிய வளையல்களை உடையவளே!, சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூ - போய்ப் படர்ந்த செழுமையாகிய கொடியின் மெல்லிய பூவானது, மலர்ந்த அன்றே மணம் உடையது ஆம் - மலர்ந்த அன்றைக்கு மட்டும் மணம் உடையதாக விளங்கிப் பிறகு கெட்டுப் போம்; அதுபோல, கற்று அறியார் செய்யும் கடுநட்பும் - கற்றறியாதவர்கள் செய்கின்ற மிகுதியாகிய நட்பும், தாம்கூடி உற்ற உழியும் - நீண்டநாள் தாங்கள் கூடியிருந்த விடத்தும், தீமை நிகழ்வே உள்ளது - தீங்கு விளைதலே உள்ளதாகும்.

(க - து.) அறிவற்றவர் நட்பு தொடக்கத்தில் நன்றாக இருப்பினும் பிறகு தீமையை விளைவிக்கும்.

## ௪௦. மூவேந்தரும் கபிலரும்

சேரசோழ பாண்டிய மன்னர்கள் அந் நாளில் பெரும்புகழுடன் விளங்கிக்கொண்டிருந்தார்கள். மூவருஞ் செல்வப் பெருக்கில் சிறந்த அரசர்கள். பாரி என்பவன் பிரான்மலை என வழங்கும் கொடுங்குன்றத்தில் ஆட்சி புரிந்துகொண்டிருந்த ஒரு குறுநில மன்னன். குறுநில மன்னனாயினும் கொடையிற் பெருநில மன்னர்களினும் சிறந்த புகழுடையவனாக விளங்கினான். அம் மன்னனை அருணகிரிநாதர் தமது திருப்புகழில் "பாரியான கொடைக கொண்டலே" என்று வியந்துள்ளார்.

கபிலர் என்பவர் அறிவிற் சிறந்த புலவராக விளங்கினார். பாரிக்கும் கபிலருக்கும் நட்பு ஏற்பட்டது. இருவரும் ஆருயிர் நண்பர்களாக விளங்கினார்கள். பாரி கபிலரைத் தன் வழிபடு கடவுளைப் போல் எண்ணி அவர் குறிப்பறிந்து ஒழுகிவந்தான். கபிலர் மொழிகளைப் பாரி மறுக்கமாட்டான். கபிலரிடத்திலே பாரி கொண்டிருந்த நன்மதிப்பை அக் காலத்தவர்கள் பார்த்து மிகுந்த வியப்படைந்தார்கள்.

பாரி கபிலரைப் பெருமைப் படுத்திப் போற்றியதைப்போல் வேறொருவரையும் மதிக்கவில்லை. மூவேந்தர்களும் பாரியின் மகளிர்களான அங்கவை, சங்கவை என்னும் பெயருடைய மங்கையர்களை மணத்தற்குப் பெருமுயற்சி செய்தார்கள். காரணம் அம் மங்கையர் அறிவும் அழகும் உடையராய் விளங்கியது

தான். ஆனால் பாரி மன்னன் மூவேந்தர்களையும் துரும்பாகக் கூட மதிக்கவில்லை. அவர்கள் தகுந்த அறிவு பெற்றவர்கள் அல்லர் என்று கூறி மறுத்து விட்டான்.

கபிலரைத் தெய்வமாக எண்ணி நடந்த பாரி மன்னன் மூவேந்தரையும் ஒரு சிறிதும் மதிக்காததைப் பார்த்துப் பலரும் மிகுந்த வியப்பை யடைந்தார்கள்.

" பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னும் அறிஞரைத்தாம் மற்றெவ்வார்-மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே அதுபுனையாக்
காணுங்கண் ஒக்குமோ காண்."

(உரை.) பொன்னே - திருமகளைப் போன்றவளே!, மின்னும் அணிபூணும் பிற உறுப்பு - விளங்குகின்ற அணிகலன்களை அணிந்து கொள்கின்ற கை காது முதலிய பிற உறுப்புக்கள், அது புனையாக் காணும் கண்.ஒக்குமோ - அதனை அணியாத பார்க்கின்ற கண்களுக்கு ஒப்பாகுமோ? ஒப்பாகா அதைப்போல், பொன் அணியும் வேந்தர் - பொன்னணிகளால் தம்மை அழகுபடுத்திக் கொள்ளும் அரசர்கள், புனையாப் பெருங் கல்வி மன்னும் அறிஞரை ஒவ்வார் - அதனை அணியாத மிகுந்த கல்வி யறிவுடைய புலவரை நிகர்த்த பெருமை யுடையவர்களாக மாட்டார்கள்.

(க - து.) அரசர்கள் புலவர்களுக்கு ஒப்பாக மாட்டார்கள்.

